# கம்பனும் உலகியல் அறிவும்




டாக்டர். ச. வே. சுப்பிரமணியன்

என்னை நன்றாக இறைவன் படைத்தனன்
தன்னை நன்றாகத் தமிழ் செய்யுமாறே


தமிழ்ப் பதிப்பகம்
33, திருமலைநகர் அனெக்ஸ்
பெருங்குடி
சென்னை—600 096.

# BIBLIOGRAPHICAL DATA


| | | |
|---|---|---|
| Title of the Book | — | Kambanum Ulakiyal Arivum |
| Author | — | Dr. S. V. SUBRAMANIAN<br>Director, International Institute of Tamil Studies. |
| Publisher | — | Tamil Pathippakam,<br>33, Tirumalai nagar annexe,<br>Perungudi, Madras 600 096. |
| Language | — | Tamil |
| Edition | — | First |
| Date of publication | — | 18-3-'81 |
| Paper Used | — | Sheshasayee—16.2. kg |
| Size of the Book | — | 21×14 cms. |
| Printing types used | — | 10, 12, 18. |
| No. of copies | — | 1000 |
| Number of pages | — | 158 |
| **Price** | — | Rs. 10=(Rupees Ten) |
| Printer | — | Novel Art Printers,<br>Madras—14: Phone 82731 |
| Binding | — | Card board |
| Artist | — | Eswari |
| Subject | — | Kamban's World Knowledge. |

# என்னுரை

இலக்கியங்கள் நம் வாழ்க்கையை வளப்படுத்துதற்கும், வளர்ச்சியடையச் செய்வதற்கும் துணை நிற்கவேண்டும் என்பது என்னுடைய கருத்து. அந்நிலையில் கம்பராமாயணம் நமக்குப் பலநிலைகளில் துணைபுரிகின்றது-மிகப்பேரிலக்கியம் - ‘இல்லாத எப்பொருளும் இல்லை’ என்று கூறும் அளவிற்குக் கம்பனின் பேரறிவை அதில் காண்கின்றோம்.

1980 பிப்ருவரி மாதம் 12 ம்தேதி ‘கம்பனும் உலகியல் அறிவும்’ என்ற தலைப்பில் சென்னை வானொலியில் ஒரு மணி நேரம் பேசினேன்-அப்பேச்சின் அடிப்படையில் பலவற்றைச் சேர்த்தும், பெருக்கியும், புதுக்கியும், செதுக்கியும் இந்நூலை அமைத்துள்ளேன்.

கம்பன் கண்ட உண்மை உலகும், காண விரும்பிய மேன்மையுலகும், கலை உலகும் இறை உலகும் இந்நூலில் முக்கியமாக இடம்பெறுகின்றன. கம்பனின் உலகியல் அறிவும், உலகில் எவ்வாறு வாழவேண்டும் என்பதைக் கற்பித்து நமக்கு அவன் தரும் உலகியல் அறிவையும் இந்நூலுள் காணலாம். இந்நூல் இனிது நிறைவேறியமைக்கு இறைவனுக்கு நன்றி செலுத்துகிறேன்.

தன் பெரும்பகுதி வாழ்நாட்களைக் கம்பனைத் தமிழகம் முழுவதும் பரப்பிவரும் கம்பன் அடிப்பொடி அவர்களுக்கு இந் நூலைக் காணிக்கை யாக்குவதில் நான் பெரிதும் மகிழ்கிறேன்.

இந்நூலினைச் சிறப்புற அச்சிட்டுத்தந்த நாவல் ஆர்ட் அச்சக உரிமையாளர் கவிஞர் நாரா. நாச்சியப்பன் அவர்களுக்கு என் அன்பு உரித்தாகுக.

சென்னை — அன்பன்

16-3-’81 — ச. வே. சுப்பிரமணியன்

# உள்ளே....

கம்பன் புகழ்பாடிக் கன்னித்தமிழ் வளர்க்கும்
கம்பன் அடிப்பொடி
(திரு. சா. கணேசன்)
திருவடிகளில் இந்நூலைப் படைக்கின்றேன்.

# கம்பன்

கம்பன், உலக மகா கவிஞன்; தமிழ்க் கவிச்சக்கரவர்த்தி; காப்பியக் கவி ஏறு; சந்தக் கவிக் கொண்டல்; கற்பனைக்கோர் கொள்கலம்; அணிகளுக்கோர் இருப்பிடம்; கலைகளுக்கோர் கவின்களம்; கருத்துக் குவியல்களின் களஞ்சியம்; அறிவுகட்கு அடைக்கலம்; உணர்வுகட்குப் புலப்பாடு; உலகியலுக்கு உறுதுணை; அன்பிற்கோர் ஆசான்; ஆற்றலுக்கு எடுத்துக் காட்டு; அறத்துக்கு அரண்; ஆசைக்கு எல்லை; நன்றிக்கு வித்து; எழுத்துக்கு உருவம்; சொல்லுக்கு அகராதி; பொருளுக்கு விளக்கம்; கவிதைக்கு உரைகல்; பண்பாட்டுக்குக் கண்ணாடி; படைப்பில் இறைவன்; வரையாது அளிப்பதில் வள்ளல்; புலவருக்கு வழிகாட்டி; கல்விக்கு ஒளி; இயலுக்கு இலக்கணம், இசைக்கு இன்னியம்; நாடகத்துக்கு மேடை; பண்புக்கு இலக்கியம்; புலமைக்கு அடையாளம் இன்பத்துக்கு; ஐம்புலன்; வடிவத்திற்கு வரைபடம்; வெளியீட்டிற்கு ஆதாரம்; அடக்கத் திற்கு நிறைகுடம்.

இவ்வாறு, புகழின் உறைவிடமாக அமைந்து, மக்களில் வேறுபட்டு, மாந்தரில் உயர்ந்து நின்றதால் இவன் மனிதனோ; தேவனோ என்ற ஐயம் நீக்குவதுபோல், 'கம்பன் என்றொரு மானிடன் வாழ்ந்ததும்' (சுயசரிதை 24) எனக் கூறுகின்றான் பாரதி. பின்னும், தமிழ் நாட்டின் கல்வித்தரத்துக்கு எடுத்துக் காட்டாய்க் கம்பன் துலங்குகின்றான் என்பதை,

கல்வி சிறந்த தமிழ்நாடு—புகழ்க்
கம்பன் பிறந்த தமிழ்நாடு (20:6)

எனப் புலப்படுத்துகின்றான். அவனது உலகளாவிய பெருங் கவித்துவத்தால் அவன் தமிழனாக மட்டும் நின்றுவிடாது உலகோனாக—உலகக் கவிஞருக்கே ஒரு மாதிரியாகத் திகழ்கின்றான் எனவும் புனைகின்றான்.

யாமறிந்த புலவரிலே கம்பனைப் போல்
வள்ளுவர்போல் இளங்கோவைப் போல்;
பூமிதனில் யாங்கணுமே பிறந்ததில்லை;
உண்மை வெறும் புகழ்ச்சியில்லை. (22:2)

இவ்வாறெல்லாம் பல்விதமாகப் போற்றப்படற்குக் கர்ண பரம்பரைக் கதைகளோ புலவர் புராணமோ காரணமன்று; நிலைத்த புகழுடைய இராமாயணத்தை இராமகாதையாகத் தமிழில் வடித்துத் தந்ததே காரணம். தேன் சொற்களால் அவனைப் புகழும் அடைகளுக்கெல்லாம் பிறப்பிடமான புனைவிடமான பருப்பொருள் நிலையான அக்காப்பியம் அவன் பெயராலேயே கம்பராமாயணம் என்று இன்று போற்றப் படுகின்றது.

இது, தமிழக் காப்பியம். சமயக் காப்பியம்.. வாழ்வியல். காப்பியம். மொழியால் தமிழாக இருந்தாலும் கதையாலும் கலையாலும் கருத்தாலும் உலகளாவி நிற்கின்ற காப்பியம். தெவிட்டாத தெள்ளமுது; நறுமணமுடைய பொற்பூ; காட்சிக்குக் கவின் பொழில்; செவிக்குத் தம்மக்கள் மழலை; ஊற்றுக்குத் தண்புனல்.

பொன்னின் சோதி போதின் நாற்றம் பொலிவே போல்
தென் உண் தேனின் தீம்சுவை செஞ்சொற் கவிஇன்பம் (502)

எனக் கம்பன் கூறும் இலக்கணத்திற்கு ஏற்ற இலக்கியம். தொட்டனைத்தூறும் மணற்கேணி; நவில்தொறும் நயம் பயப்பது; அறிதொறும் அறியாமை காணற்கேற்பப் பல் பொருள் வளமுடையது; வற்றாத நன்னீர்க்கடல்; தோண்டத் தோண்டக் குறையாத சுரங்கம்; வாழ்வின் பன்னிறங் காட்டும் படிகம்; மாறாத இளமையில் மாறிவரும் புதுமை கொள்ளும் இயற்கை; பெருகிவரும் புதுப்புனல்; ஆழங்கள் புலப்படுக்கும் தெளிந்த நீரோடை.

எழுத்துக்கு இடமாகவும், சொல்லுக்கு ஆக்கமாகவும், மொழிக்கு வளமாகவும், பொருளுக்குப் புலப்பாடாகவும் அமைந்த இக்கவிதை மாளிகை இப்பேருலகின் (macro-cosm) ஒரு

சிறுபடைப்பாக (micro-cosm) அமைகின்றது. ஒரு சிறுதுளி நீரில் பேரண்டங்கள் பிரதிபலிப்பதுபோல இப்படைப்பில் உலகம் புலப்படுகின்றது.

கம்பன் படைப்பு, ஒரு மொழியினருக்கோ இனத்தினருக்கோ நாட்டினருக்கோ தனியுரிமை யுடையதன்று; உலகம் முழுமைக்கும் பொதுவானது. இடத்தால் பரந்துநிற்கின்ற காப்பியம் காலத்தையும் வென்றமைந்து, எக்காலத்திற்கும் உரிய நடப்பியல் காப்பியமாகப் புலப்படுகின்றது. காலத்தைக் கடந்தமையும் அதன் தன்மை, கவிநயத்தால், கவிதை இன்பத் தால் மட்டுமன்றி, உலகியலோடு ஒட்டி-உறவாடி-இணைந்து உருவாகியதாலும் பொருந்தியுள்ளது.

பல்வித மனநிலையும் அறிவுநிலையும் உணர்வு நிலையும் உடையவர்களுக்குக் கம்பன் படைப்பு ஒருங்கிணைந்து விருந்தளிக்கின்றது. சிறுவருக்கு,அதிசயமும் அற்புதமும் நிறைந்த வீரக்கதை கூறுகின்றது. இளைஞருக்கு அறிவின் பரப்பை ஆற்றலின் எல்லையைப் புகல்கின்றது. முதியோருக்கு உள்ளுந் தொறும் புத்துணர்வு அளிக்கின்றது. பக்தனுக்கு இறைவனின் திரு அவதாரமான இராமன் இயல்பைப் புகன்று பேரின்பச்சுவை நல்குகின்றது. ஆடவருக்கு அறிவுரை கூறுகின்றது. பெண்ணுக்கு வழிகாட்டுகின்றது. பொதுவாக மக்கள் அனைவருக்கும் மறத்தை நீக்கி அறத்துடன், ஆன்றவிந்தடங்கிய கொள்கைச் சான்றோராக, மக்கட் பண்பு நிறைந்தோராக வாழும் வழியைப் போதிக்கின்றது. நல்லாரை, எச்சோதனை வரினும் நன்னெறி யினின்று விலகாது தளராது ஆழ்ந்த பற்றுடன் முன்னேறச் செய்கின்றது. அல்லாரை நன்னெறியின்பால் ஆற்றுப்படுத்து கின்றது. இவ்வாறு எப்பருவத்தினருக்கும் எப்பாலினருக்கும் எப்பண்பினருக்கும் ஏற்புடைப் பாங்குடன் பொருந்தியமை கின்றது கம்பன் தரும் இராமாயணம்.

இறையவதாரத்தின் மீவியல் நிலையை மட்டும் புனைந்து நின்றிருந்தானாயின் கவிஞனின் படைப்பு நிலைபெற்றிராது. வாழ்வியலை, உலகியலை விரவி, ஒன்றிலொன்று ஆழ்ந்து கலந்து, வேறுபடாது மயங்கி, இதனை ஒரு இயல்பியல்க் காப்பியமாக அமைத்துத் தந்தமை பற்றி, இது நீங்கா நிலைபேறு பெறுகின்றது. கதை கூறும் வெறும் பொழுது போக்கு இலக்கியமாக அமைக்காது, சமுதாயத்தின் பிரதிபலிப் பாக்கி, மக்களுக்குப் பயன்படும் உள்நிலை அமைத்து அளிக்

கின்றான். சமுதாயச் சீர்திருத்த வழிகாட்டியாக, பயன் கலையாகப் படைத்தளிக்கின்றான். 'அறம் வெல்லும் மறம் வீழும்' எனும் உலக இயல்பினை ஐயமற உறுதிப்படுத்து கின்றான்.

கற்பனைக் கவினால் கற்போரைக் கவரும் கவிஞர் சிலர். உலகியலைஉயிர்ப்பித்து உயர்வுபெறும் புலவரும் உளர். ஆனால், கம்பனோ இரண்டன் இணைவைத் தருகின்றான். கற்பனையின் சிகரத்தில் நின்று, சுவைஞரை மனத்தேரினில் அதன் உச்சிக்கே அழைத்து இன்புறுத்தும் அதே வேளையில் உலக இயற்கை யினையும் 'ஓவியரின் ஓவியம் புதுக்கினர்' எனும்படி ஒளியுடன் வெளிப்படுத்துகின்றான். உலகியலில் வேரூன்றிய இவனின் கற்பனைச்சோலை கற்றோரிதயத்தைக் களிப்புறச் செய் கின்றது.

வடமொழியில் மூவர் வகுத்த இராமன் கதையை, வான்மீகி அளித்ததன் அடிப்படையில் படைத்ததாகக் கம்பன் தன் காவியத்தைச் சுட்டினும் அது ஒரு முழுமையான புதுமைப் படைப்பாகவே அமைகின்றது. மொழிபெயர்ப்பாகவோ, மொழியாக்கமாகவோ அன்றி மறுபடைப்பாகக் காணப்படு கின்றது. தமிழனின் வாழ்வுக்கும், வழக்கத்துக்கும், பண் பாட்டுக்கும் மரபுக்கும், சொல்வழக்குக்கும், சூழ்நிலைக்கும் ஏற்ற ஆக்கஉருவம் கொள்கின்றது. கம்பனின் தனித்தன்மை தெரியும்படியும், சிறப்பு வெளிப்படும்படியும், நன்றியுணர்வும் அடக்கமும் புலப்படும்படியும் வடிவம் கொள்கின்றது.

# உலகியல் அறிவு

உலகம் இயற்கைப் பின்புலத்தையும் மனித வாழ்வையும் உட்கொண்டது. 'உலகம் என்பது உயர்ந்தோர் மேற்றே' என்பது பண்டைய எண்ணமாயினும், சிறப்பு நிலையிலும், இலக்கியக் கண்ணோட்டத்திலும் ஏற்புடையதாயினும், இயல்பு நிலையில் முழுமையுடையதல்ல. ஒளியும் இருளும், நன்மையும் தீமையும், ஒண்மையும் வெண்மையும், வண்மையும் வாடலும், ஏற்றமும் இறக்கமும், மலையும் மடுவும், வாழ்வும் தாழ்வும், பெருமையும் சிறுமையும், மேன்மையும் புன்மையும் உடையது, தான் உலகம்.

உலக இயல்பு என நினைக்கும்போது, இவ்வேறுபட்ட முரண்பட்ட இருவேறு நிலைகளின் இணைவாகப் புலப்படும், மக்கள் வாழ்வியலில் வெளிப்படுகின்றது. ஆற்றிவு காரணமாக விலங்கிலிருந்து வேறுபட்டுப் பகுத்தறிவால் உலகை ஆண்டு வளர்ச்சியும் முன்னேற்றங்களும் காண்கின்ற மனிதன் உலகியலில் முதன்மையான, மையமான இடம் வகிக்கின்றான். இம்மனிதன் இல்லாவிட்டால் உலகமும் இல்லை, உலகியலும் இல்லை. ஒரு வேளை வெறும் 'பூமி' மட்டும் இருக்கும்.

அறிவு ஜீவியான மனிதனின் வாழ்வியலிலிருந்து கிளைத்தெழுந்து ஆல்போல் தழைத்து அறுகுபோல் வேரூன்றியது அறிவியல். அறிவையே அறிவாற்றலையே தன் முதலீடாகக் கொண்டு மனிதன் வளர்ந்த வளர்ச்சிகள் அளவற்றன. மீன் சினையன்ன விதை புறந்தந்த பேராலமரம் போன்று மனித அறிவு வெளிப்படும் எல்லை அளவில்லாதது. உடற் பயன் பாட்டுக்கு அறிவியலை வளர்த்த மனிதன் உளப்பண்

பாட்டிற்குக் கலையியலை உருவாக்கினான். அவன் வாழ்வியலில் இவ்இரண்டும் இன்றியமையா இடம்பெற்றன. இவற்றின் இணைவில் உலகியல் புலப்படுகின்றது.

எல்லை விரிந்து, பரந்து, உலகில் காணப்படும் வாழ்வியல் நிலை அனைத்தும் உலகியல் என்று கூறுவதற்கு வாய்ப்பு அமைந்தாலும் அதனை முழுமையாக உணர்ந்துகொள்ளுதலோ, இவையிவை என வகுத்தலோ, இத்துணை எனவும் இத்தகையது எனவும் வரையறை செய்வதோ எளிதல்ல.

கண்ணோட்டத்து உள்ளது உலகியல் அஃதிலார்
உண்மை நிலக்குப் பொறை (572)

என வள்ளுவர் கூறுவதில், பருப்பொருள் நிலை குறிக்காது நுண்பொருளடிப்படையில் உலகியல் கருதப்பட்டதாகத் தோன்றுகின்றது. அறிவு காரணமாகவோ ஆற்றல் காரண மாகவோ மட்டுமன்றி அருள் காரணமாகவே உலகு இன்னும் நிலைக்கின்றது என்ற உணர்வில், இங்கு உலகியலின் அடிப்படை யாக, அருவ வேராக உருவமுடையவரின் கண்ணோட்டம் அமைகின்றது.

உலகத்து இயற்கை அறிந்து செயற்படல் பற்றி வள்ளுவர் உணர்த்தியபோதும் (637) அதனை அறிதலின் எளிமையின் மையைக் கம்பன் உணர்த்துகின்றான். அசோக வனத்தை அழித்துத் தன் ஆற்றல் புலப்படுத்தி நின்ற அனுமனைக் குரங்கெனக் கருதி நகைத்த அக்ககுமரனுக்குத் தேர்ப்பாகன் கூறிய உரையில் இவ்எண்ணம் அமைகின்றது.

இன்னதாம் என்னல் ஆமோ உலகியல், இகழல் அம்மா (5689)

முன்பின் பார்த்திராத ஒன்றை, ஒருவரை எவ்வித முன்னறி வும் இல்லாத நிலையில், முற்றிலும் உணர்தலோ பார்த்த உடனேயே இயல்பை முழுமையாக அறிதலோ இயலாதது போல, உலகில் நடைபெறுவனவற்றையும், நடைபெறக் கூடிய வற்றையும், 'இவற்றால் இவைதான் நடக்கும்' என வரையறுத்துக் கூறமுடியாது. எண்ணங்களின் வரையறைக்கு முற்றிலும் மாறுபட்டதாகவோ, அன்றிச் சற்றேனும் தொடர்பு குன்றிய தாகவோ அமைய வாய்ப்பு உண்டு. எதிர்பாராத வேளையில்-சூழலில், எதிர்பாராதனவற்றிடமிருந்து, எதிர்பாராத செயல்கள்-வெளியீடுகள் தோன்றலாம், நிகழாதது நிகழலாம் எனபது பற்றி,

உலகியலை அறுதியிட இயலாது என்று கவிஞர் கருதுகின்றார் போலும்.

மாண்ட கணவனின் மார்பில் விழுந்து அரற்றும் மண்டோதரியின் கூற்றிலும், 'ஆர் ஆனார் உலகியற்கை அறிதக்கார்' (9945) என மனத்துக்கு முழுமையாக அகப்படாத உலகியல்பு சுட்டப்படுகின்றது. நிகழ்வதை அறுதியிட முடியாத, வருவதை முன் உணரமுடியாத உலகியலின் காலக்கோட்பாட்டினைக் கம்பன் இங்கு அமைக்கின்றான் எனத் தோன்றுகின்றது.

உலகியல் இத்தன்மைத்து என்ற வரையறை அமைக்க இயலாமை பற்றியே போலும், இலக்குவன் விலக்கவும், இராமனும் சீதையும் மாயமாரீசனான பொன்மானை,

இம்மான் இந்நிலத்தினில் இல்லை எனா
எம்மான் இதனைச் சிறிது எண்ணல் செயான் (3286)

எனும் கவிஞர் வாக்கிற்கேற்ப, உண்மை என எண்ணி, அதன் அடிப்படையில் உலகியல் பற்றிய ஒரு பொது எண்ணத்திற்கும் வருகின்றனர்.

நில்லா உலகின்நிலை நேர்மையினால்
வல்லாரும் உணர்ந்திலர்; மன் உயிர்தாம்
பல்ஆயிரகோடி பரந்துளவால்
இல்லாதன இல்லை (3289)

உலகின் நிலை, உயர்பண்பாட்டைச் சார்ந்தது எனும் எண்ணம், சீதையை வெட்டச் சென்ற இராவணனை மகோதரன் தடுத்துக் கூறும் இடத்தில் புலப்படுகின்றது.

நிலத்து இயல்பு அன்று; வானின் நெறிஅன்று; நீதிஅன்று;
தலத்து இயல்பு அன்று; மேலோர் தருமமேல்அதுவும் அன்று (9244)

இவ்வாறு பலநிலையில், பல்வகைக் கோணத்தில் அணுகப்படும் உலகியலைக் கம்பனில் காண்பதற்கு வாய்ப்பாகச் சில பல நுண்மையும் அருவமுமான, பருமையும் உருவமும் கொண்ட வரையறைக்குள் அடக்கி விளங்கிக் கொள்ளலாம். உலக மக்கள் அனைவருக்கும் பொருந்தக்கூடிய பொதுவான இயல்புகளை, பண்புகளை, நீதிகளை, வழக்கங்களை, வாழ்க்கை முறைகளை அதில் புலப்படும் நம்பிக்கைகளை உலகியல் என்பதோடு, உலகப் பொருள்பற்றிய பொது அறிவுகளையும் அதனைச் சார்ந்ததாகக் கொள்ளலாம்.

# கம்பனும் உலகியல் அறிவும்

உலகம் யாவையும் தாம் உளவாக்கலும்
நிலை பெறுத்தலும் நீக்கலும் நீங்கலா
அலகுஇலா விளையாட்டு உடையார் அவர்
தலைவர் அன்னவர்க்கே சரண் நாங்களே (1)

'உலகம்' எனும் காப்பியத் தொடக்கத்திலேயே கம்பனின் உலகளாவிய பார்வையின் தெளிந்த தோற்றம் அமைந்து விடுகின்றது. பழங்கதை யொன்றனைக் கருவாகக்கொண்டு காப்பியம் படைத்தபோதும் நடைமுறை வாழ்வியலை, எண்ணற்ற உலகியல் கூறுகளை உட்பொதிந்து அமைத்தமையால் அப்படைப்பு ஒரு இயங்கும் நிகழ் உலகமாகவே அமைந்துள்ளது.

கம்பன் தன் காப்பியத்தில் பல இடங்களிலும் உலகியலைப் புலப்படுத்துகின்றான். அவன் எடுத்த கதையிலும் உலகியல் உண்டு. நல்லாட்சி-குழந்தை இன்மை பற்றிப் பெற்றோர் உறும் வருத்தம்-பெற்றோருக்கு அடங்கிய குழந்தைகள்-மாற்றாந் தாயின் மனநிலை-காமத்தின் இழிநிலை-தன்னுயிரை அளிக்கும் அன்பு-இனம் கடந்த அருள்-விருந்தோம்பலின் ஈடில்லா இன்பம் வரையாத உதவி-தன்னலமே நோக்கமான இழிதகவு-வஞ்சம் பொய்-போர்-அழிவு-அறத்தின் வெற்றி என விரித்துக்கொண்டே செல்லலாம்.

கதையின் வாயிலாக உலகியலைப் புலப்படுத்துவதுடன் அமைந்துவிடாது இன்னும் பல்வகை வெளியீட்டு நிலைகளில் அதனைப் படைத்தளிக்கின்றான். இயல்பு உரைத்தல் வாயிலாக உலகியல் தரப்படுகின்றது; புனைந்துரை வாயிலாக-மிகுத்து மொழிதல் வழியாக உலகியல் அமைக்கப்படுகின்றது. வழிப்

படுத்தல்-நெறிப்படுத்தல் வாயிலாகவும் உலகியல் புலப்படுகின்றது; கடிந்துரைத்தல் வழியாகவும் உலகியல் வெளிப்படுகின்றது. பாத்திரக் கூற்றாகவும் கவிஞரின் நேரடி வாய்மொழியாகவும் உலகியல் எண்ணங்கள் தரப்படுகின்றன. விலக்குதலும் வேண்டுதலுமான அறிவுரை நிலைகளிலும் இதனைக் காணலாம். பாத்திரங்களின் பண்பு நிலையிலும், பல்வகை வருணனையிலும் கூட இதனைப் பார்க்கலாம். தொட்டவிடமெங்கும், பார்த்த விடம் எங்கும் உலகியல் எண்ணங்கள் நிறைந்தமைவதால் இவ் இராமாயணத்தைப் பக்திக் காப்பியம் என்பதுடன் அமைந்து விடாது உலகியல் காப்பியம் எனச் சிறப்பிக்கலாம்.

கவிஞன் நேரடிக் கூற்றாக உலகியல் எண்ணங்களைத் தரும் போதும், வெளிப்படையாக மட்டும் கூறாது வருணனை வாயிலாகவும் அளிக்கின்றார். கதை கூறும் போக்கில் அங்கங்கே தம்மை வெளிப்படுத்தும் காப்பியக் கவிஞரின் பொது இயல்பு கம்பனிடமும் அமைகின்றது. ஐயுறவு நீங்கிப் பரதனை உணர்ந்து, குகன், 'ஆயிரம் இராமர் நின் கேழ் ஆவரோ' (2337) எனப் புகழும் உணர்ச்சிமிக்க அன்பு குமிழியிட்டுப் பெருகும் சூழலில் கம்பன் தன்னை வெளிப்படுத்துகின்றான். 'ஆர் அவற்கு அன்பு இலாதார், நினைவு அரும் குணம்கொடு அன்றோ இராமன் மேல் நிமிர்ந்த காதல்' (2339) எனும் கவிஞனின் நேரடிக் கூற்றான வியப்புரையில் அன்பும் உயர்பண்பும் நிறைந்த உலகியல் வெளிப்படுகின்றது.

வருணனையில் உலகியல் பெரும்பாலும் உவமை வாயிலாகப் புலப்படுகின்றது எனலாம். சேது பந்தனத்தின் போது மலைகளும் மரங்களும் கடலில் மூழ்கும் காட்சி, சில உலகியல் எண்ணங்களைக் கவிஞர் மனத்தில் தோற்றுவித்ததால் அதனை அவன் உவமையாக இணைத்துக் காப்பியத்தில் பொருத்துகின்றான்.

பழுமரம் பறிக்க பறவைக் குலம்
தழுவி நின்று ஒருவன் தனித் தாங்குவான்
விழுதலும் புகல் வேற்று இடம் இன்மையால்
அழுது அரற்றும் கிளை என ஆனவால் (6729)

வேறு பற்றுக்கோடு இல்லாது, புரந்தவன் மரணத்தால் நிலை குலைந்து கலங்கும் இயல்புலகியலின் பரிதாபமான காட்சியை இங்கு அமைக்கின்றான் புலவன்.

இயல்பான வருணனைக் காட்சியிலும்,கவிஞன் தான் கண்ட- அறிந்த உலகியல் பற்றிய கருத்துகளையும் கோட்பாடுகளையும் அமைக்கின்றான். பெண்டிர் இயல்பு பற்றிப் பல சூழலில் பலவிதமாகக் கம்பன் பேசுகின்றான். பொதுப்பெண்டிரை இழித்துக் கூறியது ஒருபுறமாக, கற்புடை மகளிரின் இயல்பையும் பண்பையும் சிறப்பித்து மொழிதல் மறுபுறத்தில் அமைகின்றது. கணவனிடம் பெற்ற அன்பை- நெருக்கத்தை, நெஞ்சம் நிறைந்து வழிந்த அதன் நினைவால், மற்றொருத்தியிடம்- தன் தோழியிடம் கூற நினைத்தலும், பேச நாணலுமாக எதையோ தொடங்கி ஏதோ பேசி நிற்கும் இயல்புக்காட்சியைக் கம்பன் உண்டாட்டுப்படலத்தில் படைப்பது பெண்ணியல்பைப் புலப்படுத்துகின்றது.

ஊறு பேர் அன்பினாள் ஒருத்தி, தன்உயிர்
மாறு இலாக் காதலன் செயலை, மற்றுஒரு
நாறுபூங் கோதைபால் நவில நாணுவாள்;
வேறுவேறு உறசில மொழி விளம்பினாள் (1008)

இவ்வாறு இயல்புக்காட்சிகளின் மூலமாக உலகியலைப் படைத்து அளிப்பதுடன், மிகுத்துரைக்கும் உயர்வுநவிற்சிப் புனைவுகள் வாயிலாகவும் கம்பன் உலகியலைக் காட்டுகின்றான். இயற்கைக் காட்சிகள் பலவற்றைக் காப்பியக் களனில் அமைக் கின்றான் புலவன். அங்கெல்லாம் இயல்பான இயற்கையை அவ்வாறே படைக்காது, பல்வகையாகப் புதுக்கியும், அழகுறுத்தி யும், இணைத்தும், வண்ணங்களால் இழைத்தும், வடிவங்களால் பொருத்தியும், சூழலால் சிறப்புறுத்தியும் கவின் காட்சி யாக்குகின்றான்.

சடையப்ப வள்ளலின் கொடையாதரவிலும் அன்பு நிழலிலும் மனநிறைவும் இன்பமும் பொருந்திய வாழ்க்கை பெற்ற கவிஞன், உலகியலின் அவ் இன்றியமையாக் கொடை வண்மையைத் தான் புனைந்த இயற்கையிலும் போற்றுகின்றான். கொடுப்பாரும் புரப்பாரும் இன்றி அறிவுக் கொழுந்தும் ஆற்றலுடைக் கவிதையியற்றலும் கரிந்து அழிந்த இளங் கவிஞரின் காட்சி ஒருபக்கமாக, கேட்காதே, விரும்பி வரையாது கொடுத்த வள்ளல் இயல்பு மறுபுறமாக அவன் புனைவை அழகுறுத்துகின்றன. கிட்கிந்தா காண்ட கார்காலப் படல இயற்கைப்புனைவில் மகிழ்ந்து அளிக்கும் வள்ளலின் உலகியலைக் காண்கின்றான் கவிஞன்.

நல்நெடுங் காந்தள்போதில், நறைவிரி கடுக்கை மென்பூ
துன்னிய கோபத்தோடும் தோன்றிய தோற்றம்—தும்பி
இன்னிசை முரல்வ நோக்கி இருநிலமகள் கைஏந்தி
பொன்னொடும் காசை நீட்டிக் கொடுப்பதே போன்றது
அன்றே (4178)

கவிஞர் வருணனை வாயிலாக இவ்வாறெல்லாம் உலகியலைக் காட்டுவதுடன் தான் படைக்கும் பாத்திரங்கள் வழியும் உலகியலைப் புலப்படுத்தும் இயல்பினனாக அமைகின்றான் நல்ல பாத்திரங்களும் தீய பாத்திரங்களும் நன்மையும் தீமையுமாக அமைந்த உலகியலையே வெளிப்படுத்துகின்றன. தீய மக்கட் கூட்டத்தினரிடையேயும் ஓரிரு நல்லவர் அமையும் வாய்ப்பு உண்மையை வீடணனும், திரிசடையும் காட்டுகின்றனர். முன் பின் எவ்விதத் தொடர்பு இல்லாதவரிடமிருந்தும் அன்பும் பண்பும் கலந்த உதவி புலப்படும் உலக இயல்பைக் குகனும், சுக்கிரீவனும் பிறரும் காட்டுகின்றனர். தன்னலமே நோக்கமாகிச் சூழ்ச்சியில் ஈடுபடும் மக்களின் இயல்பு நிலையைக் கைகேயி, சூர்ப்பணகை போன்றோரிடம் பார்க்கின்றோம். அன்புடையோருக்காக எதிர்நோக்கிக் காத்திருத்தலைச் சபரி வாயிலாக அறிகின்றோம். இவ்வாறு, கம்பனில் எங்கும் பாத்திரங்கள் பல உலகியல் பண்பு காட்டி அமைகின்றன.

கவிஞரின் நேரடிக் கூற்றில் உலகியல் வெளிப்பட்டது போன்றே, பாத்திரக் கூற்றாகவும் வாழ்வியல் எண்ணங்கள் வெளிப்படுத்தப் படுகின்றன. கவிஞரே கதைமாந்தர் வாயிலாக உலகியல் கருத்துகளைப் புலப்படுத்துவதாகவும் இதனைக் கொள்ளலாம். இராமனைப் பஞ்சவடியில் கண்டு காமுற்ற சூர்ப்பணகையின் சொற்களில்கூட உலகியலைப் பொருத்து கின்றான் கம்பன். காமுறினும் மகளிர் தாமே தம் அன்பை நுவலுதல் இல்லை எனும் உலகியல்நெறி இவள் பேச்சில் தரப்படுகின்றது.

தாம்உறு காமத் தன்மை தாங்களே உரைப்பது என்பது
ஆம்எனல் ஆவது அன்றால், அருங்குல மகளிர்க்கு அம்மா
(2776)

பாத்திரத்தின் இயல்பான கூற்றாக அன்றி, ஒரு நோக்கமோ குறிக்கோளோ பற்றி எழுந்த அறிவுரையிலும் உலகியல் சுட்டப்படல் மற்றொரு நிலையாகும். ஒரு குறிப்பிட்ட சூழலில்

அல்லது தேவை ஏற்படுமிடத்து சிறியோருக்குப் பெரியோரும், இளையவருக்கு முதியவரும், புதியவருக்குப் பட்டறிவுடையவரும் அறிவுரை கூறுதலே உலகியல்தான். அவ் அறிவுறுத்தலும் அறிவியல்பற்றியும், வாழ்வியல் தொடர்புடனும் அமையுமிடத்து உலகியல் முற்றிலும் பொருந்துகின்றது.

தயரதன் விரும்பியதற்கேற்ப, அடுத்தநாள் முடி சூட்டுக்கு இராமனைத் தயார்செய்வது போன்று வசிட்டன் அவனுக்குப் பல உறுதிப் பொருண்மைகளைக் கூறுகின்றான். அரசியலும், அறவியலும், உலகியலும், உண்மையியலும் விரவிய அறிவுரைகள் இங்கு அமைகின்றன. உலகனைத்துக்கும் பொதுவான, பெருமையான, புறந்தள்ளத்தகாத அன்பினைப் பற்றி முனிவர் மன்னன் மகனுக்குக் கூறும் அறிவுரை, உலகியலின் முழுமையைப் புலப்படுத்தும் சிறு துளியாக அமைகின்றது. வள்ளுவன் அன்பு பற்றி எழுப்பிய அறக்குரலின் எதிரொலியாக இது தோற்றம் கொள்கின்றது.

என்பு தோல் உடையார்க்கும் இலார்க்கும் தம்
வன் பகைப்புலன் மாசு அற மாய்ப்பது என்
முன்பு பின்பு இன்றி, மூஉலகத்தினும்
அன்பின் நல்லது ஓர் ஆக்கம் உண்டாகுமோ (1422)

நல்லவனுக்கு நல்லவர் கூறும் நல்லறிவுரையாக இது அமைகின்றது. கடிந்துரைத்தலும், விலக்குதலும், வேண்டுதலாகவும் இத்தகு அறிவுரைகள் அமையலாம். அத்தன்மையனவான சூழலிலும் உலகியல் எண்ணங்கள் வெளிப்பட வாய்ப்புண்டு. இராவணன் செயல்சுட்டி அவன் தம்பியர் கூறும் அறிவுரையில் இந்நிலைகள் அமைகின்றன. 'வேறு ஒரு குலத்தோன் தேவியை நயந்து சிறைவைத்த செயல் நன்றோ, (6119) எனக் கும்பகருணன் கடிதலும், 'கிளையொடு மடியாது அசைவுஇல் கற்பின் அவ் அணங்கை விட்டருளுதி' (6169) என வீடணன் வேண்டலும், 'சீதையை விடுதி ஆயின் தீரும் இத் தீமை' (6827) என மாலியவான் விலக்கலும் உலகியலின் பிறர்மனை நயவாமை தொடர்பாக அமைகின்றன.

மாரீசன் இராவணனுக்குக் கூறும் புத்திமதிகளிலும் இத்தகு இயல்புடைய உலகியல் கருத்துகள் பொருந்துகின்றன. அறவியல் தத்துவங்களாகவே அவை அமைந்துவிடுகின்றன எனலாம். 'நெஞ்சம் தருக்கினர் கெடுவர்' என்றும், 'செருக்குநர்த் தீர்த்தும்

என்பார் தம்மின் ஆர் செருக்கார்' (3267) என்றும், 'நன்மையும் தீமை அன்றே நாசம் வந்து உற்றபோது' (3268) எனவும் வரும் சொற்கள் கவிஞன் உலகியலைக் கூர்ந்து அறிந்த பாங்கினையே புலப்படுத்துகின்றன எனின் அது மிகையன்று.

இவ்வாறு அறிவுரை கூறும் சூழலில் மட்டுமன்றி மற்றொருவர் முன்னாக, தான் எடுத்த குறிக்கோள் பற்றி வஞ்சினம் உரைக்கும்போது உலகியல் பற்றிய எண்ணற்ற சிந்தனைகள் எழுவதைப் பரதன் சூளுரை காட்டுகின்றது 2199-2217). தீயதென அச்சமுதாயத்தினர் கருதிய இழிவுகளின் பட்டியலாகவே இது அமைந்துவிடுகின்றது. பொய்க்கரி கூறுதல், போருக்கு அஞ்சுதல், கன்று இறக்கும் வண்ணம் பால் கறந்து உண்ணுதல், தாய் பசியில் உழலத் தான் உண்ணுதல், நன்றி மறக்கும் நயனில் நாவினன் ஆதல், நறை பருகுதல், களவினில் பொருந்துதல் எனச் சமுதாயத்தில் ஒரு வீரனிடம் பொருந்தக் கூடாதனவான பல இயல்புகள் சுட்டப்படுகின்றன.

இவ்வாறு, பல இடங்களில், பல சூழலில், கம்பனின் நேரடிக் கூற்றாகவும், உவமை வாயிலாகவும், இயல்பு வருணனையாகவும், கற்பனைக் காட்சி வழியாகவும், கதைநிலையிலும், பாத்திரப் பண்பு நிலையிலும், கதைமாந்தர் கூற்றாகவும், அறிவுரையிலும், சூளுரையிலும் வெளிப்படும் உலகியல் எண்ணங்கள் பல நிலையில் பகுத்தும் வகுத்தும் ஆயத்தக்கன.

கம்பன் காவியத்தில் இருவகையான உலகியலைக் காண்கின்றோம். ஒன்று இயல்பு உலகியல்; மற்றொன்று கற்பனை உலகியல். இவற்றுள் முதல் வகை, அவன் உணர்ந்து கண்டது மற்றது காண விழைந்து கற்பித்துக் கொண்டது. முதல்வகை, நன்மையும் தீமையும் கலந்த இயற்கையான இன்றும் நாம் காணும் 'நிலைத்த' உலகு; பின்னதோ எக்குறையு மில்லாத எல்லா நிறைவுகளும் உள்ள இலட்சியப் படைப்பு உலகு.

இயல்புலகியலை, எண்ணம்-சொல்-செயலாலான வாழ்வியல் அமைக்கின்றது. இவ் வாழ்வியல் உலகம், உணர்வு நிலையில் கலையியலையும், அறிவு நிலையில் அறிவியலையும் இன்றியமையா இரு கூறுகளாகக் கொண்டது. கலையியல் உலகு, வாழ்க்கையின் புறநிலைகட்குரிய பயன்பாட்டுக் கலைகளையும் அகநிலைகட்குரிய இன்பக் கலைகளையும் பெற்று அமைகின்றது.

உடல் வாழ்வுக்கும், உள வாழ்வுக்கும் அப்பாற்பட்டு உயிர் வாழ்வியல் என நினைக்கும்போது தத்துவமும் மறுமையும்

இணைந்த இறையியல் உலகு உருவாகின்றது. மண்ணில் வேரூன்றிய உடல்வாழ்வுக்கும், வானில் பறக்கும் பட்டம் போன்ற உளவாழ்வுக்கும் மாறுபட்டு, காற்றாகவும், ஒளியாகவும், மேகமாகவும் நிற்கும் உயிர்வாழ்வு இறையியல் உலகாக வெளிப்படுகின்றது எனலாம்.

பல பகுதிகள் பிரிவின்றி இணைந்த முழுமையான உலகியலை உணரக் கம்பனின் பாடப்பகுதிகள் உதவுகின்றன.

# இலட்சிய உலகியல்

காப்பியக் கதையில் பல இடங்களிலும் இயல்பு உலகியலைக் காட்டிய கம்பன், கதைத் தொடக்கத்திற்கு முன் அமையும் காப்பியப் படலங்களில் தான் கற்பனையில் கண்ட இலட்சிய உலகினைப் படைத்து அளிக்கின்றான். இலக்கியல் உலகைப் படைக்கும் நோக்கே இயல்பு உலகியல் பற்றிய ஆழ்ந்த சிந்தனை களைப் பல உலக அறிஞருக்கு அளித்துள்ளது. நன்மையும் நிம்மதியும் நிலைபேறும் உடைய ஒரு இல்லா உலகை இருப்ப தாகப் புனைந்து, இருக்கவேண்டுமென விரும்பி 'உடோபியா' (மூர்) எனவும் 'எரவன்'(சாமுவல் பட்லர்) எனவும் 'கற்பனையூர்' (பாரதி) எனவும் பிற பல அறிஞர்கள் கண்டது போன்ற ஒரு நிலை கம்பனிடம் அமைகின்றது.

உண்மை உலகுக்கும் கற்பனை உலகுக்கும் மிகுந்த வேறுபாடு அமைகின்றது. உண்மை உலகு இருப்பதைக் காட்டுகின்றது; இயல்பானதைக் காட்டுகின்றது; என்றும் உள்ளதைத் தரு கின்றது; இன்றும் காண்பதைத் தருகின்றது. வாழ்வியலின் இரு பக்கத்தையும் வெளிப்படுத்துகின்றது. எதையும் மறைக்காது உள்ளதை உள்ளபடி அளிக்கின்றது. ஆயின் கற்பனை உலகோ இதினின்றும் முற்றிலும் மாறுபட்ட மேன்மையுற்ற குறைவற்ற களங்கமற்ற காட்சியொன்றையே படைக்கின்றது. நல்லதைக் காட்டுகின்றது; சிறந்ததையும் உயர்ந்ததையும் படைக்கின்றது. இலட்சிய வாழ்வியலைப் புலப்படுத்துகின்றது. இங்கு எந்தக் குறையும் குறைவும் இல்லை; எல்லாம் நிறைவு மட்டுமே.

கம்பன் தனது இலட்சிய உலகைக் கோசலை நாட்டிலும், அயோத்தி நகரிலும் படைக்க முயல்கின்றான். காப்பியத்தின் பிற பகுதிகளில் இயல்புலகமாகத் தென்படுகின்ற நிலப்பரப்பும்

நாடும் நகரும், நாட்டு நரகப்படலங்களில் இலட்சியப்படுத்தப் படுகின்றன. இயற்கையின் பொருள் வளத்திலும், மக்களின் பண்பு நலத்திலும் இலட்சிய உலகை வேண்டிய கம்பன், கதை புலப்படுத்தும் உலகுக்கு மாறாகவும் முரணாகவும், நமக்கு முன்னோடியாகவும் வழிகாட்டியாகவும் இதனைப் படைக் கின்றான்.

இங்கு இலட்சிய உலகாகக் காட்டப்படுவது, 'இல்லாத'தே தவிர 'இயலாதது' அன்று. ஒவ்வொரு தனிமனிதனும் தன்னைச் செப்பம் செய்யும்போது, தற்காதல் கொண்டொழுகிப் பிறனை அழிப்பதை விட்டுவிடும்போது, பொதுநலமே கருதி அன்பில் பிணைந்து வாழும்போது, இவ் இலட்சிய உலகும் இயன்றதாகி விடலாம். உலகம் சீராகவேண்டும் எனும் பரந்த எண்ணமே கவிஞருக்கு இவ் இலட்சிய உலகச் சிந்தனையை அளிக்கின்றது.

'உலைவு இலா நலம் கூடு கோசலம் என்னும் கோது இலா நாடு' (92) எனவும் 'நெறியின் புறம் செலாக் கோசலம்' (12) எனவும் எதிர்மறையில் இலட்சிய நாட்டைச் சுட்டிய கம்பர், அக் குறிப்பாலேயே, காப்பியத்தில் அதன் உண்மை நிலை வேறாக அமையும் என உணர்த்துகின்றார் எனத் தோன்றுகின்றது. முதற் படலங்களில் காட்டப்பட்ட இவ் இலட்சிய நாடு, காம வயத்தனான மன்னனாலும், மாற்றாந்தாயுணர்வு கொண்ட அரசியாலும், பழிவாங்கும் மனங்கொண்ட சேடியாலும், நெறி யின் புறஞ்சென்று, உலைவுற்று, காப்பியத் தலைவனுக்குக் கேடிழைத்துக் கோதுடையதாக மாறியதை இரண்டாம் காண்டம் முடியுமிடத்துக் காணலாம்.

இலட்சிய உலகுக்கும் நடப்பியலுலகுக்கும் இடையமைந்த இப்பெரு முரணைக் காப்பியம் எங்கும் காணமுடிகின்றது. மருதம் வீற்றிருக்கும் மாமருத வேலியை, வளமுடை உலகக் காட்சியைக் கம்பன் படைக்கின்றான்.

வரம்பு எலாம் முத்தம்; தத்தும்
மடைஎலாம் பணிலம்; மாநீர்க்
குரம்பு எலாம் செம்பொன்; மேதிக்
குழிஎலாம் கழுநீர்க்கொள்ளை;
பரம்பு எலாம் பவளம், சாலிப்
பரப்பு எலாம் அன்னம்; பாங்கர்
கரம்பு எலாம் செந்தேன்; சந்தக்
காஎலாம் களி வண்டுசட்டம் (33)

இத்தகு வளநிறைவுக்கு மிகவும் வேறுபட்ட, வறண்ட இயற்கை உலகியலின் புலப்பாடாகப் போலும் பிறிதொரு சூழலில் அமைகின்றது. அங்கநாடு நீங்கி விசுவாமித்திரருடன் செல்லும் இராம இலக்குவர் கடந்த பாலைநிலத் தோற்றமும் தன்மையும், கேடு இலா வளப் பரு மருத வைப்பு (363) தாடகையால் பாலையானதைக் காட்டுகின்றன.

பருதி வானவன் நிலம் பசை அறப் பருகுவான்
விருது மேற்கொண்டு உலாம் வேனிலே அல்லது ஓர்
இருது வேறு இன்மையால்; எரிசுடர்க் கடவுளும்
கருதின்,வேம் உள்ளமும்; காணின்வேம் நயனமும் (343)

மருதநில மாட்சியைக் காட்சிப்படுத்தப் பல இன்னோசைகளை, நல்லோசைகளை, இன்ப ஓசைகளைக் கம்பன் நாட்டுப்படலத்தில் காட்டுகின்றான். பல்வகை ஓசையால் பொலிவுபெற்ற கோசலம் தந்த இக்காட்சி,

ஆறுபாய் அரவம், மள்ளர் ஆலைபாய் அமலை, ஆலைச்
சாறுபாய் ஓதை, வேலைச் சங்கின் வாய்ப் பொங்கும் ஓசை
ஏறுபாய் தமரம், நீரில் எருமைபாய் துழனி, இன்ன
மாறுமாறு ஆகி, தம்மில் மயங்கும்-மா மருத வேலி (34)

மந்தரையின் சூழ்ச்சியாலும் கைகேயியின் சூழ்வினையாலும் நேரெதிராக-அழுகை ஓசையாக-கண்ணீர்க் கதறலாக-புலம்பல் ஒலியாக மாற்றம் கொள்கின்றது. இராமனைத் தன் ஆவியாகக் கொண்ட தசரதன் புலம்பினான் (1529-35; 1659-70); கோசலை அரற்றுகின்றாள் (1634-38; 1673-74); சுமித்திரை துன்பக் கடலுக்கு எல்லை உணராது புண் தங்கு நெஞ்சத்தினளாய்ப் படிமேல் புரண்டாள் (1744); அரசன் தேவியர் அழுதனர் (1779-80); நகரமே அழுதது எனக் கூறும் வண்ணம் அயோத்தி மக்களும் உயிரினமும் கலங்கின; இயற்கை அழுதது (1697-1715).

கிள்ளையொடு பூவைஅழுத; கிளர் மாடத்து
உள்உறையும் பூசைஅழுத; உரு அறியாப்
பிள்ளை அழுத; பெரியோரை என்சொல்ல
வள்ளல் வனம் புகுவான் என்று உரைத்த மாற்றத்தால் (1701)

ஆவும்அழுத; அதன்கன்று அழுத; அன்று அலர்ந்த
பூவும்அழுத; புனல்புள் அழுத; கள் ஒழுகும்

காவும்அழுத; களிறுஅழுத; கால் வயப் போர்
மாவும்அழுத; அம்மன்னவனை மானவே (1703)

இம்முதல் நிகழ்ச்சிக்குப்பின் அவலக் குரலும் அழுகை ஓசையும் இராமாயணக் களம் அனைத்தும் ஒலிக்கின்ற ஒரு இயல்பு நிலையைக் காண்கின்றோம். தயரதன் இறப்பு, பரதனின் துன்பம், சடாயுவின் மரணம், சீதை—ராமன் பிரிவுத் துயரம், அனுமன் அழித்த அசோகவனத்தில் எழுந்த அரக்கியர் ஓலம், அவன் வாலில் கொளுவிய தீயுண்ட இலங்கையின் குழப்பம், அனுமனுடனும் இராமஇலக்குவர் தலைமையில் வந்த குரக்குப் படையுடனும் பொருதழிந்த அரக்கர் காரணமாக இலங்கையில் எழுந்த ஒலி, அக்ககுமரன் இந்திரசித்து போன்ற மக்களுக்காக இராவணன் சிந்திய கண்ணீர், கணவன் இறப்பப் புலம்பி வீழ்ந்து உயிர்விட்ட மண்டோதரியின் காட்சி என அழுகை பரந்து ஒலிக்கின்றது. இயல்பு உலகுக்கும் கற்பனை உலகுக்கும் இடையே, இணைய முடியாத அளவுக்கு அமைந்த பெரும்பிளவை இவை காட்டுகின்றன.

அமைதியும் நிம்மதியும் நிறைந்த வாழ்வுக்கு எடுத்துக் காட்டுப்போல அனைத்தும் உறங்கும் காட்சியொன்றைக் கோசல நாட்டில் படைக்கின்றான் கம்பன். கலக்கங்களும் தொல்லைகளும் இல்லாத வாழ்வின் வரைபடமாக இது அமைகின்றது.

நீரிடை உறங்கும் சங்கம்; நிழலிடை உறங்கும் மேதி;
தாரிடை உறங்கும் வண்டு; தாமரை உறங்கும் செய்யாள்;
தூரிடை உறங்கும் ஆமை; துறையிடை உறங்கும் இப்பி;
போரிடை உறங்கும் அன்னம்;பொழிலிடைஉறங்கும்தோகை (37)

ஆயின் காப்பியம் காட்டும் இயல்புலகில் நிம்மதியின்மையும் அமைதியின்மையும் பரக்கக் காணப்படுகின்றது. மிதிலையில், கன்னி மாடத்தில் கண்ட சீதைபால் தன் நெஞ்சிழந்த இராமன் 'துயர் ஆழி நெடுங்கடலுள் துயில்கின்றான்' (633). பரதன் நாடாளவும் இராமன் காடேகவும் இருவரம் அளித்து மன்னவன் துயர் ஆகத்திடை மூழ்கி மூர்ச்சிக்க, கைகேயி செயல் முற்றி ஊறாநின்ற சிந்தையினளாகத் துயில்வுறுகின்றாள் (1539). சூர்ப்பணகை சூழ்ச்சியால் காமவயத்தனான இராவணன் துயிலற்று வெம்மையால் வெதும்புகின்றான். துயிலும் அரக்கியரிடையே உறக்கமின்றி நாயகன் வரவு நோக்கியிருக்கின்றாள்

சீதை. அனுமன் வாயிலாகத் தரப்படும் சுந்தர காண்டக் காட்சியில் பெரும்பாலும் அரக்க வீரர் அறிமுகம் அனைத்தும் துயிலும் நிலையிலேயே அமைக்கப்படல். சிந்திக்கத் தக்கது. இன்பத் துயிலாகத் தோன்றினாலும் பெருந்துயிலுக்கு, இறுதி உறக்கத்துக்கும் நேராக அவர்கள் செல்லுவது இங்கு உட்குறிக்கப்படுகின்றது போலும். இலட்சிய உலகின் உறங்குதலும் இவ்வுறங்குதலும் வேறுபடுகின்றன. இராமனுக்கும் சீதைக்கும் துணையாகி, பதினான்கு ஆண்டுக்காலம் உறங்காது காத்த இலக்குவனின் இயல்புலகிலிருந்து வேறுபட்ட இலட்சியத்தைக் கண்டபோதும், அது உலகியலுக்கு அப்பாற்படுகின்றது. கோசல நாட்டு இயற்கைவளம் காட்டும் நிம்மதியான உறக்கநிலை, காப்பியம் காட்டும் இயல்புலகில் நிறைவின்றியே அமைகின்றது.

போர்களால் நிறைந்த காப்பியக் களனுக்கு வேறாக, பல்லுயிர்கள் அழியும் போர் இல்லாத நிலையில், இலட்சிய உலகு அமைக்கப்படுகின்றது. பகைமை காரணமாகவும் பொறையின்மை காரணமாகவும் சினந்து சீறிப் போர்மேற் செல்லும் இயல்பு நிலைக்கு மாறாக, பொழுதுபோக்குக்காகப் போலியாகப் பொருது மகிழும் பாங்கினைக் கோசலமாகிய படைப்புலகில் காண்கின்றோம்.

கறுப்புறு மனமும், கண்ணில் சிவப்புறு சூட்டும் காட்டி
உறுப்புறு படையின் தாக்கி, உறுபகை இன்றிச் சீறி
வெறுப்புஇல களிப்பின் வெம்போர் மதுகைய, வீரவாழ்க்கை
மறுப்பட ஆவி பேணா வாரணம் பொருத்து வாரும் (47)

இங்கமையும் 'களிப்பின் வெம்போ'ருக்கு மாறாக, தாடகை வதை முதல் பொருதலும் அழிவும் படிப்படியே மிக்கு இராவண வதத்தில் உச்சியை அடைகின்றன. போர் இன்றேல் காப்பியம் இல்லை எனக் கூறுமளவிற்குக் காப்பியக்களம் போர்க்களமாகவே காட்சியளிக்கின்றது.

நறுமணப் புகைகளால் சூழப்பட்டு நுகர்வுக்கும் இன்பம் தருகின்றது இலட்சிய உலகம்.

அகில் இடும்புகை அட்டில் இடும்புகை
நகல்இன் ஆலை நறும்புகை, நான்மறை
புகலும் வேள்வியில் பூம்புகையோடு அளாய்
முகிலின் விம்மி முயங்கின எங்கணும் (72)

ஆயின், இயல்புலகில் அழிவுக்குப் புலப்பாடாகி, நெருப்புடன் இணைந்து அமைகின்றது கரும்புகை. இலங்கை எரியூட்டுப் படலம் அனுமனின் ஆற்றலை வெளிப்படுத்தும் வகையிலும், பகைவர் கற்பின்கனலியை உணர்ந்துகொள்ள வாய்ப்பாகவும் பல்லுயிர் நீக்கும் புகைக் காட்சியை அளிக்கின்றது.

மிக்க வெம்புகை விழுங்கலின் வெள்ளியங் கிரியும்
ஒக்க வெற்பினோடு; அன்னமும் காக்கையின் உருவ
பக்க வேலையின் படியது பாற்கடல்; முடிவில்
திக்கயங்களும் கயங்களும் வேற்றுமை தெரியா (5974)

புகை மண்டிய இத்தீக்காட்சி, அறக்கதிரோனான இராமனால் அரக்கர் முடி அழிய முன்னோடியான தீ நிமித்தம் ஆகின்றது. ஆக்கப் புகையான அட்டிலின் புகையும், மறுமைப் பயன் தரும் வேள்விப் புகையும், நுகர்வின்பம் அளிக்கும் அகிலின் புகையும் இலட்சிய உலகக் காட்சியைத் தர ஒறுக்கும் புகை, அழிக்கும் புகை இயல்புலகில் முரணாகத் தரப்படுகின்றது.

திருமண முதலிய வேள்வியும் இன்பத் திருவிழாக்களும் நிறைந்த மகிழ்ச்சிமிக்க சூழலைச் கோசலைக் காட்சியாகப் படைக்கின்றான் கம்பன்.

கூறு பாடலும் சூழலின் பாடலும்
வேறு வேறு நின்று இசைக்கும் வீதிவாய்
ஆறும் ஆறும் வந்து எதிர்ந்த ஆம் என
சாறும் வேள்வியும் தலை மயங்குமே (87)

மைந்தரை அளிக்கும் வேள்வியைத் தயரதன் கலைக்கோட்டு முனியுடன் செய்தலும், மிதிலைப் பொன்னைக் கருஞாயிறொப்பான் கைபிடித்த மணக்காட்சியும் இலட்சிய உலகும் இயல்புலகும் இணைவதைக் காட்டுகின்றன. ஆயின், விழவு நிறைந்த படைப்புலகுக்கு இன்மையின்மையையே காப்பியக் கதை காட்டும் வாழ்வியலில் காண்கின்றோம். முடிசூட்டு விழா மங்கலத் தொடக்கம் கொண்ட தோற்றம் காட்டி, மன்னன் வானுல கெய்தவும் மகன் காடுலகாளவும் வழிவகுத்து மாறுபடுகின்றது. இராமன் அயோத்தியை நீங்கிய பதினான்கு ஆண்டுகள் மணவேள்வியும் விழவும் இழந்த நாட்டையே காட்டுகின்றன. காப்பிய நிறைவு தரும் திருமுடிசூட்டு விழவுக்களம், இவ் இடைப்பட்ட ஆண்டுகளின் நிலையைத் தருகின்றது.

இறைப் பெருஞ் செல்வம் நீத்த ஏழ்இரண்டு ஆண்டும், யாரும்
உறைப்பு இலர் ஆதலானே, வேறு இருந்து ஒழிந்த மின்னார்

பிறைக் கொழுந்து அனைய நெற்றிப் பெய்வளை
மகளிர், மெய்யை
மறைத்தனர் பூணின், மைந்தர் உயிர்க்கு ஒரு மறுக்கம்
தோன்ற (10303)

எல்லா நன்மைகளும், எல்லா நிறைவுகளுமுடைய உலகைக் காண விழைந்த கம்பன், ஏற்றத் தாழ்வுகளும் வேறுபாடுகளு மற்ற ஒரு நிலையைக் கற்பனை செய்கின்றான். நன்மை எனவும் தீமை எனவும் இருவேறு எல்லைகள் இருந்தால் தானே வேறுபாடு அமையும் எனக் கருதிப் போலும், இத்தகு 'எல்லை'கள் இல்லாத உலகைக் கற்பிக்கின்றான். முழுவதும் தீமையாகவோ முழுமையும் நன்மையாகவோ அன்றி, இரண்டும் விரவிக் கலந்த இயல் புலகிலிருந்து இலட்சிய உலகை உயர்த்துக்காட்ட இதனை அவன் ஒரு உத்தியாகக் கொள்கின்றான் போலும்.

கூற்றம் இல்லை, ஓர் குற்றம் இலாமையால்,
சீற்றம் இல்லை, தம் சிந்தையின் செம்மையால்;
ஆற்றல் நல்அறம் அல்லது இலாமையால்
ஏற்றம் அல்லது இழிதகவு இல்லையே (70)

இங்கமையும் இலட்சிய உலக விளக்கத்திலிருந்து மிகவும்- முற்றிலும் மாறுபட்டு அமைகின்றது நடப்பியல் உலகம். கூற்றமும், குற்றமும் இல்லாதது அவன் விழைந்த உலகம். ஆனால் கண்ட உலகமோ குற்றங்களும், அதனால் தரப்படும் தண்டனைகளும் உயிரழிவும் உடையது. வரம்பெற்ற கைகேயியைத் தாயென எண்ணிவந்த இராமன்முன் அவளைக் கூற்றாகக் காண்கின்றான் கம்பன்- 'தாய் என நினைவான் முன்னே கூற்று எனத் தமியள் வந்தாள்' (1597); 'இரும்பினால் இயன்ற நெஞ்சின் கொன்று உழல் கூற்றம் என்னும் பெயர் இன்றிக் கொடுமை பூண்டாள்' (1599); 'பெண்டிரில் கூற்றம் அன்னாள்' (1573). இராவணன் இழைத்த தீமைபோல் வந்த கூனியாலும் (மந்தரைக் கூற்றம். 2297) அவளால் சிந்தைதிரிந்து கூற்றாகிய கைகேயியாலும் தயரதன் உயிரிழப்பு நேர்ந்தபோதும் அவன் முன்பு இழைத்த குற்றம் ஒன்றால் இக் கூற்று வந்ததைக் காப்பியக்கதை புலப்படுத்துகின்றது. யானை என எண்ணி எய்த அம்பு முனிமகன் உயிரை உண்ட குற்றம் மன்னனுக்குக் கூற்றாயிற்று (1677-92). காப்பியம் முழுமையிலும் இக்குற்றமும் கூற்றமும் ஒன்றையொன்று தொடர்கின்றன. தம்பி மனைவியைக் கொண்ட பிழையால் வாலி கூற்றுக்கு இரையாகின்றான்;

மாற்றான் மனைவியை நயந்த காரணத்தால் இராவணன் உயிரிழக்கின்றான். அரக்கர்பால் நிகழ்ந்த அறமில் செயல்களால் குற்றங்களால் கூற்றுவனே இளைக்கும்படி உயிரழிவு பெருகிய தண்டனையாகின்றது.

ஒருகாலையின் உலகத்துஉறும் உயிர்யாவையும் உண்ண
வருகாலனும் அவன்தூதரும் நமன்தானும் அவ்வரைப்பின்
இருகால் உடையவர் யாவரும் திரிந்தார் இளைத்திருந்தார்
அருகு ஆயிரம் உயிர்கொண்டுதம் ஆறுஏகலர், அயர்த்தார்

இவ்வாறே, செம்மையில்லாச் சிந்தையும் சீற்றமும் இயல் புலகில் இருப்பதுபோலக் கம்பன் கண்ட கதையுலகிலும் இருக்கின்றது. சிந்தையில் செம்மையுடையவரும் சீறினர்; சிந்தை திரிந்தவரும் சினந்தனர்; சீர்மை யற்றவரும் வெகுண்டனர். 'சினமென்னும் சேர்ந்தாரைக் கொல்லி' என வள்ளுவர் விளக்கிய—விலக்கிய சினநெருப்பு அடக்கப்படாத விடத்து அவரையும் சார்ந்தோரையும் அழிக்கின்றது. சிந்தைச் செம்மையில்லாக் கொடுமனக் கூனி சீறுகின்றாள், இராமனுக்கு அரசு எனக் கேட்டதும்-

தோன்றிய கூனியும் துடிக்கும் நெஞ்சினாள்
ஊன்றிய வெகுளியாள் உளைக்கும் உள்ளத்தாள்
கான்று எரி நயனத்தாள் கதிக்கும் சொல்லினாள்
மூன்று உலகினுக்கும் ஓர் இடுக்கண் மூட்டுவாள் (449)

இராமனுக்கு முடிசூட்டெனக் கேட்டு மாலையளித்த கைகேயியிடமும் மந்தரை தன் சிந்தையின் செம்மையின்மையால் சினக்கின்றாள், 'தெழித்தனள்; உரப்பினள்; சிறுகண் தீ உக விழித்தனள்; வைதனள்; வெய்து உயிர்த்தனள்' (1459).

கைகேயியின் வரத்தால் இராமன் அரசாட்சியிழந்து கானில் தவமேற்கொள்ளச் செல்வான் எனக் கேட்ட சிந்தையில் செம்மையுடைய இலக்குவன், 'யாவராலும் மூட்டாத காலக் கடைத்தீ என மூண்டு' எழுகின்றான் (1716).

கண்ணின் கடைத் தீ உக, நெற்றியில் கற்றை நாற
விண்ணில் சுடரும் சுடர் தோன்ற, மெய்ந்நீர் விரிப்ப,
உள்நிற்கும் உயிர்ப்பு எனும் ஊதை பிறக்க, நின்ற
அண்ணல் பெரியோன் தனது ஆதியின் மூர்த்தி ஒத்தான்
(1717)

தீமை கண்டு சீறும் இச்சீற்றம் காப்பிய உலகின் பலசூழலிலும் வெளிப்படுகின்றது. பரதன் வருகையை ஐயுற்ற குகன், 'நகை மிக, கண்கள் தீ நாற, நாசியில் புகைஉற', புருவப்போர்வில் குனிப்புறச் சீறுகின்றான் (2308-15); இலக்குவன் சீற்றமுற்று, போர்க்கோலம் பூண்டு, வீரஉரை பகர்கின்றான் (2400-15). சுக்கிரீவனின் மனைவியிழந்த நிலைகேட்டு இராமன் சினக்கின்றான் (3853). 'சேயரிக் குவளை முத்தம் சிந்துபு சீறிப்' போகின்ற சீதையை மாயமானில் மயங்கியவிடத்துக் காண்கின்றோம் (3303). இறக்கும் மாரீசனின் அழைப்பைத் தவறாக உணர்ந்த சீதை இலக்குவனிடம் கூறும் கடுஞ்சொல் நிலையில், 'எடுத்த சீற்றத்தள், கொன்றன்ன இன்னலள், கொதிக்கும் உள்ளத்தள்...வன் தறுகண்ணினள்'—ஆக அமைகின்றாள் (3330). குறித்த காலத்தில் சுக்கிரீவன் தென்படாத போதும் (4270-76), வருணன் வராதபோதும் இராமன் சீறுகின்றான் (6603).

சிந்தையில் செம்மையுடையவளாக இருந்தபோது கூனியிடம் சீறிய கைகேயி (1469-73), சிந்தை திரிந்தபோது தீயவை யாவினும் சிறந்த தீயாள் (1504) ஆகி, கொடுஞ்சொல் பேசுகின்றாள்.

அறக் கொண்டலான இராமனும், அவன் பக்கத்தினரும் மட்டுமன்றி இராவணனும், இந்திரசித்தும், இன்னும் அரக்கர் கூட்டமும் சீற்றத்தின் பல வெளிப்பாடுகட்கு இடனாயும் களனாயும் அமைகின்றனர். இவ்வாறு வெகுளிச் சுவை காப்பியம் எங்கும் இடையறாது கலந்து அமைகின்றது.

இழிதகவு இல்லாத ஏற்றம் உடைய இலட்சிய உலகில், ஆற்றலுடைய நல்அறம் ஆள்வதைச் சுட்டுகின்றான் கம்பன். தன் கருத்துக்கு முடிவாகவும் கொள்கைக்கு நிறைவாகவும் மறம் அழிய, பாவம் தோற்க, அறம் ஆற்றல் கொண்டெழுந்து வெற்றி கொண்டதைக் காப்பியத்தில் காட்டுகின்றான். அறமும் மறமும் முரணி, தேவரும் அரக்கரும் மாறுபட்டு, நன்மையும் தீமையும் பொருது அழியும் காப்பியக் களத்தில் இயல்புலகின் உண்மை நிலையைக் காண்கின்றான் கம்பன். அறமும், நல் ஆற்றலும், ஏற்றமும் மட்டுமன்றி இழிதகவும் காப்பியத்தில் அமைகின்றதாக உணர்த்தும் கதைப்பகுதிகளில் உலகின் இயற்கைத் தன்மை பிரதிபலிக்கின்றது. தன் நிலை தாழ்ந்து உயிரிழந்தான் தயரதன்; உயர் நிலையிலிருந்து இழிந்து அடியாள் சொற் கேட்டுத் தலைவனை இழந்து உலகோரால் வெறுக்கப்பட்டாள்

கைகேயி; பேராண்மை இழந்து காம வயத்தனாகி சீதையைச் சிறை வைத்து முதல் நாள் போரில் படையிழந்து பின் உற்றாரும் உடன் பிறந்தாரும் உயிரனைய புதல்வரும் இழந்து உயிரும் இழந்தான் இராவணன். தலையின் இழிந்த மயிராக, நிலையினிழிந்தனர் இவர் எனக் காட்டுகின்றான் கம்பன்.

உளப்பண்புகளால் உயர்ந்த உலகை விழைந்த கம்பன் கோசல வருணனையில் அதனை ஆக்குகின்றான்.

வண்மை இல்லை, ஓர் வறுமை இன்மையால்
திண்மை இல்லை, ஓர் செறுநர் இன்மையால்
உண்மை இல்லை, பொய் உரை இலாமையால்
வெண்மை இல்லை பல கேள்வி மேவலால் (84)

பொருள் வளம் குன்றாத நாட்டில் எல்லா வளங்களும் செழித்து இருக்க வாய்ப்புண்டு. ஆயின் பகை காரணமாக அச்சமும் போரும் ஏற்படின் அந்நாடு வளம் இழந்து அலைக்கழியும். புற நலமும் பொருள் நலமும் இருந்தாலும் உள்நலமான உண்மை இல்லாத நாடு நயக்கத் தகுந்தது அல்ல. உள்ளும் புறமும் நலம் நிறைந்திருப்பினும் கல்வியாலும் கேள்வியாலும் அறிவு சிறக்க வளரும்போதே மனம் வளர்ந்து பரந்து, அறிவியலும் அறவியலும் தழைத்து உலகம் முன்னேற முடியும்; அறிவும் கல்வியும் உடையான்கண் அரசும் பின்செல்லும்; உலகே அவனுக்கு ஆட்படும். எனவே கம்பன் தன் படைப்புலகில் கல்வியின் நிறைவைக் காட்டுகின்றான் (166).

ஏகம் முதல் கல்வி முளைத்து எழுந்து, எண் இல் கேள்வி
ஆகும் முதல் திண் பணை போக்கி அருந் தவத்தின்
சாகம் தழைத்து அன்பு அரும்பி தருமம் மலர்ந்து
போகங் கனி ஒன்று பழுத்தது போலும் அன்றே (167)

எனக் கல்விக்கு முதன்மை அளிக்கின்றான்.

படைப்புலகின் இக்குறிக்கோள் நிலையும் நோக்க நிறைவேற்றமும் இயல்புலகில் அமையவில்லை. வண்மையும் வறுமையுமான ஈரெல்லையும் இல்லா உலகையே கவிஞன் விழைந்த போதும் கொடையும் இரப்பும் இணைந்த நிலையையே காப்பிய உலகில் காண்கின்றோம். வறுமை காரணமாக ஒருவேளை சடையப்ப வள்ளலின் வண்மை நிழலில் ஒதுங்கிய கம்பனுக்கு இத்தகு பொதுஉடைமை-சமத்துவ உணர்வு ஏற்பட்டிருக்கலாம், கேட்டுப் பெறும் அளவிற்கு இல்லாமை பரந்தும், குறிப்

புணர்ந்து வரையாது வழங்கும் அளவிற்குக் கொடை விரிந்தும் அமைகின்றது காப்பியக் களம்.

வறுமையற்ற உலகைப் படைக்கும்போதும், இயல்பு உலகிலிருந்து முற்றிலும் புடைபெயர முடியாத கம்பன், அங்கும் ஈகையையும் ஏற்றலையும் காட்டிவிடுகின்றான். 'யாதும் கொள்வார் இலாமைக் கொடுப்பார்களும் இல்லை மாதோ' (165) என வியந்தவனே, அயோத்தி நகர மக்களின் பொழுது போக்காக இரந்தவர்க்குக் கொடுத்தலைக் காட்டுகின்றான்.

பழங்கணோடு இரந்தவர் பரிவு தீர்தர
வழங்கவும் பொழுதுபோம் சிலர்க்கு அம்மா நகர் (159)

கோசல நாட்டின் வளம் சுட்டி உழவர் வாழ்வின் உயர்வு கூறுமிடத்தும், 'நெல் குவைகள்... வறியவர்க்கு உதவி மிக்க, விருந்து உண மனையின் உய்ப்பார்' (51) என இதனைக் கூறுகின்றான். தன்னை யறியாதே கற்பனை உலகிலிருந்து இறங்கி இயல்பு லகுக்கு வந்து விட்டபோதும், இலட்சிய நோக்கைக் கைவிடாது,

எல்லாரும் எல்லாப் பெருஞ் செல்வமும் எய்தலாலே
இல்லாரும் இல்லை; உடையார்களும் இல்லை மாதோ (166)

என க்காட்டுகின்றான். இருப்பது போதும் என்ற நிறைவும் நிம்மதியும் இன்றி, இன்னும் வேண்டும் என்ற பேராசையின் உந்துதலை முடிசூட்டு விழாவில் மறையவரிடம் கம்பன் காட்டுவது இதற்கு எதிர்நிலையாக அமைகின்றது.

மறையவர் தங்கட்கு எல்லாம்
மணியொடு முத்தும் பொன்னும்
நிறைவளம் பெருகு பூவும்
சுரபியும் நிறைத்து மேல் மேல்
குறை இது என்று இரந்தோர்க்கு எல்லாம்
குறைவு அறக்கொடுத்து... (10346)

பொருள் வறுமை மட்டும் இங்குப் புலப்படத் தெரிந்தபோதும், அதன் அடிப்படையாக அமையும் மனவறுமையும் பண்புவறுமையும் கூட நுனித்து நோக்குவார்க்கு வெளிப்படுகின்றன. பொருள் வறுமையிலும் கொடியதான இவை மான வறுமையையும் காட்டுகின்றன. எனவே கம்பன் வறுமையின்மையைக் கற்பித்தபோது, புறவறுமை மட்டுமன்றி இத்தகு பல அக வறுமைகளையும் நினைத்திருக்கலாம். அன்பு வறுமை, அறிவு வறுமை, ஆற்றல் வறுமை, செயல் வறுமை, அற வறுமை எனப் பலவாறு இது பரந்து அமைகின்றது.

வண்மையும் வறுமையும் போன்று, வீரமும் பகையும் ஒன்றை யொன்று சார்ந்தே செல்கின்றன. வீரமிகுதி, ஒத்த பகையின் முன் நன்றே வெளிப்படுகின்றது. செறுநர் இல்லாமையால் திண்மையும் இல்லாத உலகைக் கவிஞன் வேண்டியபோதும், அவன் எதிர்பார்ப்புகளுக்கு மாறான, பகைவர் உள்ள நிலையும் அதனால் வீரம் புலப்படும் பாங்கும் காப்பியக் களனெங்கும் அமைகின்றன. புறவீரம் மட்டுமன்றி அகச்செம்மையும், திண்மைக்குக் காரணமாகவும் அடிப்படையாகவும் அமைகின்றன. பொறுமையும் பொறையுடைமையும் கூடத் திண்மையின் வெளிப்பாடுகள் தான். காப்பியத் தலைவனும், எதிர்த் தலைவனும் வீரத்தின், வெற்றியின், திண்மையின் அடையாளமாகவே அமைகின்றனர். அம் மூவுலகையும் ஆண்ட இராவணனைத் தன் வாலில் பற்றி அலைக்கழித்த வாலியும் திண்மையுடையவன்; மாற்றான் வலியைத் தன் வலியாக்கும் ஆற்றலினன். அறம் என உணர்ந்து, அரசனும் அண்ணனுமான இராவணனைப் பிரிந்து இராமன்பால் அடைக்கலம் பெற்ற வீடணனிடம் மனத்திண்மை புலப்படுகின்றது; மாற்றானே ஆயினும் அவன் பக்கலின் அறத்தைப் போற்றி, அண்ணனே ஆயினும் அவன் மறத்தைக் கடிந்து நல்லறிவுரை கூறினும்,

நீர்க்கோல வாழ்வை நச்சி
நெடிதுநாள் வளர்த்துப் பின்னைப்
போர்க் கோலம் செய்து விட்டாற்கு
உயிர் கொடாது அங்குப் போகேன் (7426)

எனத் தன் கொள்கையில் திண்மை காட்டுகின்றான் கும்பகருணன். எல்லோரும் மனம் தளர்ந்தபோது, தளரா முயற்சியனாகி அறத்தின் செல்வியைத் தேடிக் கண்டு, இலங்கையை அழித்தும், தலைவனுக்கு ஊறுநேரும் என்பதால் இராவணனைக் கொல்லாது அடங்கிய அனுமன் திண்மையின் ஆன்றவிந்தடங்கிய உருவமாகவே அமைகின்றான். பதினான்கு ஆண்டுகள் துயிலின்றிச் சோர்வின்றி ஒய்வின்றி ஐம்புலனும் அடக்கி அண்ணலுக்கு உறுதுணையாக இருந்த இலக்குவன் ஒரு வகையில் திண்ணியன் என்றால், தனக்குரிய அரசை ஆளாது, இராமன் திருவடி சூட்டி, அவன் வரவு காத்திருந்த பரதன் பிறிதொரு பாங்கில் திண்ணியனாகின்றான். ஆற்றல் மட்டுமன்றி அடக்கமும் திண்மையில் புலப்படுவதைக் கம்பனின் இக் காப்பிய உலகம் காட்டுகின்றது.

பகைவரும், பகைச் சூழலும் காப்பியம் எங்கும் அமைந்து இயல்புலகின் தன்மையை வெளிப்படுத்துகின்றன. அரக்கராகிய நேரடிச் செறுநர் மட்டுமன்றி, தாயும் அடித்தொழிலாட்டியும் கூட இராமனுக்குப் பகையாகின்றனர்; தாடகை போன்ற அரக்கியரும் பரசுராமர் போன்ற முனிவரும் கூட வலிந்து அவனை எதிர்க்கின்றனர்; சுக்கிரீவன் காரணமாக இராமன் வாலிபால் தானே பகை கொள்கின்றான். கதைத் தலைவனான இராமன் மட்டுமன்றிக் கதைமாந்தர் பலரும் இப்பகைச் சூழலில் பங்கேற்கின்றனர். இராமன் பக்கமும் அரக்கர் பக்கமு மாக இவர்கள் பிரிந்து அமைகின்றனர். வேள்வி காக்க முதலில் வில்லேந்திய இராகவன் கதை முடிவுவரை செறுநரை அழிப்பதில், முன் நிற்கின்றான். போர்முடிவுக்குக் காரணமான பகைகாப்பியக் களனெங்கும் தன் ஆட்சியைப் பரப்பியுள்ளது.

வண்மையும் வறுமையும், திண்மையும் பகைமையும் போன்று வாய்மையும் பொய்மையும் பிறிதோர் ஈரெல்லை கொள்வதனை யும் கம்பன் காட்டுகின்றான். பொய்யுரை இன்மையால் உண்மை யென்று ஒன்றை வேறுபடுத்திக் காணும் தேவையில்லாத கற்பனை உலகை அவன் காணும் வேட்கை யுடையவனாக அமைகின்றான். உண்மையும்-வாய்மையும்-மெய்மையும் சொல்லளவில் மட்டுமே வழங்கிய உலகைக் கண்டு மனம் அழிந்த கவிஞனின் எண்ண ஓட்டமாக இது அமை கின்றது எனலாம். 'பொய் இலா நிற்பின் நின்றன நீதி' (90) எனக் கவிஞன் நாட்டுச்சிறப்புச் சுட்டியபோதும் கதை யோட்டத் தில் உட்செல்லுமிடத்துச் சில பொய்மை நிலைகளைக் காட்டுகின்றான். பொய்யுரையும், பொய்ச் செய்கையும் ஏமாற்றும், போலி வேடங்களும், மறைவும், மறுத்தலும், மாயையும், இப்பொய்மையின் பல்வேறு வடிவநிலைகளை உலகியலில் காட்டுகின்றன.

இராமன்பால் காமுற்று, சீதை காரணமாகவே தன்னை ஏற்க மறுக்கிறான் என நினைந்து அவளைக் கவரும் முயற்சியில் உறுப்புக் குறைபட்ட சூர்ப்பணகை, தன் அண்ணன் அரக்க அரசன் இராவணனிடம பொய் சொல்லுகின்றாள். 'நீ புரிந்த குற்றம் யாது' என வினவிய அண்ணனிடம் உண்மை மறைத்து 'உனக்காக அவளைப் பற்ற முயன்றேன்' எனப் பொய் கூறுகின்றாள்,

அன்னவள் தன்னை நின்பால் உய்ப்பல் என்று எடுக்கலுற்ற
என்னை அவ்இராமன் தம்பி இடைப்புகுந்து இலங்கு வாளால்
முன்னை மூக்கு அரிந்து விட்டான்; முடிந்தது என்வாழ்வும்; உன்னின்
சொன்னபின் உயிரை நீப்பான் துணிந்தனென் எனச் சொன்னாள் (3147)

கரனிடமும் இதே பொய்யைத் தான் கூறினாள் (2881). தனக்குச் சாதகமாகத் திரித்துக்கூறும் இயல்புலகின் மானிடப்பண்பை இங்குச் சூர்ப்பணகை வழி உணர்த்திப் படைப்புலகின் தன்மையுடன் முரணிக் காட்டுகின்றான் கம்பன்.

தம் எண்ணம் நிறைவேற, நல்லவரைத் தம் பொய்ச் செய்கையால் மயங்கச் செய்து ஏமாற்றும் பொய்மையின், நன்மை போன்ற போலித்தோற்றத்தை, அரக்கரில் ஏற்றிக் காட்டி மனிதனின் 'அரக்கப் பொய்யை' வெளிச்சமிட்டுக் காட்டுகின்றான் கம்பன். மாயமானாகி நல்லோரை வழிதவற வைத்த மாரீசனும், துறவி வேடத்தில் வந்து தூயவளைச் சிறைப்படுத்திய இராவணனும், மாயா சனகனை ஆக்கி மாயவன்தேவியைச் சோதித்த அவ் அரக்கன் கோனும், மாயா சீதையைப் படைத்து, அழித்து அனுமன் மனத்தில் அவலம் நிறைத்த இந்திரசித்தும், அயோத்திக்குப் போர்மேல் செல்வதாகப் பொய்கூறி, நிகும்பலை யாகத்திற்கு மறைவாகப் புகுந்த அம்மேகநாதனும், பொய்மையின் மறு உருவங்களாக-மாற்று வடிவங்களாக-மாறா உருவங்களாக-மறையா வடிவங்களாக அமைகின்றனர்.

இத்தகு பொய்மைகள் இருக்குமளவும் உண்மையென்றொன்று பொருது வெல்லுமோ அழியுமோ எனக் கவன்ற கம்பனின் படைப்புலகில், இயல்புலகின் பொய்மை முழுமையாக இல்லாது அமைகின்றது.

பல கல்வி ஓம்பலால் வெண்மை இல்லாத உலகைப் படைக்கின்றான் கம்பன்.

கல்லாது நிற்பார் பிறர் இன்மையின் கல்வி முற்ற
வல்லாரும் இல்லை அவை வல்லார் அல்லாரும் இல்லை (166)

எனும் இலட்சிய நிலையை விழைவினால் கற்பிக்கின்றான். ஏட்டுக்கல்வி மட்டுமன்றி உலகியல் அறிவும் இங்குக் கருதப் பட்டிருக்கலாம். கற்பவை, கசடறக் கற்றதுடன் அமைந்து விடலால் பயனில்லை, அதற்கேற்ப வாழ்வியலில் நிற்க வேண்டும்

என அறிவுறுத்திய முப்பால் முனியின் கருத்தினைக் கம்பனும் கொண்டான் எனலாம். கல்வி, அறிவு வளர்ச்சி தருவதுடன் நின்றுவிடாது, பண்பு வளர்ச்சிக்கும், மனச் செம்மைக்கும் வழிவகுத்துப் பயன்படவேண்டும் எனும் விருப்பத்தின் வெளிப்பாட்டினை ஒரு அறநூல் ஆசிரியனிடம் காண்பதற்கேற்பக் கம்பனிலும் காண்கின்றோம். உலகத்தோடு ஒட்ட ஒழுகும் கல்வியே பிறபல கல்வியிலும் உயர்ந்தமைகின்றதால் இலட்சிய உலகில் அறவழி நின்று, விருந்தோம்பியமையும், வாழ்வுக்கு உயிரன்ன அமையும் பெண்மையைக் காட்டுகின்றார்.

பெருந்தடங்கண் பிறை நுதலார்க்கு எலாம்
பொருந்து செல்வமும் கல்வியும் பூத்தலால்
வருந்தி வந்தவர்க்கு ஈதலும், வைகலும்
விருந்தும் அன்றி விளைவன யாவையே (67)

ஆயின், காப்பியக்களனில் கல்விக்கு எதிரான வெண்மையும் அறிவின்மையும் காட்டப்படுவது, இலட்சிய உலகுக்கு வேறான இயல்புலகின் பிரதிபலிப்பே போலும். மாற்றான் ஆற்றல் அறியாமையாலும், சூழலைத் தெளிவாக உணராமையாலும், தவறான கருத்துக் கொண்டதாலும் காப்பிய மாந்தரிடையே இவ் வெண்மை வெளிப்படுகின்றது. பாம்பணைப் பள்ளி கொண்டானும், பாற்கடல் எழுந்தாளும் பெற்ற அவதாரமாக இராமனும் சீதையும் காட்டப்பட்டபோதும், இயல்பான மனிதப் பிறவிகளாகவும் பல்லிடங்களில் வெளிப்படுவதால் போலும் அவரிடம் இவ்வெண்மையைத் தீட்டுகின்றான் கம்பன்.

முனிவரின் ஆற்றலும், எதிர்வரும் தீமையும், அறியாததால், இந்திரன் இழைத்த பழியை அகலிகைப் படலம் காட்டுகின்றது. வில் இயற்றியவர்க்கே சீதை என முடிவு எடுத்ததால் நங்கை மணமின்றியிருக்கின்றாள் எனத் தன் அறியாமையின் தோல்வியைச் சுட்டுகின்றான் சனகன் (666). இராமனின் ஆற்றலை முற்றிலும் உணராததால் அவனைத் தன் வில்வளைக்க அழைத்து, தன் தவ வலியை இழக்கின்றான் பரசுராமன் (1287-1302). கூனியின் சூழ்ச்சியால் அறிவிழந்த கைகேயி, இருவரம் பெறுவதன் வாயிலாக அனைத்தும் எளிதாகிவிடும் என்ற அறியாமையில் நிறைவு கொள்கின்றாள். மனைவியின் அன்பில் முழுநம்பிக்கை கொண்டு, அவள் உண்மை நிலை உணராமையால் தயரதன் தன் உயிரன்ன புதல்வனையும், தன் உயிரையும் இழக்கின்றான். அறியாமையால்,குகனும் இலக்குவனும் பரதனின்

வரவுகண்டு சீறுகின்றனர். இலக்குவன், இயல்பு கூறி விலக்கவும் இராமனும் சீதையும் மாய மானான மாரீசனை உணராது சூழ்ச்சிக்கு இரையாகின்றனர். நல்லதும் அல்லதும் பிரித்து உணரும் அறிவு இன்மை பற்றிப் போலும் வாலியும் இராவணனும் பிறன்மனை நயக்கின்றனர். அனுமனின் ஆற்றலை முழுமையாக உய்த்து உணராமையால் பல அரக்கரும் இராவணன் புதல்வன் அக்ககுமரனும் இலங்கையுடன் அழிகின்றனர். இருமனிதரும் குரக்குப் படையும் கொண்ட ஆற்றல் அறியாததால் இராவணன் பக்கத்தினரும் இறுதியில் அவனும் மடிகின்றனர். அறியாமையால் போலும் இராமன் சீதையைக் கடிந்துரைத்துத் தீப்புகச் செய் கின்றான். வெண்மையின் பல்வகைப் புலப்பாடுகள் இதன்கண் பொருந்துகின்றன.

நிறைவான உலகம் ஒன்றைப் படைக்கும் முயற்சியில் அச்சுறுத்தியும் அறிவுறுத்தியும் மக்களை செவ்வழியில் நிற்கச் செய்ய ஐவகை மன்றங்களைப் படைத்தார் இளங்கோவடிகள். கள்வர்களைக் காட்டித் தண்டிக்கும் பாங்கினை வெள்ளிடை மன்றத்தில் அவர் புலப்படுத்தியதற்குக் கள்வர் இல்லா நிறை நாட்டினைப் பற்றிய விழைவே காரணமாம். கம்பனும் தன் இலட்சிய உலகைப் படைக்கும்போது கள்ளாமை பற்றிய எண்ணம்கொள்கின்றான். 'கள்வார் இலாமைப் பொருள்காவலும் இல்லை' (165) என இங்கும் ஈரெல்லை சுட்டுகின்றான். கவர்தலும் காவலும் இல்லாத இலக்கியல் நிலை காப்பியக்கதையில் அமையாத பாங்கு இயல்பியல் பற்றியாகலாம். காவலில்லா இடத்தில் கவர்தல் அமைகின்றது; காவலுள்ள களத்தில் பாதுகாப்புப் பொருந்துகின்றது; பல்வகை இழப்பும் அத்துணைக் காவலின்மையைப் புலப்படுத்துகின்றன. ஐம்புலனும் காத் தொழுகாத நிலை தனிமனிதனுக்கு இழுக்கும் இழப்பும் தருகின்றது; புறக் காவலின்மை, உயிரிழப்பும் பொருளிழப்பும் தருகின்றது; அகக் காவலின்மையும் அழிவுக்கு வழிவகுக்கின்றது. இறைவனுக்கும்—அரசனுக்கும் காவலைத் தொழில்களுள் ஒன்றாக்கிய மனிதன், காவலில் ஈடுபட்டால் மட்டும் போதாது கவர்தலில் ஈடுபடாமலும் இருக்கவேண்டுமெனும் எதிர்பார்ப்பு அமைகின்றது.

தன்மனம் காவாமையால் அகலிகை கற்பு இழக்கின்றாள். கைகேயி வரம்கேட்டுக் கவர்ந்ததால் இராமன் தனக்குரிய முடி இழக்கின்றான். 'அல்லை ஆண்டு அமைந்த மேனி அழகனும் அவளும், (2344) துயிலும் படி வில்லை ஊன்றிய கையோடு காத்து

நின்ற இளவலை அயோத்தியா காண்டம் காட்டுகின்றது. பர்ணசாலை அமைத்து, அவர் இன்புற்றுத் தங்க தண்டக வனத்திலும் இலக்குவன் காவல் புரிந்ததனை ஆரணிய காண்டம் தருகின்றது. சீதையைக் கவர முயலும் விராதனிடமிருந்து, அவளை இராமனும் இலக்குவனும் காப்பாற்றுகின்றனர்; சூர்ப்பணகை அவளைக் கவர்ந்து செல்லும் நோக்கினளாய் நெருங்கியபோது, 'இந்து நோக்கிய நுதலியைக் காத்து அயல் இருண்ட கந்தம் நோக்கிய சோலையில் இருந்த' (2822) இளவல் அவளை உறுப்புக் குறை செய்து விரட்டுகின்றான்; மாயமான் காரணமாக இராம இலக்குவர் அகன்றதால், காவல் இழந்து, அரக்கனால் கவரப்படுகின்றாள்.

மதுரை மாநகருக்கு இளங்கோவடிகள் ஒரு காவல் தெய்வத்தை அமைத்தது போல இலங்கை மாநகருக்கும் காவல் தெய்வம் அமைந்ததைக் கம்பன் புலப்படுத்துகின்றான். இயல் புலகின் நாடுகளும் நகரமும் காட்டும் வீரர்காவல் இவற்றில் மீவியல்புப் படுத்தப்பட்டுள்ளதாக நினைக்கலாம். அனுமன் பாதம் இலங்கையில் படுமட்டும் காவலுடையதாக அமைந்த அந்நகர், இனிக் காவல் இழக்கும், பாதுகாப்பு இழக்கும், கவர்ந்து கொணர்ந்து வைத்த கற்பின் கனலியையும் இழக்கும் என்பதைச் சுட்டுவதுபோல், தெய்வ நீக்கத்தைக் காட்டுகின்றது. தனக்கு உரியதல்லாததை, பிறன் பொருளைக் கவர்ந்தும் காத்தும் வைத்தாலும் இறுதியில் அதனை இழக்கும் உலகியல் பாங்கினை இராமகதை உணர்த்துகின்றது.

இவ்வாறு, பல சூழலிலும், இயல்பியல் உலகின் குறைகளையும் குற்றங்களையும் கண்டு அவற்றை நீக்கிச் செப்பமும் சீருமுடைய உலகை ஆக்கும் இலட்சிய நோக்கில் கதையின் உள்ளும், காப்பியத் தொடக்கப் படலங்களிலும் அவற்றை இணைத்தும் முரணியும் காட்டித் தன்னை உலகியல் அறிஞனாகப் புலப்படுத்துகின்றான் கம்பன். அரசியற் படலத்தில், தசரதனின் தனிப் பெருமை சுட்டி அவனை அறிமுகப்படுத்தும்போது, கற்பனை உலகமான பின்புலத்தில் அவன் இயல்புலகினனாக அமைவதைக் கம்பன் உணர்ந்து காட்டுவதுபோன்று தோன்றுகிறது.

ஈந்தே கடந்தான், இரப்போர் கடல்;
எண்இல் நுண் நூல்
ஆய்ந்தே கடந்தான், அறிவு என்னும்
அளக்கர்; வாளால்

காய்ந்தே கடந்தான், பகை வேலை;
கருத்து முற்றத்
தோய்ந்தே கடந்தான், திருவின் தொடர்
போக பௌவம்

'பொய்உரைத்து உலகினில் சினவினார்குலம் அறப்பொருது' (6154) வென்ற நிலையையும் பிறிதோரிடத்தில் உணர்த்து கின்றார். ஈதலும் இரத்தலும், கற்றலும் அறிவும், பகையும் தெறுதலும் ஈரெல்லைகளாக இணைத்தே உலகியலின் வெளிப் பாடாக இவை அமைகின்றன.

மக்கள் மட்டுமன்றி எல்லா உயிரினங்களும் மகிழ்ந்து வாழும் வாழ்க்கையை இலட்சிய உலகில் காட்டுகின்றான் கம்பன். எவ் விதத் துன்பமும் சோதனையும் இல்லாததால் மட்டுமன்றி, எல்லாவித நிறைவுகளும் இன்பங்களும் நிறைந்திருத்தலால் களிப் புடன் அமைந்த வாழ்க்கையே காட்டப்படுகின்றது. உவர் நீரில் வாழும் மீன் கூட, கடலில் வந்து பாயும் தேன் உண்டு மெய் மறந்து களிப்புக்கடலில் ஆழ்கின்றது.

ஆலைவாய் கரும்பின் தேனும்
அரிதலைப் பாளைத் தேனும்
சோலை வீழ் கனியின் தேனும்,
தொடை இழி இறாலின் தேனும்
மாலைவாய் உகுத்த தேனும்
வரம்பு இகந்து ஓடி வங்க
வேலை வாய் மடுப்ப உண்டு
மீன் எலாம் களிக்கும் மாதோ (40)

தேனாறுகள் பெருகி நிலத்தையும் நீரையும் உயிரினங்களை யும் மகிழ்ச்சிக் களிப்பில் பொருத்திய இந்நிலைக்கு முற்றிலும் மாறான ஒரு நிலையையே இயல்புலகில் காண்கின்றான் கவிஞன். வருணனை வழிவேண்ட எழுநாள் மந்திரம் இயற்றியும் அவன் வராததால் சினந்த இராமன் கடல்மேல் அம்புவிட்டபோது கடல்பட்ட துன்பத்தில் இத்தகு முரண் காட்சியை விரிக்கின்றான் கம்பன். கணையால் எரியுண்ட கடலில் மீனும் விறகாக அமைகின்றது (6607). திமிங்கிலங்களும் துண்டுபட்டுச் சிதறு கின்றன (6611). மொய்த்த மீன் குலம் முதலற முருங்கின (6613). பல உயிரினங்கள் வருந்தி வெந்தழிந்த துன்ப நிலை ஒரு பக்க மாக, தேனாறு அன்றிக் கண்ணீர் ஆறும் இரத்த ஆறும் ஒழுகிய நிலை உலகியலின் பிறிதொரு பக்கத்தில் அமைகின்றது. கடலும்

தேனாகிய காட்சிக்கு மாறாகக் கிணறும் உதிரம் ஊறுகின்றன (6082); புண் தாழ் குருதியின் வெள்ளம் பெருகுகின்றது (5706); அரக்கமாதர் கயல் மகிழ் கண் இணை கலுழி கான்றன (5715). மகிழ்ச்சியும் களிப்பும் அங்கமைந்ததற்கு மாறாக இங்கு அவலமும் அழுகையும் காட்டப்படல் உலகியலின் உண்மைப் புலப்பாடா கின்றது.

இலட்சிய உலகியலை, காப்பியத் தலைவன் வாழ்ந்த உயர் பின்புலமாக்கி, அவன் உயர்வுக்கு ஏற்ப அமைத்துச் சிறப்புச் செய்தல் கம்பனின் காப்பியக் கோட்பாடாக அமைகின்றது. நல்ல நிலம், வளமுடைய மரத்தையும் விதையையும் தரும் குறி யீட்டுநிலை இங்கும் பொருந்துவதாகத் தெரிகின்றது. காப்பியத் தொடக்கம் இவ்வாறு, எல்லாம் நிறைந்த நாடு—நகரைப் படைத்துத் தரும் நிலை, இலக்கியக் கோட்பாட்டு மரபுத் தொடர்ச்சியைத் தருவதாகச் சீவகசிந்தாமணியின் அடிப்படை யில் கூறலாம். ஆயின் கம்பன் அத்துடன் நின்று விட்டதாகத் தோன்றவில்லை.

கதைத்தலைவனுக்கேற்ற பின்புலமாக இருந்த போதும் கதை நிகழ்வுகட்குப் பொருந்திய இயல்புப் பின்புலமாக இது தோன்றவில்லை. கதையுள் அமையும் அகப் புறப் பண்பு நிலை கட்கு ஒரு முரண் பின்புலமாகத் தோற்றம் தருவதாகக் கூற முடி கின்றது. இவ்வாறெல்லாம் இருக்க வேண்டிய உலகு—என முன்னே காட்டி, அது இவ்வாறெல்லாம் இருக்கின்றதே—எனப் பின்பு உணர்த்தும் போக்கினதாகத் தெரிகின்றது.




# இயல்பு உலகியல்

உலகம், அதனை உணர்ந்தவரின் —அறிந்தவரின் சார்பு கொண்டு அமைகின்றது. பார்ப்பவரின் மனநிலைக்கும் அகப் பண்புக்கும் ஏற்ப உலகியல் பல தோற்றம் கொள்ளுகின்றது.

சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் என்ற ஐந்தின்
வகை தெரிவான் கட்டே உலகு (27)

என வள்ளுவர் உலகறிவை, ஐம்பொறியோடும், ஐம்புலனோடும், சார்த்தித் தருகின்றார். இவ் ஐந்தன் பண்பும் பயனும், முழுமையும் நிறைவும் பெறுவதற்கு மனம் அடிப்படையாக அமைகின்றது. காற்றெனக் கடிந்து சென்று, குரங்கெனத் தாவி, சுழற்காற்றில் உற்ற பஞ்சென அலையும் இம்மனம் ஆரவாரம் நீங்கி அடங்கியும் அமைந்தும் இருக்கும் நிலையினதும் ஆகும். பல்வகைப் பண்புக் கலவையாகத் தன்னுள் ஒரு சிறு உலகாக அமையும் இம்மனமே மனிதனின் வாழ்வின் நீர்மைகட்கு அடிப்படையும் உறுதுணையும் ஊன்றுகோலும் ஆகின்றது. எனவே உலகியலை ஆக்குவதும் பாதுகாப்பதும் இம்மனமே எனலாம்.

பல்வகை உணர்வுகளின், நல்லதும் அல்லதுமான பண்புகளின் சேர்க்கையாக அமையும் மனம் போன்றே, அதனை உடைய மனிதனும், அவனால் ஆகும் உலகமும் அமைகின்றனர். 'ஒன்றே உலகம்' எனவும், 'யாதும் ஊரே யாவரும் கேளிர்' எனவும் உலகளாவிய பார்வை அமையினும், உலகம் பல நாடுகளாகவும், பல்வகை மக்கட்குழுக்களின் பகுதிகளாகவும் பிரிந்தும் பிளவுபட்டும் அமைகின்றது. வெவ்வேறுபட்ட சமுதாயங்களும் வகைவகையான குடும்பங்களும், இந்நாடுகளிலும் இனக்குழுக்களிலும் அமைந்து, ஒரு கையின் ஐவிரலாக, ஒன்றுபட்டும் வேறு

பட்டும் காணப்படுகின்றன. குடும்பங்களை ஆக்கும் தனிமனிதன் ஆணும் பெண்ணுமாகிய பண்பாலும் பழக்கத்தாலும், எண்ணங் களாலும் செய்கையாலும், ஒற்றுமையில் வேற்றுமையும் வேற்று மையில் ஒற்றுமையும் புலப்படுத்திக்கொண்டு அமைகின்றனர். எனவே உலகம் முழுமைக்கும் உரிய பண்புகள் எனவும், இனமக் கட்குரிய தன்மைகள் எனவும், குடும்பங்கட்குரிய இயல்புகள் எனவும், தனிமனிதனுச்குரிய நீர்மைகள் எனவும், ஆணுக்குரிய திறன்கள் எனவும், பெண்ணுக்குரிய பான்மைகள் எனவும் பல வாறாக உலகியலை அணுகும் பாங்கு வாய்ப்புடையதாகவும் ஏற்புடையதாகவும் அமைகின்றது.

உலகு நன்மையும் தீமையும் நிறைந்ததே ஆயினும், தீமை அழிந்து நன்மை பெருகி அமைவதனையே உலகோர் விழை கின்றனர். நாற்பொருள் பயக்கும் நெறிகாட்டலை நூற் பயனாகப் பண்டையோர் சுட்டுதற்கேற்ப, எப்பொருளை எவ் விதமாகப் படைக்கும் கலைஞனும் உலகம் நல்வழிப்படலைத் தன் நோக்கமாகக் கொள்கின்றான். அவன் படைக்கும் கலையில், இலக்கியத்தில், நன்மையும் தீமையும் இணைந்தே புலப்படினும் நோக்க நிறைவேற்றம் நன்மையிலேயே சென்று முடிகின்றது. வெளிப்படையாகவும், குறிப்பாக உள்ளுறுத்தியும் நல்லெண்ணங் களை உளத்தை உய்விக்கும் கருத்துகளை உயிரைப் புடமிடும் உண்மைகளை அவன் வழங்குகின்றான்.

மனிதன் கொள்ளவேண்டிய நற்பண்புகள் பலவற்றைக் கம்பன் சுட்டுகின்றான். பாத்திர நிலையில் தேவராகவும் அரக்க ராகவும், குரங்காகவும், பறவையாகவும், முனிவராகவும், வேடராகவும், மக்களாகவும் காப்பியமாந்தர் அமையினும் அனைவரையும் மனித இயல்புகளுடையவராகப் பன்முறை கம்பன் காட்டுவதால், அனைவரிடமும் அவன் அமைக்கும் பொது நிலைப் பண்புகளின் சிறப்புகள் இங்குக் கருதத்தக்கன. தக்க இன்ன தகாதன இன்ன என்று கருதாத மக்களும் விலங்கே எனவும், நல்நெறி நின்ற விலங்கும் சிறந்தவரே எனவும் (4054) இராமன் வாயிலாகக் கம்பர் தருவது இதற்கு வாய்ப்பளிக் கின்றது.

## அன்பு

உலகை ஒன்றிணைப்பது அன்பு. எனவே கம்பன் கண்ட உலகும் அன்பு கெழுமியதாக அமைகின்றது. பலவகை மொழியினராக, மதத்தினராக, இனத்தினராக, கொள்கை

யினராகப் பிரிந்து நிற்கும் மக்கள் அன்பால் மட்டுமே ஒருங்கிணைய முடியும் என உணர்ந்ததால் காப்பியத்தில் அதனைப் படைக்கின்றான் கவிஞன். அன்பாலும் நட்பாலும் ஒருப்பட்டு, உற்றுழி உதவி அமையும் உயர் உலகத்தின் உயிர்நிலையாக அன்பு அமைதலை இராமனின் நட்புச்சூழல் புலப்படுத்து கின்றது. அரசகுலத்த அவனுடன் வேடர்குலக் குகனும், புட்குலச் சடாயுவும், குரக்கினச் சுக்கிரீவன் முதலோரும், அரக்கின் வீடணனும் கொண்ட பெருங்கிழமை ஒரு சிறந்த எடுத்துக்காட்டு.

குகனொடும் ஐவர் ஆனேம் முன்பு பின் குன்று சூழ்வான்
மகனொடும் அறுவர் ஆனேம் எம்உழை அன்பின் வந்த
அகன்அமர் காதல்ஐய நின்னொடும் எழுவர் ஆனேம்
புகல்அருங் கானம் தந்து புதல்வரால் பொலிந்தான் நுந்தை
(6507)

பகைவன் தம்பியையும் ஏற்கத் தயங்காத அன்பு இதில் புலப்படு கின்றது. அடைக்கலம் என வந்தவர்க்கு அருளும் உலவா அன்பு இதில் வெளிப்படுகின்றது.

பல்லினமும் இணைந்து வாழும் இவ் அன்புக் காட்சியை உலகியலுக்கு உரியது ஆக்க, இயற்கையிலும் படைத்து இணைமை காட்டுகின்றான் கம்பன். தண்ணிய அழகிய பொய்கை. அதன்கண் செந்தாமரை மலர்கள் பல வனப்புடன் காட்சியளிக் கின்றன. அம்மலர்களில், ஒளி பொருந்திய கண்ணும், பெண் போன்ற நடையும், சிவந்த காலுமுடைய அன்னப் பார்ப்புகள் பள்ளி கொண்டிருக்கின்றன. அருகில், பொய்கைச் சேற்றில் சுகம் கண்டு இன்புறுகின்றது கரிய எருமை. தான் பிரிந்து வந்த கன்றின் நினைவு வரவே கனைக்கின்றது. அன்பால், நிறைமடி பால்சுரக் கின்றது. சோர்ந்த பாலை அன்னக்குஞ்சு அருஞ்சுவை அமுத மாக உண்கின்றது. பசி நீங்கித் துயில ஒருப்படுகின்றது. பொய்கைக் கரையில் வாழும் தேரையின் ஒலி, அதன் துயிலுக்கு இன்பத் தாலாட்டாக அமைகின்றது.

சேல்உண்ட ஒண்கணாரின் திரிகின்ற செங்கால் அன்னம்
மால் உண்ட நளினப்பள்ளி வளர்த்திய மழலைப் பிள்ளை
கால் உண்ட சேற்றுமேதி கன்று உள்ளிக் கனைப்பச்சோர்ந்த
பால் உண்டு துயில பச்சைத் தேரை தாலாட்டும் பண்ணை
(44)

அம்புயமோ, நீர்நிலையைத் தன் வாழிடமாகக் கொண்டது. மேதிக்கோ நிலம்தான் உறைவிடம். தேரை நீரிலும் நிலத்திலும்

வாழும் டண்பு வாய்ந்தது. அன்னம் விண்ணிலும் பறக்கும் இயல்புடையது. ஒவ்வொன்றும் ஒவ்வொரு இனம; பல்நிலையில் தம்முள் வேறுபட்டன. கமலம் இறைவனின் வழிபாட்டிற்குப் பயன்படுமளவிற்கு உயர்வுடையது; அன்னத்தின் வெண்மை தூய்மையின் புலப்பாடாக அமைகின்றது; கருமேதியோ, நிறத்தாலும் செயலாலும் நேரெதிரிடையாகிச் சேற்றில் புரண்டு உடல் மாசு பொருந்தி அமைகின்றது. தேரையின் ஒலியோ இனிமையற்றது. புறநிலை இவ்வாறு அமையினும் இவற்றின் அகத்தில் மென்மையும் பண்பும் அமைகின்றன. இரண்டும் தாய்மை உணர்வின், தன்னை அளிக்கும் அன்பின் புலப்பாடாகி, பாலூட்டித் தாலாட்டி அன்னப்பார்ப்புக்கு இன்பம் அளிக்கின்றன. அன்பு என்ற அருவமான ஒன்று இவற்றின் இடையே, அமைந்த வேற்றுமைகள் அனைத்தையும் முழுமையாக அழித்து, உணர்வால் அவை ஒன்றுபடச் செய்கின்றது.

வாழ்க்கையால், வளத்தால், கல்வியால், இனத்தால், கொள்கைகளால் மிகவும் வேறுபட்ட மாந்தரைப் பிணிக்கும் அன்பே உயர்வானது. உடல் தொடர்பாலும், இரத்தத் தொடர்பாலும் ஏற்படுகின்ற காதலும் பாசமும், இதனை நோக்க, பின் தங்கி நிற்பனவே. ஆயினும் அதிலும் சில உச்சங்கள் அமைதலைக் காணமுடிகின்றது. தசரதனின் பிள்ளைப்பாசம் உயிர் கொடுக்கும் உயர் அன்பாக அமைகின்றது. கைகேயியின் மனவஞ்சம் அறியாது இருவரமளித்துப் பின் உண்மைநிலை உணர்ந்த தயரதனின் ஆவிசோரும் நிலையில் எழுந்த மன்றாட்டில் கம்பன் இதனைப் புலப்படுத்துகின்றான்.

நெகுதற்கு ஒத்த நெஞ்சும் நேயத்தாலே ஆவி
உருகுதற்கு ஒத்த உடலும் உடையேன் உன்போல் அல்லேன்
தகுதற்கு ஒத்த சனகன் தையல் கையைப் பற்றிப்
புகுதக் கண்ட கண்ணால் போகக் காணேன் என்றான் (1664)

தந்தை மகனிடம் பாசம் கொள்ளல், பற்று வைத்தல் இயல்பே. ஆயின் இராமன்பால் பற்றுக்கொண்டு, பிரிவாற்றாமையை எண்ணி உளையும் தயரதனிடம் ஒரு தந்தையை மட்டும் நாம் பார்க்கவில்லை. இரு உயிர்கள் இரண்டறக்கலந்த தன்மையினைக் காண்கின்றோம். மகனின் மேன்மையைக் கண்டுகளித்த நெஞ்சத்தினால் ஏற்படவிருக்கும் சிறுமையை நினைக்கவே இயலவில்லை. இராமனைத் தன் உயிர் எனக் கொண்டதால் அவன் குறுகிய காலப்பிரிவையே துயருடன் தாங்கினான் தந்தை தயரதன்,

விசுவாமித்திர முனிவர் கையடையாகக் கொண்டு செல்லும் இராமன் நிலையும்-'ஐயன் ஆம் மன்னன் இன்னுயிர் வழிக் கொண்டால் என' (334) அவனை மீண்டும் பெற்ற தசரதன் நிலையும் 'முன் பிரிவது ஓர் ஆவி வந்தென வந்து' (1050), இப் பிரிவரும் உயிரிணைவைக் காட்டுகின்றன. பதினான்காண்டுக் கானகப் பிரிவு தயரதனுக்கு உயிர்ப்பிரிவாகவே அமைகின்றது. ஆவி உகுக்கும் அவன் நேயத்தை, 'வேய் உயர் கானம் தானும் தம்பியும் மிதிலைப் பொன்னும் போயினன் என்ற போழ்தத்தே ஆவிபோன' (1898) அவன் நிலை உணர்த்துகின்றது. அன்புக்கு இலக்கணமாய் அவனை உயர்த்துகின்றது. தன்னை இழக்கும் (த்தகு அன்பே உலகில் தலைசிறந்ததாகப் போற்றப் படுகின்றது. இன்றும் மகன் இறக்கக்கண்ட தந்தையும் கணவன் மரணமடைந்தமை கேட்ட மனைவியும் ஆவி நீத்த நிகழ்வுகள் உள. 'காதல் காதல் காதல், காதல் போயின் சாதல் சாதல் சாதல்' என்ற பாரதியின் குயில்பாட்டும் இதனைக் காட்டுகின்றது. அன்றில் பறவைபோல், பிரியாது, பிரிந்தால் உயிர்வாழாத முதிர்ந்த அன்புடை உயிர்நிலையை இளங்கோ வடிகள் பாண்டியன் தேவியிடம் காட்டியதுபோல் கமபனும் மண்டோதரியிடம் அமைக்கின்றான். அரக்கர்கோனான இராவணன் பிறன்மனை நயந்து நிலையிழிந்து இராமன் அம்புக்கு இரையாகியபோது புலம்பி அவன் உடல்மீது விழுந்து உயிர் நீக்கின்றாள் மண்டோதரி.

என்று அழைத்தனள் ஏங்கி எழுந்து அவன்
பொன் தழைத்த பொருஅரு மார்பினைத்
தன் தழைக் கைகளால் தழுவி, தனி
நின்று அழைத்து உயிர்த்தாள், உயிர் நீங்கினாள் (9946)

பெற்றோர்-புதல்வன் அன்பும், கணவன்-மனைவி அன்பும் போல உடன்பிறப்புகட்கு இடையே அமையும் அன்பும் இயல்பானது. கம்பன் பல அண்ணன் தம்பியரையும் ஒருவர்பால் ஒருவர் உற்ற அன்புப் பெருக்கையும் பிணிப்பையும் காட்டு கின்றான். இராமனின் சகோதரர்போலவே குரக்கினத்திலும் அரக்கினத்திலும் புள்ளரசிடத்தும் சகோதர நிலைகள் காட்டு கின்றான் கம்பன். சூழல் காரணமாகவும் தீமையின் சார்பு பற்றியும் பகைத்துப் பிரிந்த அண்ணன் தம்பியரை வாலி-சுக்கிரீ வனிடமும், இராவணன்-வீடணனிடமும் காண்பது உலகியல் தான். ஆயின் எந்நிலை நேர்ந்தாலும் உயிர் கொடுத்தும் உறுப்

பிழந்தும் உதவுவது தவிரப் பிரிந்து போகா அன்பை இராவணன்-கும்பகருணனிடமும், சடாயு-சம்பாதியிடமும் காண்கின்றோம். காய்கதிர்க் கடவுளின் சீற்றத்திலிருந்து தம்பி சடாயுவைக் காக்க இடைப்புகுந்து சிறகு தீய்ந்தான் சம்பாதி (4702). வேரோடு சாய்ந்தபோதும் மரத்தை விடாத கொடிபோன்று, துன்பக் காலத்தும் இராவணனுக்கு உற்ற தம்பியாக அமைந்தவன் கும்பகருணன்.

உம்பரும் பிறரும் போற்ற ஒருவன் மூவுலகை ஆண்டு
தம்பியை இன்றி மாண்டு கிடப்பதோ தமையன் மண்மேல்
(7429)

எனும் உயர் எண்ணம் கொண்டதால், உலகியலில் தம்பியருக்கெல்லாம் வழிகாட்டியாக அமைகின்றான். இக்கும்பனே சிறந்த தம்பியாக மட்டுமன்றி உயர்ந்த அண்ணனாகவும் அமையும் பெருமை பெறுகின்றான் அறிவின்மையால் அழிய ஒருப்பட்ட அண்ணனுக்குக் கும்பகருணன் அறிவுரை பல அருளினான். அது பயன்படாதவிடத்து, தம்பியைப்போல அகன்றானில்லை; அவன் வீழும் முன் தான் வீழ்ந்தான். ஆயின் தம்பி வீடணன் அறமுடை வள்ளல்பால் அகன்றபோது அவை வரவேற்றான், விரும்பினான், போற்றினான். தம்பியின் நலனில்-நன்மையில் அக்கறை கொண்ட அண்ணனாக, மகிழ்கின்றான். 'உய்ந்தனை ஒருவன் போனாய்' என மனம் உவக்கின்றான் (7401).

அறம் என நின்ற நம்பற்கு அடிமை பெற்று அவன் தனாலே
மறம் என நின்ற மூன்றும் மருங்கு அறமாற்றி மற்றும்
திறம்என நின்ற தீமை இம்மையே தீர்ந்த செல்வ (7405)

எனப் போற்றுகின்றான். கம்பன் கண்ட அண்ணன் தம்பியரில் கும்பனே ஒரே நேரத்தில் சிறந்த அண்ணனாகவும் சீரிய தம்பியாகவும் அமைகின்றான்.

அயோத்தி வேந்தன் தசரதன் புதல்வரும் உடன்பிறந்தோரிடையே நிலவும் அன்பொளியைக் காட்டுகின்றனர். உலக அன்புக்கும் மேற்பட்ட உயிர்அன்பையே இவரிடம் காண்கின்றோம். தம்பிக்கு அரசெனக் கேட்டபோதும் உவகையே கொண்ட இராமனும், அண்ணனுக்கு அரசில்லை எனக் கேட்டுச் சினந்த இலக்குவனும், தந்தைக்கும் அண்ணனுக்கும் வந்த நிலை யுணர்ந்து தனக்கு வந்த அரசை ஏற்காது நந்தியம்பதியில் இருந்த பரதனும், பதினான்காண்டு எல்லையில் இராமன் வராததால் பரதனால் தன்மீது அளிக்கப்பட்ட அரசாட்சிக்கு

வருந்திய சத்துருக்கனனும் அன்பின் பல்லுயர் நிலைகளைப் புலப்படுத்துகின்றனர். அண்ணனுக்கு ஊழியம் செய்யும், உயிர் கொடுக்கும் தப்பியின் உயர்வினைச் சத்துருக்கனன் புலம்பல் காட்டுகின்றது.

கான்ஆள நிலமகளைக் கைவிட்டுப்போனானைக்
காத்து பின்பு
போனானும் ஒருதம்பி போனவன் தான் வரும் அவதி
போயிற்று என்னா
ஆனாத உயிர்விட என்று அமைவானும் ஒருதம்பி
அயலே நாணாது
யானாம் இவ்அரசு ஆள்வென் என்னே இவ்அரசாட்சி
இனிதே அம்மா (10172)

உலகில் காணப்படும் பல்வகையான அன்பு நிலைகளை நாம் கம்பனிடம் காண்கின்றோம். தயரதனின் உயிர் உகுக்கும் அன்பு; இராமனின் அனைவரையும் அணைக்கும் அன்பு; இலக்குவனின் ஊழியம் செய்யும் அன்பு; பரதனின் தன்னை அழிக்கும் அன்பு; சத்ருக்கனனின் ஆட்படும் அன்பு; குகனின் அடிமைப்படும் அன்பு; சபரியின் காத்திருக்கும் அன்பு; அனுமனின் உழைக்கும் அன்பு; அங்கதனின் எதையும் எதிர்பாராத அன்பு; சுக்கிரீவனின் செயற்படும் அன்பு; தாரையின் சீர்செய்யும் அன்பு; வீடணனின் உதவும் அன்பு; கும்பனின் உயிர்கொடுக்கும் அன்பு-என உலகியல் அன்பின் பல்நிலைகளைப் புலப்படுத்தி நிற்கின்றது கம்பன் காவியம். வேறு எக்காரணமும் பற்றியன்றி உளங்களின் உண்மைப் பிணிப்பால் ஏற்பட்ட இவ் அன்பினை பற்றியவரை விடாது தன் ஆட்சியை முழுமையாகப் பரப்பும் விடமாகக் கற்பிக்கின்றான் கம்பன், பிறிதொரு சூழலில்.

அன்பு எனும் விடம் உண்டாரை ஆற்றல்ஆம் மருந்தும்
உண்டோ
இன்பமும் துன்பம் தானும் உள்ளத்தோடு இயைந்த
அன்றே (3166)

எல்லையில்லா அன்பின் ஆட்சியை இராம இலக்குவரைக் கண்ட அனுமன் உரையில் அமைக்கின்றான். காரணம் எதுவுமின்றிக் கொப்புளிக்கும் அன்பின் பெருக்கு இங்குச் சுட்டப்படுகின்றது.

என்பு எனக்கு உருகுகின்றது; இவர்கின்றதுஅளவு இல்காதல்
அன்பினுக்கு அவதி இல்லை; அடைவு என்கொல்
அறிதல் தேற்றேன் (3763)

**அறம்**

அன்பு அளாவிய உலகம் அறன் வயப்பட்டு நிற்கும்போது நீர்மையும் நிலையும் உடையதாகின்றது. அன்பும் அறனும் பொருந்திய, பண்பும் பயனுமுடைய இல்வாழ்க்கையை வள்ளுவர் சுட்டியது இவ்அடிப்படை பற்றி யாகலாம். அறம், ஒளி போன்றது; கண்டவர்க்கும் கொண்டவர்க்கும் உறுதுணை யாகவும் வழிகாட்டியாகவும் அமைவது; பெற்றவரைப் புரப்பது, உடன் வருவது, விட்டு நீங்காதது. 'அறத்தினின்று ஏகல் என்பது அரிது' (2099) எனும் இராமன் எண்ணத்தில் இது வெளிப்படு கின்றது.

எனவே, அன்பை அடுத்த நிலையில் அறத்திற்கு முதன்மை அளிக்கின்றான் கம்பன். அன்பால் உலகாண்ட இராமனின் அறவெற்றியைக் கருவாகக் கொண்டியன்ற காப்பியத்தில் அறஉலகையே படைத்து விடுகின்றான் பாவலன். அறம் ஆற்றலுடையது; என்றும் நன்மையே தருவது என்பது புலப்படும் வண்ணம்,

ஆய்வினை உடையார்ஆகி, அறம்பிழையாதார்க்கு எல்லாம்
ஏய்வன நலனே அன்றி, இறுதி வந்து அடைவது உண்டோ
(6668)

எனக் கம்பனின் நேரடிக்கூற்று ஒலிக்கின்றது. இது காப்பிய எண்ணமாக மட்டுமன்றி உலகியலின் இயல்பு நடைமுறையாகவும் அமைகின்றது. வாழ்வில் அறம் நிலைப்பது வரை வாழ்நாளில் இறுதி வருவதில்லை என்பதனை இராமன் சுக்கிரீவனுக்கு, 'அறத்தினது இறுதி, வாழ்நாட்கு இறுதி; அஃது உறுதி' (4129) என அறிவுறுத்துவதில் அறிகின்றோம். இவ் அறனும புறத்தால்-உடலால் ஏற்படுவது அல்ல; அன்பு போன்று அகத்தால்-உளத்தால் ஏற்படுவதுவே. ஆயினும், காரணம் இன்றியே ஏற்படும் அன்பும், அறிவின் அடிப்படையில் அமையும் அறனும் அந்நிலைகளால் சிறிது வேறுபாடும் கொள்கின்றன. வாலியின் எதிர்மொழிக்கு இராமன் தரும் மறுப்புரையில் அறிவுவயப்பட்ட இவ் அறநிலை சுட்டப்படுகின்றது.

பொறியின் யாக்கையதோ, புலன் நோக்கிய
அறிவின் மேலது அன்றோ, அறத்தாறுதான் (4050)

அன்புபோன்று அறமும் அருவமானதுதான். எல்லா நன்மை களையும் தன்னுள் அடக்கியது; சிறந்ததும் சீர்மையுடையதும் எல்லாம் அறமே. எண்ணமும், சொல்லும், செயலும் நல்வழிச்

செல்வது அறம். எனவே அது அருவமாகவும், உருவமாகவும், ஆற்றலாகவும் அமைகின்றது. அடக்கமுடையவனாகவும், சொல்லின் செல்வனாகவும், செயல்திறம் மிக்கவனாகவும் காணப்பட்ட அனுமனை வைத்து இதனை விளக்குகின்றான் கம்பன்.

தருமம் என்று அறிஞர் சொல்லும் தனிப்பொருள்
தன்னை இன்னே
கருமம் என்ற அனுமன் ஆக்கிக் காட்டிய தன்மை... (9574)

இதனால், 'அறம் வெல்லும் பாவம் தோற்கும், இருமையும் நோக்கின்' (9574) எனும் முடிவுக்கு, வானரவீரர் வாயிலாக உலகோரான நம்மையும் கொண்டு வருகின்றான் கம்பன்.

உலக வாழ்க்கையின் முக்கூறுகளில் முதற்கூறாக அறம் அமைகின்றது. உடல் வாழ்வுக்கும், உளவாழ்வுக்கும், உயிர் வாழ்வுக்கும் உறுதிபயப்பதாக இவ் அறம் அமைகின்றது. இல்லறத் தானுக்கும் துறவறத்தானுக்கும் இது துணை நிற்கின்றது. அறவாழ்வில் மிக இன்றியமையாத, தேவையான முதன்மைப் பண்பாக ஒழுக்கம் அமைகின்றது. உயிரைவிட அதனை ஓம்பும் பாங்கை அறவியலாரும் உணர்த்துகின்றனர். கம்பனும் அறநெறி தவறாத வாழ்க்கையை உலகியலாக்கு கின்றான். தசரதனைப் புகழும்போது, 'உயிரினும் ஒழுக்கம் நன்று எனப் பொன்றிய புரவலன்' (2398) எனக் கவிஞன் கூறுவது இதனையே காட்டுகின்றது.

மனம் திரியாத நிலையில், கைகேயியின் உரையிலும் இவ் ஒழுக்கத்தின் உயர்வைப் புலப்படுத்துகின்றான் மாகவி. எந்தச் செயலிலும் ஒருமுறை பற்றிச்செல்லும் ஒழுகலாறு கொள்ளப்படு கின்றது. உலகத்து இயற்கை எனவும் உலகத்தோடு ஒட்ட ஒழுகல் எனவும் கூறுவதற்கேற்ப, வழங்கி வரும் நெறியும் முறையும் கடைப்பிடிக்கும் உலகியல் இங்குக் கருதப்படுகின்றது. மாற்றம் உடையன, மாற்றம் இல்லாதன என நினைக்கும் போது, எந்த ஒன்று திறம்பினாலும், நெறிமுறை திறம்பலாகாது (1473) எனும் எண்ணம் அமைகின்றது.

பிறந்து இறந்து போய்ப் பெறுவதும் இழப்பதும் புகழே
நிறம் திறம்பினும் நியாயமே திறம்பினும் நெறியின்
திறம் திறம்பினும் செய்தவம் திறம்பினும் செயிர்தீர்
மறம் திறம்பினும் வரன்முறை திறம்புதல் வழக்கோ (1472)

நெறிநீங்காது நின்று ஒழுகும் இவ் ஒழுக்கம், பெறுதற்கு அரியது ஆயினும், இயல்பாக அமையும் பான்மையினது என்பதனைக் கவிஞனின், 'பெறுதற்கு அரிய தம் குலம் சுரக்கும் ஒழுக்கம் குடிக்குஎலாம்' (69) எனும் உரைவழி உணரலாம்.

மனிதரிடையே பல வகையினர், பல குணத்தினர் இருப்பது போன்று ஒழுக்க நிலையிலும் வேறுபட்டவர் இருப்பதன் அடிப்படை இதன்வழி புலப்படுத்தப் படுகின்றது எனலாம். சந்தர்ப்பம், சூழ்நிலை, பிறர் தொடர்பு போன்றன நற்பண்புக்கும் தீய இயல்புக்கும் காரணமாய் அமைவதுபோன்று பிறப்பும் காரணம் ஆக அமைதல் இங்குச் சுட்டப்படுகின்றது. பரதனின் பண்பு நலம், வாயிலாக இதனைக்காட்ட, குகனின் கூற்றான, 'எம்பெருமான் பின் பிறந்தார் இழைப்பரோ பிழைப்பு' (2332) என்பது வாய்ப்பாகின்றது.

## அடக்கம்

மனிதனின் பண்பு நிலைகளில் அகத்தில் நிலைகொள்வன அடக்கம், பொறுமை, உண்மை போன்ற பல. பெரும் புலவனாக இருந்தும், கம்பன் அடக்கத்தின் சிகரத்தில் நிற்கின்றான். தன் புலமையும் ஆழமுமுடைய சொற்களை நொய்தின் நொய்ய சொல் எனவும், பெருஞ்சுவைக் காப்பியம இயற்றிய தன் செயலைப் பாற்கடலைப் பூசை நக்கியதாகவும், சிறுவரின் சிறலாகவும் கூறுவதில் அவன் அடக்கம் வெளிப்படுகின்றது. பேராற்றல் உடையோரிடம் இயல்பாக அமையும் உலகியல் பண்பாக இது அமைந்தது தெரிகின்றது. எத்துணை உயர்வும் பெருமையும் உள்ளபோதும் அப்பெருமையைப் பேசாத அடக்க நிலையைச் சுக்கிரீவன் இராமனுக்குக் கூறிய ஆறுதல் மொழிகளில் காண்கின்றோம்.

> பெருமையோர் ஆயினும் பெருமை பேசலார்
> கருமமே அல்லது பிறிது என் கண்டது (39.6)

இத்தகு அடக்கமுடைமைக்கு எடுத்துக்காட்டாக அனுமன் காப்பியத்தில் அமைகின்றான். தன்னை அடக்கும் அவன் ஆற்றல், சீதையைத் தேடியபோது, துயிலும் இராவணனைக் கண்டவிடத்து வெளிப்படுகின்றது. இராவணனை அழிக்க வேண்டுமென எழுந்த மனவுணர்வை, 'இராமன் பணி அன்று' என்று எண்ணி அடக்கிக் கொள்கின்றான் (5055).

தன் பெருப் பணியான சீதையைக் கண்டுபிடித்தலை முடித்த போதும் அவ்வெற்றியில் பெருமையுறாது, பேருருக் காட்டிய நிலையில் அவள் புகழ்மொழிக்கு முன் மிக அடக்கமாகத் தன்னை அவளுக்கு அறிமுகம் செய்கின்றான்.

அண்ணற் பெரியோன் அடிவணங்கி
அறியஉரைப்பான், அருந்ததியே
வண்ணக் கடலின் இடைக் கிடந்த
மணலின் பலரால், வானரத்தின்
எண்ணற்குஅரிய படைத்தலைவர்,
இராமற்கு அடியார், யான் அவர்தம்
பண்ணணக்கு ஒருவன் எனப்போந்தேன்
ஏவல் கூவல் பணிசெய்வேன் (5341)

அனுமனின் இப்பணிமொழி, அடக்கத்தின் இலக்கணமாகவே அவனைக் காட்டுகின்றது. தேவியைத் தேடுவதற்குத் தகுதி யுடையோனாக அனைவராலும் கருதப்பட்ட அவன், தன்னைச் செயலால் தனித்தன்மை யுடையோனாகக் காட்டினும், மணலத்தனை வானரரில் ஓர் ஊழியனாகக் கூறும் இப்பணிவு அவனை உலகியலின் வழிகாட்டி ஆக்குகின்றது. ஓரிடத்தில் மட்டுமன்றிப் பல்லிடத்தும் ச்இசெயலாற்றும் வீரனின் பேரடக்கம் புலப்படுகின்றது.

சீதையைத் தேடி மீண்டுவந்தபோது வினவும் வானர ரிடமும் அவன் தன் செயற்கருஞ் செயல்களைக் கூறாது, சீதையைக் கண்டதையும் ஆழியைப் பெற்றதையுமே மொழி கின்றான். 'போரில், நீண்ட வாள் அரக்கரோடு நிகழ்ந்ததும், நெருப்புச் சிந்தி மீண்டதும் விளம்பான், தான் தன் வென்றியை உரைக்க வெள்கி' (6015) என அவனின் அடக்க அடிப்படையைச் சுட்டுகின்றான் கம்பன். பெரியோர் தம் பெருமையைப் பேசாமலே உலகம் உணரும் என்பதனை,

பொருதமை புண்ணே சொல்ல, வென்றமை போந்த தன்மை
உரைசெய, ஊர்தீ இட்டது ஒங்கு இரும்புகையே ஓத (6016)

வானர வீரர் உணர்ந்து கொண்டது புலப்படுத்துகின்றது. அமரருள் உய்க்கும் அடக்கம் இங்கு உலகியலில் பொருந்து கின்றது.

## பொறுமை

அடக்கமுடைமை போலவே பொறையுடைமையும் உலகியலுக்குத் தேவையான அறவியலாக அமைகின்றது. தவத்

துறையினரான (2474) முனிவர்க்கு மட்டுமன்றிப் பொறுமை அனைவருக்கும் இன்றியமையாததாம். சமுதாய வாழ்வினருக்கும் புயவலிமையை அடிப்படையாகக் கொண்டு வாழும் வீரருக்கும், ஆளும் அரசுக்கும் கூட இது மிக வேண்டியதாம். இலங்கைக்குத் தூதுவிடும் எண்ணத்தை இலக்குவன் மறுத்தபோது, அங்கதனைத் தூதுவிடும் மனத்தனான இராமன் பொறை பற்றிய சிந்தனையைத் தருகின்றான்.

புயத்துறை வலியரேனும், பொறையொடும்
 பொருந்தி வாழ்தல்
சயத்துறை, அறனும் அஃதே, என்றுஇவை
 சமையச்சொன்னான் (6981)

இராவணனை மகுடபங்கப்படுத்தி மீண்ட சுக்கிரீவனைத் தழுவிப் பாராட்டு மிடத்தும் ஆற்றலும் பொறையும் ஓரிடத்தில் அடங்குவதன் இயல்பு நிலையை இராமன் காட்டு கின்றான்.

பெருமையும் வண்மை தானும்
 பேர்எழில் ஆண்மை தானும்
ஒருமையின் உணர நோக்கின்
 பொறையினது ஊற்றம் அன்றே (6931)

பொறையுடைய இடத்தில் எல்லாப் பண்புகளும் அமையும் உலக இயல்பை இதன்வழிக் கம்பன் தருகின்றான். கைகேயியிடம் இரக்கும் தசரதன், 'மேல் உற்றது உண்டு எனின் நன்று ஆம் பொறை' (1519) எனக் கூறுமிடத்தும் இந்நிலை புலப்படுகின்றது.

**வாய்மை**

உண்மை, உள்ளத்தின் பண்பாக அமையினும், சொல் நிலையில் அது வாய்மையாக வெளிப்பட்டும், செயலில் மெய்மையாக உருக்கொண்டும் அமைகின்றது. அரசு நின்னதே எனக் கூறிய பரதனை அரசாளுமாறுஇராமன் ஆணையிடுமிடத்து வாய்மையின் தன்மை சுட்டப்படுகின்றது.

வாய்மை என்னும் ஈது அன்றி வையகம்
தூய்மை என்றும் ஒன்று உண்மை சொல்லுமோ
தீமை தான் அதின் தீர்தல் அன்றியே
ஆய் மெய்யாக; வேறு அறையல் ஆவதே (2489)

மனத்தூய்மை வாய்மையால் காணப்படும் எனும் அறநூல் எண்ணப் பிரதிபலிப்பு இங்கு அமைகின்றது. யாதொன்றும்

தீமை இலாத சொலல் ஆன வாய்மைப் பாங்கும் இங்குப் புலப்படுகின்றது. 'துறந்திலேன் மெய்ம்மை, எய்தும் பெய்ம்மையே துறப்பது அல்லால்... பொய்ம்மை உரைத்திலென்' (9105, 6) எனும் வீடணன் உரையும் உள்ளத்தின் உண்மையொளி வாக்கில் வெளிப்படுவதைக் காட்டுகின்றது.

**நன்றி**

உளத்தின் பிறிதொரு சிறந்த பண்பாக நன்றியுணர்வு அமைகின்றது. நன்றியறிதலும்-நன்றி மறவாமையுமாக இது வெளிப்படுகின்றது. சடையப்ப வள்ளலிடம் பெற்ற நன்மைகள் பற்றிய கம்பனின் நன்றியுணர்வு காப்பியம் எங்கும் புலப்படுகின்றது. பிறிதொருவரிடம் தான் அடைந்த தினைத்துணை உதவியையும் பனையளவாகப் போற்றும் அறவியல், வாழ்வியல் கூறாகப் பொருந்தும் விழைவு இதில் புலப்படுகின்றது. நன்றியுணர்வில்லாதவர் சிறியவராகக் கருதப்படுகின்றனர். இறந்த வாலியின் மீது விழுந்து புலம்பும் தாரை, வாலியின் உதவியால் அமுதம் பெற்ற தேவனான நமன் நன்றியுணர்வின்றி அவன் உயிர் கவர்ந்ததாகப் பேசுமிடத்தில் இவ் எண்ணம், 'சிறியாரோ உபகாரம் சிந்தியார்' (4100) என வெளிப்படுகின்றது.

கார், கூதிர் காலம் ஆனபின்னும் வராத சுக்கிரீவனை எண்ணிச் சினந்த இராமன் உரையிலும், 'பெறல் அருந் திருப் பெற்று, உதவிப் பெருந் திறம் நினைந்திலன்' (4270) என நன்றி மறத்தல் சுட்டப்படுகின்றது. அரசும் செல்வமும் இன்ப வாழ்க்கையும் பெற்ற போது, அது தந்த சுகத்திலும் மயக்கத்திலும், தனக்கு உதவிய அவ் இன்பங்கள் அனைத்துக்கும் அடிப்படைக் காரணமாக அமைந்த இராமனின் உதவியை மறக்கின்றான். செய்ந்நன்றி கொன்றவனுக்கு உய்தி இல்லை எனும் அறக்கோட்பாடு உலகியல் பாங்குடன் இச்சூழலில் வெளிப்படுகின்றது. செய்ந்நன்றி போற்றிய கம்பன், இராமனின் சின உரை வாயிலாக, இங்கு நன்றி மறந்தவரைக் கடிந்து உரைக்கின்றான்.

நன்றி கொன்று அரு நட்பினை நார் அறுத்து
ஒன்றும் மெய்ம்மை சிதைத்து, உரை பொய்த்துளார்க்
கொன்று நீக்குதல் குற்றத்தில் தங்குமோ (4271)

நன்றியுணர்வின் முழுஉருவமாகக் கும்பகருணன் அமைகின்றான். அவன் வாயிலாகக் கம்பன் உலகோருக்கு அறநிலை

சுட்டி வழங்குகின்றான் எனக் கொள்ளலாம். அதற்கு மாறாகச் சுக்கிரீவனின் மறதி வாயிலாகச் செய்ந்நன்றி மறவாமையை அறிவுரையாக்கி வழங்குகிறான் எனக் கூறலாம். கிட்கிந்தைப் படலம் இதன் முழு உருவெளிப்பாடாக அமைகின்றது. செய்ந் நன்றி உணர்தலும் அதற்குக் கைமாறாக உயிரையே கொடுத் தலும் அறமாகக் கருதப்படுவதனை அனுமன் கூற்று சுட்டு கின்றது. 'உதவாமல் ஒருவன் செய்த உதவிக்குக் கைம்மாறாக,... மற்றும் உண்டாக வற்றோ, சிதையாத செருவில் அன்னான் முன் சென்று—ஆவி உலவானல்' (4334). இலக்குவன் சீற்றம் ஆறும் வண்ணம் அனுமன் பேரறிவுடன் புனைந்த மொழிகளில் செய்ந்நன்றி மறைத்தல், கொடுங்கொலைக்கு இணையாகச் சுட்டப்படுகின்றது. அதைவிட இழிந்ததாகவும் கொள்ளப்படு கின்றது.

சிதை அகல் காதல் தாயை தந்தையை குருவை தெய்வப்
பதவி அந்தணரை ஆவை பாலரை பாவைமாரை
வதை புரிகுநர்க்கும் உண்டாம் மாற்றல் ஆம் ஆற்றல் மாயா
உதவி கொன்றார்க்கு ஒன்றானும் ஒழிக்கலாம் உபாயம்
உண்டோ (4330)

தன் நிலை உணர்ந்து கழிவிரக்கம் கொண்ட சுக்கிரீவனும் 'நட்டார் செய்த பேர் உதவிதானும்...உணரார் ஆயின், இறுதி வேறு இதனின் உண்டோ' (4362) என நன்றி, உயிரினும் மேலாகப் போற்றப்படலைச் சுட்டுகின்றான். உணவூட்டி வளர்த்தவர்க் காக உயிரிழக்கத் துணிந்து, 'ஒருத்தரின் முன்னம் சாதல், உண்டவர்க்கு உரியது அம்மா' (7428) எனும் தன் வகுப்புக்கு இலக்கணமான கும்பன், நன்றியறிதலின் செயற் புலப்பாடாக அமைகின்றான்.

### அடைக்கலம்

செய்ந்நன்றி மறவாது தம் உயிரும் அளித்தல்போல, அபயம் என வந்தோருக்கு அடைக்கலம் அளித்தலும் உயர்ந்த அறமாகக் கருதப்படுகின்றது. 'தஞ்சம் என்றாரை நீக்கும் தன்மை' (4363) அருநரகினும் கடுவிடத்தினும் கொடியதாகக் கருதப்படுகின்றது. பகைவன் தம்பியாயினும் அடைக்கலம் என அண்டியவனை ஏற்கும், பாதுகாக்கும் பண்பு இராமனிடம் அமைகின்றது. வீடணன் அடைக்கலம் பற்றி இராமனின் பக்கத்தினரிடையே கருத்துவேறுபாடு ஏற்பட்டபோது, மாருதி ஆற்றிய பேருரை,

ஆவத்தின் வந்து அபயம் என்றானை அயிர்த்து அகல விடுதி
ஆயின்
கூவத்தின் சிறுபுனலைக் கடல் அயிர்த்தது ஒவ்வாதோ (6464)

என அமைவதிலும் இவ் எண்ணம் வெளிப்படுகின்றது.

போர்க்களத்தில் வந்த கும்பகருணனை அழைத்து வர வீடணன் செல்லும்போது, தன் தம்பி மீண்டு வருகின்றான் என அயிர்த்த கும்பன் உரையும் அடைக்கலத்தின் உயர்வினைச் சுட்டுகின்றது. அடைக்கலம் அளித்தவர் தம் உயிர் நீங்கினும் அபயம் என வந்தவரைக் கைவிடார் எனும் கருத்து இதன்கண் அமைகின்றது.

அறப்பெருந் துணைவர், தம்மை அபயம் என்று அடைந்த நின்னைத்
துறப்பது துணியார், தங்கள் ஆர் உயிர் துறந்தபோதும் (7404)

எல்லா நன்மைகளிலும் சிறந்த நன்மையாக அபயம் அளித்தல் அமைகின்றது. கூற்றுக்கு அஞ்சிய மார்க்கண்டேயனுக்குச் சிவனும், வாலிக்கு அஞ்சிய சுக்கிரீவனுக்கு இராமனும் அபயம் அளித்து எதிரியை அழித்த பாங்கு, அடைக்கலம் அளித்தலை உயிர் கொடுத்தலுக்கு இணையாக்குகின்றது. இராமனிடம் பேசும் அனுமன் உரையில் இவ் எண்ணச்சாயல் பொருந்துகின்றது.

கொடுங்குலப் பகைஞன் ஆகிக் கொல்லிய வந்த கூற்றை
நடுங்கினர்க்கு, அபயம் நல்கும் அதனினும் நல்லது உண்டோ (3779)
உம்மையே புகல்புக்கேமுக்கு இதின் வரும் உறுதி உண்டோ (3780)

அடைக்கலமாக வந்தவரைக் கைப்பொருள் போன்று பாதுகாக்கும் இவ் உலகியல்பை, விசுவாமித்திர முனிவருக்கு இராமஇலக்குவரைத் தசரதன் கையடையாக அளிக்குமிடத்தும், அங்கதனை வாலி இராமனிடம் கையடைப்படுத்தும் சூழலிலும் (4091–92) காட்டுகின்றான் கம்பன்.

சொல்நிலை அறமாக இனியவை கூறல் அமைகின்றது. உள்ளத்தின் ஒளி, வாக்கிலும் உண்மையொளி ஏற்படுத்துகின்றது. நெஞ்சத்தின் ஆழத்தில் எழும் அன்பு, இனிய சொற்களில் வெளிப்படுவது இயல்பு. அவ்வாறு இயல்பாக எழாதவிடத்தும் பகைச் சூழலிலும் கூட இன்மொழி கூறல் உயர் அறமாகக் கருதப்படுகின்றது. இராமன் சுக்கிரீவனுக்குக் கூறும் அறிவுரையில் இவ் உயர் பண்பு நிலையைச் சுட்டுகின்றான்.

பகையுடைச் சிந்தையார்க்கும் பயன் உறுபண்பின் தீரா
நகையுடை முகத்தை ஆகி இன் உரை நல்கு நாவால் (4123)

சுடுசொல்லால் பழிப்போரிடமும் இன்சொல் கூறும் பாங்கு கடினமானதாகவும் ஒருவேளை இல்லாததாகவும் இருப்பினும் அறவியல் உலகில் இயலாதது அல்ல. இத்தகு உயரிய குணத்தை உலகுக்கு அறிவுறுத்துகின்றான் கம்பன். 'வைவன வந்த போதும் வசை அல இனிய கூறல் (4125) என அறவியலை உலகியல்படுத்து கின்றான் அவன்.

நற்பண்புகளை மனிதன்கொண்டு, அதனை உலக இயல்பாக ஆக்க, அவன் அறிவு, காரணமாகவும் அடிப்படையாகவும் அமைகின்றது எனலாம். நன்மையும் தீமையும் தூக்கிப் பார்த்து, ஆய்ந்து, எது சிறந்தது, பின்பற்றக் கூடியது என்று முடி வெடுத்துப் பின்பற்றும் பகுத்தறிவே அவனை நல்வழியில் செலுத்துகின்றது. நன்மை செய்தால்மட்டும் போதாது; தீமை செய்யாமலும் இருக்கவேண்டும். துயிலும் இராவணனைக் கொல்லவேண்டும் என்ற எண்ணத்தைச் சீர்தூக்கி, நன்மை தீமை ஆய்ந்து முடிவு எடுக்கும் அனுமனிடம் இப்பகுத்தறிவைக் காட்டு கின்றான் கம்பன்.

...நேமியோன் பணி அன்றால்
ஒன்று ஊக்கி ஒன்று இழைத்தல் உணர்வு உடைமைக்கு
உரித்து அன்றால்
பின் தூக்கின் இதுசாலப் பிழை பயக்கும் எனப்பெயர்ந்தான்
(5055)

இப் பகுத்து அறியும் இயல்பு மனிதனுக்கு உரியதாக அமை கின்றது. இவ் அறிவே அவனை விலங்கிலிருந்து வேறுபடுத்து கின்றது. நன்றின்பால் உய்ப்பதான இவ் அறிவே அவனைத் தீய வழியினின்றும் காக்கின்றது.

நன்று தீது என்று இயல் தெரி நல் அறிவு
இன்றி வாழ்வது அன்றோ விலங்கின் இயல் (4053)

என்று, வாலியிடம் இராமன் கூறும் மறுப்புரையில் இச்செய்தி அமைகின்றது.

காப்பியத்தில் அறஉலகை மட்டும் படைக்காது கற்பனை கலவா இயல்புலகையும் கவிஞர் பொருத்திக்காட்டியதால், விலக்கவேண்டிய பல தீமைகள் பற்றிய எண்ணமும் கதையிலும், உரையிலும் விரவி அமைகின்றன. இயல்புரைக்குமிடத்தும், எதிர்மறையில், விலக்கவேண்டியன கூறி அறமுரைக்குமிடத்தும் இத்தகு கருத்துகள் வருகின்றன. விலக்கப்படவேண்டியவற்றி லும் மனம், வாக்கு, செயல்நிலைத் தீமைகள் அமைகின்றன.

காப்பிய ஓட்டத்தில் அன்பு முதன்மை பெற்றதுபோல, விலக்கப்படவேண்டியதாகக் காமம் பன்முறை சுட்டப்படு கின்றது. கதையின் இரு திருப்பங்கள், காமத்தினால் ஏற்பட்டன எனக் கூறுமளவுக்கு நிகழ்ச்சிகள் அமைகின்றன. தசரதன் கைகேயிபால் கொண்ட காமமே, அவனை அவன் கேட்ட வரமளிக்கச் செய்கின்றது. அறவியலார் விலக்கிய பெண்வழிச் சேறலின் வெளிப்பாடாக இது சாட்சியளிக்கின்றது. இராமன் காடேகக் காரணம் இதில் அமைந்ததுபோன்றே, கானக வாழ்வின் பத்து ஆண்டு அமைதியும், பஞ்சவடியின் இனிய வாழ்வும் முடிவெய்தக் காமம் காரணமாகின்றது. சூர்ப்பணகை யின் காமமும், இராவணனின் காமமும் இராமனையும் சீதையையும் பிரிக்கின்றன. காப்பியக் கதை ஓட்டமே காமத்தால் இயங்கும் இந்நிலை பற்றிப் போலும், இராமனுக்கு அறிவுரை கூறும் வசிஷ்டர் உரையில் அது இடம்பெறுகின்றது. மறுநாள் முடிசூட்ட வேண்டிய அரசகுமரனுக்கு முனிவர் உணர்த்தும் பல்வகை அரச அறங்களில் இது உலகியலுடனும் பொருந்து வதாக அமைகின்றது.

தூம கேது புவிக்கு எனத் தோன்றிய
வாம மேகலை மங்கையரால் வரும்
காமம் இல்லை எனின், கடுங் கேடு எனும்
நாமம் இல்லை, நரகமும் இல்லையே (1427)

ஆக்கமும் ஆற்றலுமுடைய அன்பு, காமஉருப்பெறும்போது அழிவும் துன்பமும் தருகின்றது. அன்பும் அறிவும் இணைந்து செயற்படுகின்றன; ஆயின் காமம் இருக்குமிடத்தில் அறிவு-சிந்தை-ஞானம் நீங்குகின்றது. இராவணன் சீதைபாலுற்ற காமத்தால் அறிவும் உணர்வும் இணைந்து செயற்படா நிலையைக் கம்பன் காட்டுவது இவ் எண்ணத்தைத் தருகின்றது.

சிற்றிடை சீதை என்னும் நாமமும் சிந்தை தானும்
உற்று, இரண்டு ஒன்று ஆய்நின்றால், ஒன்று ஒழித்து ஒன்றைஉன்ன
மற்றொரு மனமும் உண்டோ, மறக்கல் ஆம்வழி மற்று யாதோ
கற்றனர் ஞானம் இன்றேல் காமத்தைக் கடக்கல் ஆமோ (3150)

அனுமன், இராவணனிடம், பிணிப்புண்ட நிலையில் கூறிய உரையிலும் காமம் பற்றிய உலகியல் எண்ணங்களைக் கம்பன்

புலப்படுத்துகின்றான். 'திறம் திறம்பிய காமச் செருக்கு' (5900) எனவும், 'பொருளும் காமமும் என்று இவை போக்கி வேறு இருள் உண்டாம் என எண்ணலர்' (5902) எனவும் அதனைச் செருக் காகவும், அறம் திறம்பியதாகவும், வழி தவற வைக்கும் இருளாகவும் உருவகப்படுத்துகின்றான் கவிஞன். இவ்வாறு கதை வாயிலாகவும், கதைமாந்தர் வாயிலாகவும், கவிக் கூற்றாகவும், விலக்க வேண்டிய காமம் தரப்படுகின்றது.

காமம் போன்றே, அழுக்காறு (3181), பெருமை (3267) போன்றனவும் விலக்கப்பட வேண்டியனவாகச் சுட்டப்படுவன வாம். தீமைகள் நீங்கிய உலகைப் படைக்கும் விருப்பில் இவ் அறவியல் கருத்துகள் அறிவுரைகள் உலகியலில் விரவிவருகின்றன போலும். கள்ளுண்ணாமை பற்றிய கருத்துகளைப் புலப்படுத்தச் சுக்கிரீவனைப் பயன் கொள்ளுகின்றார் கம்பன். கள்ளுண்டவன் செய்ந்நன்றி மறக்கின்றான்; சூழ்நிலை உணர்வின்றி மயங்கு கிறான்; தீமைச் செய்கைகளில் ஈடுபடுகின்றான்; வருவது உணராது அறிவற்ற செயல்கள் செய்கின்றான். கள்ளுண்டு நிலையிழிந்த சுக்கிரீவனே, பின்பு தன்நிலை உணர்ந்தபோது கூறும் கழிவிரக்க உரைகளில் கம்பன் கள்ளுண்ணலின் தீமையை ஒரு அறவியல் உலகினனாக நின்று காட்டுகின்றான்.

வஞ்சமும் களவும் பொய்யும் மயக்கமும், மரபுஇல்கொட்பும்
தஞ்சம் என்றாரை நீக்கும் தன்மையும், களிப்பும் தாக்கும்;
கஞ்ச மெல் அணங்கும் தீரும், கள்ளினால்; அருந்தினாரை
நஞ்சமும் கொல்வது அல்லால் நரகினை நல்காது அன்றே
(4363)

தீமைகள் பலவற்றுக்கும் அடிப்படையாகவும் தூண்டு தலாகவும் கள்ளுண்ணல் அமையும் உலகியல் பாங்கு இதன்கண் புலப்படுகின்றது. உண்டாட்டுப் படலமும் களியாட்டுப் படலமும் உலகியலில் கள்பெற்ற இடத்தை உணர்த்துகின்றன. கள், களவு, காமம் என்பன போன்று சூதும் விலக்கப்படவேண்டிய வாழ் வியலின் களங்கமாக அமைகின்றது. 'சூது முந்துறச் சொல்லிய மாத்துயர்' என வசிட்டர் இராமனுக்குக் கூறிய அறிவுரையில் இது புலப்படுகின்றது.

பேரழிவுக்குக் காரணமாக அமையும் போர், விலக்கப்பட வேண்டிய செயல்நிலையாகச் சுட்டப்படுகின்றது. உலகப் போர்களால் பல்வகைத் துன்பமும் துயரமும் உறுகின்ற உலக

உயிர்களின் இன்னாமை நீக்க முயலும் தற்கால சமாதானத் தூதுவர் போன்று கம்பன் அமைகின்றான். போரே உயிராகவும் மூலமாகவும் அமைந்த ஒரு கதையினைக் கவிஞன் காப்பியப் படுத்தியபோதும், போரில்லா வாழ்வின், சண்டைகள் இல்லாச் சோழ ஆட்சியின் சில ஆண்டுகள் அவன் உள்ளத்தில் தோற்றிய மகிழ்ச்சி வண்மைபற்றிப் போரின்மையின் உயர்வை அவன் சுட்டுகின்றான் எனலாம். மறத்தை வேரறுக்க அவன் அறப் போரை மிகுதியாக விழைந்து வரவேற்றதைக் காப்பியக் கதை உணர்த்தியபோதும், பொதுநிலையில் ‘போர்’ எனும் கொடுமை அரக்கன் முற்றிலும் அழிக்கப்பட வேண்டியவனாகவே தோன்று கின்றான். பகைமையே போருக்கு அடிப்படையானமையால், அப்பகையை நீக்குதல் அறமாகக் கொள்ளப்படுகின்றது. பகையில்லா விடத்துப் போர் இல்லை; போர் புரியாத இடத்துப் புகழ் பெருகும்; படை யழிவு வாயிலாகப் பல மனித உயிர்கள் மாளாது; மக்கட் குலம் வேரறுக்கப் படாமலிருப் பதற்கு இது வாய்ப்பாக அமையும்.

கம்பன் தனது இவ்வுலகியல் கண்ணோட்டத்தை வசிட்டன் இராமனுக்கு உரைக்கும் அறிவுரை வாயிலாகப் புலப்படுத்து கின்றான்.

யாரொடும் பகை கொள்ளலன் என்ற பின்
போர் ஒடுங்கும்; புகழ் ஒடுங்காது; தன்
தார் ஒடுங்கல் செல்லாது; அது தந்த பின்
வேரொடுங் கெடல் வேண்டல் உண்டாகுமோ (1419)

பிறருக்குரிய நிலம், ஆட்சி போன்றவற்றைத் தனதாக்கும் விருப்பு போருக்குக் காரணமாகின்றது. பிறன் கைப்பொருள் வெஃகுதலும், பிறன்மனை நயத்தலும் கூடப் பகைமைக்கு அடிப்படையாகின்றன. கம்பனின் பல்வகைப் போர்ச்சூழலும் இத்தகு விழைவுகளின் களப்பயனாக அமைவதால், எதிர்நிலையில் வெஃகாமை அறம் உணர்த்தப்படுவதாகத் தோன்றுகின்றது. இராமனுக்கு உரிய அரசைத் தன் மகனுக்கு ஆக்க விழைந்த கைகேயி; தம்பி மனைவியைத் தான் உரிமை பூண்ட வாலி; பிறன் மனை நயந்து, பிறன் கைப் பொருள் வெளவிய இராவணன் என முறை தவறிய விழைவு பல்வகைப் பகைச்சூழலுக்குக் காரணமாகின்றது. இவ் வெஃகுதல் களவாக உருவெடுத்துப் போராக வெளிப்படுகின்றது. எனவே போர்செய்யாமைக்கு முன் படிகளாகக் கள்ளாமையும், வெஃகாமையும் அமைந்து விலக்க வேண்டிய தீமைநிலை சுட்டுகின்றன.

இயல்புலகியலாகக் கம்பன் காட்டிய இவ் அறவியலுலகில் மேற்கண்டவாறு இரு நிலைகள் அமைகின்றன. உடமைகளாக வேண்டும் மன மொழி மெய்கட்கு உரிய அறங்களும், களைவன வாக அமையும் பல்வகைத் தீமைகளும் என அவற்றைச் சுட்டலாம். இயல்பியலுலகில், இவ் இருவகை அணுகுதலை யுடைய அறஉலகைத் தவிர, வழக்கியல் உலகொன்றும் அமைவதாகக் கருதலாம். அறவுணர்வுடன் உலகை அணுகி வெளிப்படுத்திய கம்பன், மிகச் சாதாரண மனித மனநிலையுடன், மக்களின் உள்ளும் புறமும் பற்றிய பல ஓவியங்களைப் படைப்பது, இத்தகு பகுப்பு அமைக்க நம்மைத் தூண்டுகின்றது. அறம் எனும் கருவறைக்கு வெளியே உள்ள பிரகாரங்களாக இவை கருதத் தக்கன. சிறந்து உயர்ந்த தலைவனையும் தலைவியையும் உடைய காப்பியமாயினும், கதைப்போக்குக்குத் துணைபுரியும் பல்வகைப் பாத்திரங்களும், பின்புலனில் அமையும் நாட்டு மக்களும், பல்வகை மனிதக் கூட்டமும், இத்தகு புறச்சூழல் உலகொன்றை அமைத்துக் காண உதவுகின்றனர். இந் நடப்பியல் உலகமும் நன்மையும் தீமையும், பெருமையும் சிறுமையும், ஒற்றுமையும் வேற்றுமையும், உயர்வும் இழிவும் உடையதே.

உலக மக்களை, அவர்கள் இயல்பின் அடிப்படையில் பெரியோர், சிறியோர் என இருபெரும் பகுப்புள் அடக்கலாம். பிறருக்கு நல்லதையே எண்ணியும், செய்தும், அறத்திற்கு ஒவ்வாதனவற்றை அறவே ஒதுக்கி வாழ்ந்தும், நீதியை நிலை நிறுத்த உயிரையே கொடுக்கவும் துணியும் சான்றோர் பெரியோர் எனத் தக்கனர். பிறருக்குத் துன்பம் இழைப்பதிலேயே இன்பம் கண்டு, அறமல்லாதனவற்றையே தம் இயல்பாகக் கொண்டு, நீதிநெறி நீங்கும் தீயோர், சிறியோர் ஆகின்றனர்.

வாழ்க்கையில் மனிதனின் செயல் நிலைகள் அவனைப் பெரியோன் எனவோ சிறியோன் எனவோ வேறுபடுத்தி அறிய உதவுகின்றன. பொன்னைப் புடமிடும் நெருப்புப்போன்று, துன்பங்களும் சோதனைகளும் பெரியோரின் உயர்வையும், சிறியோரின் புன்மையையும் புலப்படுத்துகின்றன. இவ்விரு வகையினரையும் வேறுபடுத்தும் வகையை, 'கீழ் உளோர்கள் கீழ்மையே விளைத்தார்; மேலோர் சீர்த்தவர் செய்யத்தக்க கருமமே செய்தார்' (8827) எனக் கம்பன் காட்டுகின்றான். சிறுமையுடைய தீயவர்களால் கீழான செயல்களைத்தான்

செய்ய இயலும்; ஆயின் மேலோர், சான்றோர் செய்யும் செயற்கரிய வினைகளைப் புரிவர். இதனைக் கம்பன் தன் காவியத் தலைவன், எதிர்த்தலைவன் வாயிலாகவும் புலப்படுத்துவார்.

உயர்ந்தோர் யாவர் கீழோர் யாவர் என்பதற்குச் சீதையின் வாய்மொழியாகக் கம்பன் விளக்கம் தருகின்றான்.

வழிகெட வரினும், தம்தம் வாழ்க்கை தேய்ந்து இறினும், மார்பம்
கிழிபட அயில்வேல் வந்து கிடைப்பினும், ஆன்றோர் கூறும்
மொழிகொடு வாழ்வது அல்லால், முறை கெடப் புறம் நின்று ஆர்க்கும்
'பழிபட வாழ்கிற்பாரும் பார்த்திவர் உளரோ பாவம்'. (7697)

இராவணனை ஏற்கக் கூறிய மாயாசனகன் பேச்சுக்கு எதிரடியாக இது அமைகின்றது. அறிவிற் சிறந்த பெரியோரான அறவியலாளர் கூறும் நெறிப்படி வாழ்வதே பெரியோர் வாழ்வு. எத்தகைய எதிர்ப்பும் துன்பமும் வரினும், மரணமே வரினும் நெறி நீங்காமை இவர் இயல்பாகின்றது. இதற்கு நேர் மாறாக நெறி கெட, வழி பிறழ்ந்து சென்று, அப்புன்மை உணராது ஆர்க்கும், பெருமிதம் கொள்ளும் பாங்கு, கீழ்மை ஆகின்றது. தனக்கும் தன்னைச் சார்ந்தவர்க்கும் ஊறு நேரினும் நெறி நீங்கா உயர்வை முன்னவரிடத்திலும், பிறர் பழி தூற்றினும் நாணா வாழ்வினைப் பின்னவரிடத்திலும் காண்கின்றோம்.

தன் மனையைக் கவர்ந்த வஞ்சகனைக் கொன்றொழிக்கும் வாய்ப்புக் கிடைத்தபோதும், படையிழந்து நின்ற அவனுடன் பொராது, அதனை அறமற்ற செயல் என விலக்கி, 'இன்றுபோய்ப் போர்க்கு நாளை வா' எனக் கூறும் இராமன் உயர்வுக்கு உருவமாக அமைகின்றான். எக்காலத்தும் மேலோர் தம் மேன்மையினின்று வழுவார், தமக்குக் கீர்த்திதரும் செயலே செய்வர் என்பதை வெளிப்படுத்துகின்றான்.

இதற்கு மாறாக, இராவணன் சிறுமையுடையவன் ஆக, கீழ்மையுடையவனாக, தீயோனாக, கயவனாக அமைகின்றான். மடிந்தார் எனக் கருதும் வண்ணம் போர்க்களத்தில் மயங்கிக் கிடந்த நாயகனையும் இளவலையும் கண்டு சீதை துன்புற வேண்டுமென்ற கொடுமனத்தனாக 'சீதை களங்காண் படலத்'தில் அமைகின்றான் இராவணன். பிறர் துன்பம் கண்டு தான் மகிழும், இன்பமடையும் கீழோனாகக் காணப்படுகிறான். தன்

தலைவனை அவள் அந்நிலையில் கண்டால், ஏற்கெனவே 'உய்யும் உணர்வு நீத்தாள்' எத்துணை துயர் கொள்வாள் எனச் சிந்திக்காது செயல்படுகின்றான் அப் பழிவாங்கும் உணர் வினோன். தன் இச்சைக்கு இசையாதாளைச் சிறைப்படுத்தித் துன்புறுத்தியதுடன் மேலும் கொடுமைப்படுத்துவதாக இது அமைகின்றது. தீயோரால், தாம் செய்யும் தீவினை எவ்வளவு தூரம் பிறரைப் பாதிக்கும், வருத்தும் என்பதனை உணர இயலாது; ஒருவேளை உணர்ந்தாலும் அதனால் மகிழ்வும் நிறைவுமே அடைகின்றனர். கீழோர் தகாததையே புரிவர் என்ப தனைக் காப்பியத்தின் இத்தகு பல நிகழ்வுகள் புலப்படுத்து கின்றன.

பெரியோர் இயல்பினை வெளிப்படுத்தும் பல சூழல்களைக் கம்பன் அங்கங்கு அமைக்கின்றான். இராவண வீழ்ச்சிக்குப் பின் சீதையை அதுவரை வனத்தில் தெருட்டிக் காவல்காத்த அரக்கி யரை அழிக்க அவளிடம் வரம் கேட்கின்றான் அனுமன். அஞ்சி, அடைக்கலம் என அவள் காலில் விழுந்த அரக்கியர்பால் மன முருகி அன்புபூண்டு, அவரை அழிக்காதே என அனுமனிடம் வரம் கேட்கின்றாள் தேவி. பகைவருக்கும் அருளும் நன்னெஞ்சை, பகைவரேயாயினும் அடைக்கலம் என வந்தவிடத்து அணைக்கும் மனத்தினை இங்குச் சான்றாண்மையின் வெளிப்பாடாகக் கருத முடிகின்றது. அவர் இழைத்த கொடுமையை மறந்து, தானுற்ற துன்பம் விதியின் விளைவு எனவும் வினையின் வடிவு எனவும் கருதும் பேருள்ளம் (9986), சழக்கியரே யாயினும், அவர் மனத்தினுக்குக் கூட நோய் செயல் ஆகாது எனப் பேசும் பெருமனம் (9987) சீதையிடம் அமைதல் இங்குச் சிந்திக்கத் தக்கது. இராமனிடமும் இப்பண்பைக் காட்டுகின்றான் கம்பன். குரக்கு உருவில் வந்த அரக்க ஒற்றரை, வீடணன் உதவியால் கண்டு, கருணைக்கடலிடம் கொண்டு வருகின்றனர் வீரர். இராமனோ, அவர் பகைஞர் என உணராது, அவரைத் தன்னிடம் தஞ்சம் அடைய வந்தவராகக் கருதி, அவரை வருத்தாது விடுமாறு வேண்டுகிறான்.

தாம் பிழை செய்தாரேனும் தஞ்சம் என்று அடைந்தோர் தம்மை

நாம் பிழை செய்யலாமோ நலியலிர் விடுதிர் என்றான் (6772)

தீமைசெய்தார் நாண நன்மை செய்யும் வள்ளல் மனமும் பேருள்ளமும், தீயன சிறியோர் செய்தால் பொறுப்பது

பெரியோர் செயல் எனக் காட்டுதலும் இங்கு அமைகின்றன. பிழை பொறுத்தலும், அருளலும் பெரியோர் இயல்பாக இவ்வழிச் சுட்டப்படுகின்றன.

பழிக்கு நாணுதலும் பெரியோர் பண்பாக அமைகின்றது. அங்கதனின் சொற்கள் வாயிலாக இதனைப் புலப்படுத்து கின்றான் கவிஞன். இறைவன் தேவியைத் தேடித் தென்திசை வந்த வானர வீரர், யாங்கும் அவளைக் காணாது, அடுத்தது என்ன செய்வது எனக் கவல்கின்றனர்; வாலியின் மைந்தனான அங்கதன், இளவரசன் ஆதலின், அவன் மட்டும் குடிமக்களைக் காக்கவேண்டிய கடமைக்காகத் திரும்பிச்செல்ல வேண்டும் எனவும், பிறர் உயிர்விட்டு விடலாம் எனவும் அவர்களுள் முதியோனான சாம்பன் தீர்மானிக்கின்றான். ஆயின், இதனைக் கேட்ட அங்கதனோ பிறர் மடியத் தான் செல்லலை விரும்பாது, பொன்றி நீர் மடிய, யான் போவெனேல், அது நன்றதோ, உலகம் நயக்கற் பாலதோ' (4659) என உலகியல் சுட்டுகின்றான். அவ்வாறு தான் மீண்டு போனால் உண்டாகும் பழியை நினைந்து நாணுகின்றான், உயிரினும் பெரிது மனம் என உணர்ந்த அவ் உயர்ந்தோன்.

'சான்றவர் பழி உரைக்கு அஞ்சித் தன் உயிர்
போன்றவர் மடிதர போந்துளான்' என
ஆன்றபேர் உலகு உளோர் அறைதல் முன்னம், யான்
வான் தொடங்குவென், என மறித்தும் கூறுவான் (4660)

பிறர் பழிக்கு அஞ்சி, உயிர்விடத் துணியும் இவ் உயர்வு, உலகியலின் மேலோர் பண்பாக அமைகின்றது. சிறந்ததையும் சீரியதையும் உயர்த்திக்காட்ட, மனிதராகவும் குரங்காகவும் வந்த தேவரைக் காப்பியம் பயன்படுத்துவது, அற உத்தியாகத் தென்படுகின்றது.

தான் உற்ற துன்பத்தைப் பெரிது எனக் கருதி அதில் ஆழ்ந்து அல்லல் உறாது, கடமையை நினைந்து, அதுவே உயிராகி உழைப்பாகி அமைதல் பெரியோர் இயல்பு என்பதையும் கம்பன் காட்டுகின்றான். ஒன்றிற்கு மேல் ஒன்றாக அடுக்கி வரும் பல்வகைத் துன்பங்களுக்கு ஆட்படுகின்றான் இராமன்; மாற்றாந் தாயால் முடியிழந்தான்; கானக வாழ்க்கையால் துயருழன்றான்; மாயமானால் தாரம் இழந்தான்; அரக்கனின் வாளால் இன்னுயிர்ச் சடாயுவையும் இழந்தான், இவ் இழப்புகளின் உச்சத்தில் அவனும்

உயிரிழக்கத் தான் துணிகின்றான். ஆயின், அரக்கரால் துன்புறும் அருந்தவர்க்கு அளித்த அபயம் அவன் நெஞ்சில் குமிழியிட்டு எழுகின்றது; சொன்னசொல் தவறக்கூடாது எனும் அறவுணர்வும், வசிட்டரின் கூற்றுப்படி தீவினையின் நீங்கிய மேலவர் தாள் சென்னி புனையும் விருப்பினனாக அமைதலும் (1415) பற்றி, அவன் உயிர் தாங்குகின்றான். 'மறையோர் குறை முடிப்பான் பூண்டேன் விரதம், அதனால் உயிர் பொறுப்பேன்' (3499) என அவல நெஞ்சைக் கடமையின்பால் செலுத்து கின்றான்; பெரியோர் பண்புக்குச் சான்றாகின்றான்.

சிறியோர் இயல்பை, மனிதரிடம் அமையும் சிறுமைகளை-புன்மைகளைப் புலப்படுத்த அரக்கர் வாழ்வை உத்தியாகக் கொள்கின்றான் கவிஞன். நன்மைகளை, உயர்வுகளைப் புலப் படுத்தத் தேவரை உருவாக்குவது போன்று சீர்கேடுகளை' இழிவுகளை உருவப்படுத்த அரக்கரைப் பயன் கொண்டான் எனலாம். சிறுமைகளுக்கெல்லாம் உறைவிடமாக, வடிவமாக' உருவ வெளிப்பாடாக அமைகின்றான் இராவணன். பழி அஞ்சும் சான்றோருக்கு மாறாக அவன் 'உற்ற பழி மறந்தான்' (3149); நன்மையே நாடும் நல்லவர்க்கு வேறாக, புயவலி மறைத்து வஞ்சம் செய்ததில் பெருமை கொள்கின்றான். 'அன்று நான் வஞ்சம் செய்தது; ஆர் எனக்கு அமரில் நேர்வார்' (5211). நன்மை தீமை நாடி, நன்றின்பால் உய்க்கும் அறிவுடைமையோடு செயற்படும் பெரியோருக்கு முரணாக, தன் நன்மை ஒன்றே நாடி, தற்காதல் கொண்டொழுகுகின்றான். 'சிறுமை அணியுமாம் தன்னை வியந்து' எனும் வள்ளுவர் வாக்கை மெய் ஆக்கு கின்றான்.

ஒல்வது ஈது, ஒல்லாதது ஈது என்று எனக்கும் ஒன்று
உலகத்து உண்டோ
வெல்வதும் தோற்றல் தானும் விளையாட்டின் விளைந்த
மேல்நாள் (5210)

சிறியோரின் ஆணவ நிலையை இச்சொற்கள் முழுமையாகப் புலப்படுத்துகின்றன. இவ்வுலகில் தன்னால் முடிக்க முடிந்தது இது, முடியாதது இது எனப் பிரிக்க முடியாதபடி அனைத்தும் இயல்வது எனவும், முன்பு பெற்ற வெற்றியும் தோல்வியும் வீரத்தை முழுமையாகக் காட்டாத விளையாட்டுச் செயலே எனவும் தற்பெருமை கூறும் அறிவிலியாக, தன்னை வியக்கும்

புல்லியனாக, சிறியோர் இயல்புக்குச் செயற்பாடாக அமைகின்றான்.

வீரமும், தவமும், செல்வமும் எல்லாவகை நன்மைகளும் பெற்றிருந்தபோதும்,பிறர்மனை நோக்காப்பேராண்மைஇல்லாப் புன்செயல்களால் சிறியோனாக அமைகின்றான் இராவணன். தன்னை அடக்குவார் இன்றிப் பிறரை அடக்கித் திரிகின்றான். நன்மைதீமை ஆயாத மனத்தினனாய் பிறன்மனை கவர்கின்றான். அவ் இழிசெயல் சுட்டி, நயந்தும் கடிந்தும் உரைத்த தூது வரையும் கிளைஞரையும் மனங்கொள்ளவில்லை. தீமையே உருவானது போன்ற இவனை, மெல்லப் பரந்து செறியும் இருளில் கம்பன் காட்டுவதாகத் தோன்றுகின்றது.

ஏய்வினை இறுதிஇல் செல்வம் எய்கினான்
ஆய்வினை மனத்து இலான், அறிஞர் சொல் கொளாய்
வீவினை நினைக்கிலான் ஒருவன், மெய் இலான்
தீவினை என இருள் செறிந்தது எங்குமே (4877)

பொருட் பெருக்கு நல்லோரிடம் நன்மைக்கும் வண்மைக்கும் காரணமும் காரியமும் ஆகின்றது; ஆயின் சிறியோரிடமோ அது பல்வகைத் தீயசெயல்களுக்கே அடிப்படையாகின்றது. செல்வம் தந்த மயக்கம், கள் போன்று அறிவையும் கெடுத்து விடுகின்றது. சுய அறிவு இல்லாதபோது சொல்புத்தியும் ஏறாது போய் விடுகின்றது. உள்ளத்தில் உண்மை இன்மையால் செயலும் பொய்மையே உருவாகியமைகின்றது. தீமையை விலை கொடுத்து வாங்குவதுபோல், தன் அழிவுக்குத் தானே வழிவகுத்து அதைப் பற்றிய சிந்தனையின்றி யமைகின்றான் அவன்.

தாற்காலிகமான இருள்போன்று,இச்சிறியோனின் செயலும், செருக்கும், பொருளும் சிறிதுபோழ்து இருந்து அழியும் நிலையற்ற வாழ்வினவாகக் காணப்படுகின்றன. இயற்கையின் இயல்பான இருளில் உலகியலைக் கண்ட கம்பன் இன்னும் பிற பல காட்சிகளிலும் இவ் உலகியலின் சிறியோர் நிலையைச் சுட்டுகின்றான். கதிரவன் கீழ்வானில் எழ, எழுச்சியுற்று இயங்கும் உயிரினங்களுக்கு வேறாக, மலர்ச்சி குன்றி வாடிக் கூம்புகின்றது சேதாம்பல். இம் மாறுபட்ட இயல்பில், கீழோர் நிலையை உணர்கின்றான் உலகியல் அறிஞன். அறநெறி வாயிலாக அன்றி, அடாதவழியில் ஈட்டப்பட்ட பொருளும், அவ் உடைமை தந்த செருக்கும்காரணமாக அடங்கி வாழாத கீழோனாகச் சேதாம்பல் அமைகின்றது. தீவினை விடாது ஈட்டிய அப் பொருள் தாற்காலி

கமான இரவின் இருள்போல் அகல, பற்றுக்கோடு இழந்து, பரிதவிக்கும் சிறியோனின் வாழ்வுநிலையாக இது அமைகின்றது.

அருக்கன் எய்த, அமைந்து அடங்கி வாழா, அடாத
பொருள் எய்திச்
செருக்கி, இடையே திரு இழந்த சிறியோர் போன்ற
சேதாம்பல் (3183)

நல்நெறியில் ஈட்டப்படாப் பொருட் செல்வம், மாலையில் தோன்றி விடியலில் மறையும் வான்மதியிலும் புலப்படுத்தப் படுகின்றது.

கடைஉற நல்நெறி காண்கிலாதவர்க்கு
இடைஉறு திருஎன இந்து நந்தினான் (1028)

சீரியராக அமைய முடியாத இச்சிறியோரின் மனச் சிறுமையும், பண்புச் சிறுமையும், சொல் வெளிப்பாட்டிலும், செயல்நிலையிலும் அவரைச் சிறியோராக வெளிப்படுத்து கின்றன. இத்தகு சிறியோரையும், இயல்பால் உயர்ந்த பெரியோரையும் இயங்கும் இயற்கையிலும், உழைக்கும் மனிதரிடத்திலும் கண்டு அதனை வாழ்வியலின் வெளிப்பாடாகப் படைக்கின்றான் கம்பன். இவ்வாறு வாழ்வின் ஈரெல்லைகளைப் படைத்தளிக்கும்போதும், நன்மையின் பக்கம் கற்போனும் கேட்போனும் சாரும்படி, பயன் இலக்கியமாக, நெறிப்படுத்தும் வழிகாட்டியாக அமையும் நோக்கமும் கொள்கின்றான். கதை வாயிலாகவும், கதைமாந்தரின் பல்வகைப் பேச்சு வழியாகவும் விளக்கமும் குறிப்பும் அமைத்து நோக்கநிறைவேற்றம் செய்கின்றான்.

ஆடவர் இயல்பை அவன் உணர்த்தும்போது, ஒரு தனிமனிதன் எவ்வாறு வாழ வேண்டும் என்ற பாங்கும் புலப்படு கின்றது. ஒருவர் துயர் உறுங்கால், தாமே முன் வந்து தேவை யான உதவி நல்கலே ஆண்மைக்கு அழகு என்பது கம்பன் கருத்து. 'சஞ்சலம் கலந்த போது, தையலாரை உய்ய வந்து அஞ்சல் அஞ்சல் என்கிலாத ஆண்மை என்ன ஆண்மையோ' (714) என்ற வினா வடிவில் இக்கருத்து அமைகின்றது. உதவி வரைத்தன்று உதவி என்பது வள்ளுவர் வாக்கு. அவ் உதவி துன்பத்தில் உழல் வார்க்குத் துணை நிற்றல், வறுமையில் வாடுவாருக்குத் தன் பொருள் கொடுத்தல், சரண் அடைந்தவனைக் காத்தல் எனப் பல நிலைகளில் அமைதல் இயல்பு. ஆண்மைக்கு அழகான இவ் இயல்புகளை, இராமன் கூற்று வாயிலாகக் கம்பன் புலப்படுத்துகின்றான்,

உடைந்தவர்க்கு உகவான் ஆயின்,
உள்ளது ஒன்று ஈயான் ஆயின்
அடைந்தவர்க்கு அருளான் ஆயின்,
அறன் என் ஆம், ஆண்மைஎன் ஆம் (6472)

ஆண்மகன், மற்றோருக்கு, சமுதாயத்துக்கு ஆற்றும் இக் கடன் ஒருபாலாக, தன்னைப் பெற்றோருக்குப் புரியும் கடமை மற்றொன்றாக அமைகின்றது. தசரதன், இராமனிடம் தன் விழைவைக் கூறும்போது, மகன் தந்தைக்கு ஆற்றும் உதவி எத்தகையது என உணர உதவுகின்றான் கம்பன்.

உரிமை மைந்தரைப் பெறுகின்றது உறுதுயர் நீங்கி,
இருமையும் பெறற்கு, என்பது பெரியவர் இயற்கை (1375)

பெற்றோர் துயர்உறா வண்ணம், அவர்கள் துன்பம் நீக்கி இன்ப வாழ்வளித்து இம்மையில் இனிமை அளிப்பதோடு, மறுமைக்கும் உதவியாக அமையும் மைந்தர் இயல்பு இங்கு விளக்கம் பெறுகின்றது. மாமுனிவர் சலபோசனின் பொய் ஒன்று அறியா பைந்தன் சுரோசன் இதற்குச் சீரிய சான்றாக அமைகின்றான் (1379). ‘சொல் மறா மகப் பெற்றவர் அருந்துயர் துறந்தார்’, (1380) எனத் தசரதன், ‘தந்தை சொல் மிக்க மந்திரம் இலலை’ எனக் கருதும் ஆண்மகனையே சிறந்த மகனாக உலகியல் நெறி நின்று சுட்டுகின்றான். தந்தை கூறியதைக் ‘கடன் இது’ என்று உணர்ந்து ஏற்ற இராமனிடம், தந்தைக்கு அடங்கிய மகனையும் அரசனுக்கு அடங்கிய குடிமகனையும் காண்கின்றோம்.

அரசாட்சியை ஏற்றுக் கொள்ளும்படி பரதனுக்கு இராமன் கூறும் அறிவுரையிலும் மைந்தர் பாங்கைக் கம்பன் புலப்படுத்துகின்றான்.

தனையர் ஆயினார் தந்தை தாயரை
வினையின் நல்லது ஓர் இசையை வேய்தலோ
நினையல் ஓவிடா நெடிய வன் பழி
புனைதலோ, ஐய புதல்வர் ஆதல் தான் (2483)

நற்செயல்கள் காரணமாக இனிய புகழ் பரப்பி, மைந்தனால் பெற்றோர் இன்பம் பெறச் செய்தல் மகன் பண்பாக அமைதல் வேண்டும்; அல்லாது. நினைவுக்கும் பொருந்தாத நீங்காத பெரும்பழிக்குக் காரணமாகி, பெற்றோருக்கும் பழி தேடித்தரல் புதல்வன் இயல்பு அன்று என நேராகவும் எதிர்மறையாகவும் இலக்கணம் கூறுகின்றான் கம்பன். வேண்டியதும் விலக்குவதும் கூறி இயல்பு உரைக்கின்றான்,

இவ் ஆடவன், ஒரு குடும்பத் தலைவனாகவும் இருக்கும் இயல்பினன். தனயனாக இருந்தபோது, பெற்றோர்க்கு ஆற்றிய பண்பு போன்றே, குடும்பத் தலைவனாக அமையும் போது குடும்பத்திற்குக் கடமை பல ஆற்றும் குணத்தினனாக இருக்கின்றான். இல்லறத்தானுக்கு உரிய பல்வகைக் கடமைகளையும் செவ்வையாகச் செய்யும் பான்மையினனின் குடும்பமே சிறப்பும் சீரியதுமாக அமைகின்றது. தளராது, முயற்சி உடையவனாகி, எத்துன்பம் வரினும் கிளைஞனைத்தாங்கும் பாங்கினனாகக்குடும்பத்தோன் அமைதல் வேண்டும். சேதுவில் மறிந்த மலைகளால் துளக்குறாது அமைந்த கடலில். இக் குடும்பத் தலைவனான உயர் குடிமகனைக் காட்டு கின்றான் உலகியல் வல்லுநன்.

நெடும்பல் மால் வரை தூர்த்து நெருக்கவும்
துடும்பல் வேலை துளங்கியது இல்லையால்
இடும்பை எத்தனையும் படுத்து எய்தினும்
குடும்பம் தாங்கும் குடிப் பிறந்தாரினே (6727)

துன்பம் ஏற்பட்ட காலை, அஞ்சி அகலாது தன் தாளில் உறுதியாக நிற்கும் இத்தன்மையோன், ஒரு சிறு குடும்பத்தை மட்டுமன்றிப் பெருங்கிளைஞர் கூட்டத்தையே போற்றிப் புரக்கும் வன்மை உடையவனாக அமைகின்றான். ஒரு பறவைக்கு அன்றி, பல புட்களுக்கு வாழிடமாகவும், ஒரு சிறு பறவைக் கூட்டத்திற்கு மட்டுமன்றி பல்வகைச் சிறைத்தொகுதிக்கு உண்ணக் கனியளிக்கும் இயல்பினதாகவும் அமைகின்ற பழுமரமாக இத்தகையோனைக் காட்டுகின்றான் சமுதாயக் கலைஞன் (6729).

குடும்பத் தலைவனில், ஆடவர் இயல்பைப் படைத்துக் காட்டிய பாவலன், அவன் உறுதுணையான தலைவியில் மகளிர் மாண்பைப் புலப்படுத்துகின்றான். ஒருவனே பற்றுக்கோடாக, உயிராக, உணர்வாக அமையும் பெண்மையின் பெருமை இங்குப் புனையப்படுகின்றது. 'வாழ்தல் உயிர்க்கு அன்னள் ஆயிழை' (1124) என வான்மறை வள்ளுவர் புகழ்ந்ததற்கேற்பப் பிரியின் வாழா மண்டோதரிபோன்று அமைகின்றாள் குடும்பப் பெண். உள்ளன்பு இல்லாப் பொருட் பெண்டிரும், பொருளே உறவாக அமையும் பொதுமகளிரும், கொடுப்பவனை அழிக்கும் வேசை மகளிரும், மலரினை நீங்கும் வண்டு ஆக மரத்தை நீங்காக்

கொடி ஆகின்றாள் குலமடந்தை. குடும்பத் தலைவனைக் கண்ட அதே சேதுகட்டும் காட்சியில் இப்பெண்ணின் பெருந்தகை யாளையும் காட்டுகின்றான் காலத்தைவென்ற கவிவலான்.

நிலம் அரங்கிய வேரொடு நேர் பறித்து
அலமரும் துயர் எய்திய ஆயினும்
வல மரங்களை விட்டில மாசு இலாக்
குல மடந்தையர் என்ன கொடிகளே (6733)

கல்வியும், செல்வமும்,விருந்தோம்பலும் உடைய பெண்மையைப் படைப்புலகில் காட்டிய கவிஞன், 'கணவனை இழந்தார்க்குக் காட்டுவது இல்' எனும் சமுதாயப் பிரதிபலிப்பை இங்குத் தரு கின்றான்.

தனிமனிதனும், கணவன் மனைவியாகிய ஒருயிரும், ஒருவன் தலைமை தாங்கும் குடும்பமும், கிளைஞர் சுற்றமும் அமையு மாற்றை இவ் வண்ணம் விளக்கிய கம்பன் மக்கள் தம்முள் மன ஒருமை கொண்டு இணைந்து அமைந்த சமுதாயத்தையும் காட்டு கின்றான். உய்யும் உணர்வுகட்காக இயற்கையை ஏறிட்டு நோக்கும் கலைஞன், மிக இயல்பான உலகியலை அறியவும் இயற்கையை ஆழ்ந்து பார்க்கின்றான். தன்னிடம் அன்பு பூண்ட வரோ, நெருங்கிய கிளைஞரோ, உற்ற உறவினரோ மட்டுமன்றி, நேரடித்தொடர்பு இல்லாத பிற பலரும் பற்றிய இன்ப துன்ப எண்ணங்களில் மனிதன் கவனம் செலுத்தும்போது சமுதாய உணர்வு மிளிர்கின்றது; வளர்கின்றது. ஒருவர் பெறும் இன்பத் தில் பங்கு ஏற்கப் பலரும் வரலாம்; ஆயின் அவர் உறும் துன்பத் தில் துணையாக முன்வருவோர் அருகியே அமைவர். துன்பமடை யும் ஒருவனுக்காகத் துயர் உறும் பிறிதொரு உள்ளம் அனை வரையும் அனைத்துக் கொள்ளும் விரிவும் பரப்பும் உடையதாக அமைகின்றது. காலத்தின் கோலத்தால் உயர்ந்தவன் வறுமை யடையவும், சிறுமை கூரவும், சொல் செல்வாக்கு இழக்கவும் செய்தானேல் அவனுக்காக இரங்கும் உள்ளங்கள் போல, இன் இளவேனில் நீங்க வருந்திய குயில்கள் தென்படுகின்றன. அதே வேளையில், செழிப்பும், பெருமைகளும், இன்பமும் அவனை வந்து அடையும்போது மகிழும் சமுதாய உணர்வினரைப் போன்று, வளமுடைய கார் காலம் வந்ததும் மகிழ்ந்து கூத்தாடு கின்றன மயில்கள்.

பாடலம் வறுமை கூர, பகலவன் பசுமை கூர
கோடல்கள் பெருமை கூர குவலயம் சிறுமை கூர

ஆடின மயில்கள் பேசாது அடங்கினகுயில்கள் அன்பர்
கேடுறத் தளர்ந்தார் போன்றும், திருஉறக் கிளந்தார்
போன்றும் (4173)

ஒத்துணர்வுடைய காரணத்தால், இவ் இயற்கையின் இயைபுக் காட்சியில் சமுதாய உணர்வு பிரதிபலிக்கச் செய்கின்றான் கம்பன். சமுதாயத்தில் இணைந்து வாழும் இல்லறத்தான் ஒரு பால் ஆக, தவம் இயற்றித் தனித்து வாழும் துறவறத்தான் வேறாக அமைகின்றான். வாழ்வு முழுமையும் துறவாதலும், வாழ்வின் இறுதிப்பகுதி துறவறத்திற்கு ஒதுக்கப்படலுமாக அமைந்த சமுதாய நிலையைக் காப்பியக்கதை காட்டுகின்றது. தண்டகாரணியம் காட்டிய பலமுனிபுங்கவர், வாழ்வே துறவான மையைப் புலப்படுத்தி நிற்கின்றனர்.

தசரதன், மந்திரக் கிழவரிடம் கூறும் உரைகளில், துறவு என்பது பிறப்பறுக்கும் வழியாகவும் பிறவிக்கடல் கடக்கும் தெப்பமாகவும் (1333) காட்டப்படுகின்றது. உலகியல் இன்பங்களில் ஆழ்ந்துகிடந்த நிலை நீக்கி, ஐம்புலனடங்கி, உயிருக்கு உய்யும் வழி காட்டலாகத் துறவு இங்கு அமைகின்றது. மாற்ற முடியாத இறப்பிலிருந்து தப்ப முடியாவிடினும், எதிர்வரும் பிறப்பிலிருந்து விடுதிபெற, மறுமைக்குத் துணையாகி அமைகின்றது இத்துறவு.

அருஞ்சிறப்பு அமைவரும் துறவும் அவ்வழித்
தெரிஞ்சு உறவு எனமிகும் தெளிவும் ஆய் வரும்
பெருஞ் சிறை உள எனின் பிறவி என்னும் இவ்
இருஞ் சிறை கடத்தலின் இனியது யாவதோ (1334)

பிறவிக்கடலை மட்டுமன்றி, இழைத்த வினைகளெனும் பெருங் கடலையும் கரைகாண உதவுவது தழைத்த பேர் அருளுடைத் தவம் ஆகும் (1337). மூப்புக் காலம் தவத்தில் நிறைவுறுதலை உலக இயல்பாகக் கம்பன் தசரதன் கூற்றில் காட்டுகின்றான். மூப்புற்ற காலையும் துறவாதவனைப் பற்றி எழும் பேச்சு நிலையைச் சுட்டுமிடத்து, இது வெளிப்படுகின்றது. 'அறம் தலை நிரம்ப மூப்பு அடைந்த பின்னரும் துறந்திலன் என்பது ஓர் சொல் உண்டானபின்' (1340) என.

இத் துறவுச்சார்பு, காப்பியக்கதைத் திருப்பத்திற்கு அடிப்படை அமைத்ததோடு இராமனையும் கானாளச் செய்கின்றது; போலித்துறவி வடிவில் வந்த இராவணனால் பிறிதொரு திருப்பத்திற்கும் இடன் அளிக்கின்றது. ஆயின், கான் செல்லும்

மூவரையும் உபசரிக்கும் கங்கைக்கரைத் தபோதனரில் அன்பும் விருந்தோம்பலும் உடைய 'மனையின் நீங்கிய மக்களை வைசலும் நினையும் நெஞ்சின'ரையே காட்டி, இல்லறவியல் பொருத்துகின்றான் (1938). அவ்வாறே, தவ உருவில், சுவைத்த கனி வைத்துக் காத்திருந்த சபரியில், நோன்பின் நிறைவை மட்டுமன்றி அன்பின் ஆழத்தையும் காட்டி உலகியல்படுத்து கின்றான் (3700-701).

உலகின் பல்வகை மக்கள் இயல்பை இவ்வாறு புலப்படுத் தியதோடு, உலகில் பொதுவாகக் காணப்படும் சில எண்ண, பேச்சு, செயல் முறைகளையும் அங்கங்குச் சுட்டுகின்றான் கம்பன். தான் வாழ்ந்த சூழலுக்கு ஏற்பப் பல இணைவுகளையும் காப்பியக் கதைப் புலத்தில் அமைத்து அதற்குக் காலத்திற்கேற்ற வடிவம் கொடுக்கின்றான். அவ்வாறு அளிக்கும்போதும், தன் காலத்திற்கு மட்டுமே உரியதாக—உயிருடையதாக— உள்ள வற்றைத் தராது எக்காலத்தினருக்கும் இயைபுடையதை, சார்ப் புடையதை அமைப்பதால், காலப்பொதுக் கோட்பாடும் கருத்தும் தருகின்றான்.

காலம் வல்லமையுடையது. இடம், காலம் ஆகிய இரண்டும் உலகியலின் அடிப்படையாக இணைந்து நிற்கின்றன. இயற்கை காலத்துக்குக் கட்டுப்பட்டது; மனித உடலும் காலத்தால் தாக்கம் கொள்வது; வாழ்க்கையே காலத்துக்கு உட்பட்டது தான். உலக வாழ்வியலில், காலத்துக்கு அமையும் இம் முதன்மையைக் கம்பனும் நினைவில் கொள்கின்றான். நமக்கு ஒரு காரியம் ஆகவேண்டும் என்றால், அது ஆகவேண்டிய காலத் தில் நடந்தே தீரும்; இல்லை, ஒரு அழிவு ஏற்படும் என்றால், எப்படியேனும் அது நிகழ்தலும் திண்ணம். ஆவதும் அழிவதும் உலகத்து இயற்கை. ஒன்று நிகழவில்லையே என ஏங்குவதும், தீயது நிகழ்ந்துவிட்டதே என வருந்துவதிலும் பயன் இல்லை. எது நிகழினும், மனம்சோர்ந்து, தொழில் தடைபடாது முயல்வதும் முன்னேறுவதுமே சரி. காலத்தின் கோலத்திற்கு அஞ்சியவன் துன்பப்படுகின்றான்; அதனையே முழுமையாக மலர்ந்த மனத்துடன் ஏற்பவன் துயருறாது அமைகின்றான். வந்ததனை ஏற்றுக் கொள்ளவும், வருவதனை எதிர்கொள்ளவும் கூடிய மனப்பக்குவம் பெறும்போது இயக்கமும் உயிரும் உடைய உலகியலை ஆக்க முடிகின்றது.

போர்க்களத்தில், அறக்கொண்டலின் பக்கம் சார்ந்த வீடணனும், அண்ணனுக்காகப் போர்புரிய வந்த கும்பகருணனும் சந்தித்து உரையாடுமிடம், இம்முரணுடைக் காலப்போக்கினைப் பற்றிய எண்ணத்தைத் தருகின்றது.

ஆகுவது ஆகும காலத்து, அழிவதும் அழிந்து சிந்திப்
போகுவது அயலே நின்று போற்றினும் போதல் திண்ணம்
(7437)

துன்பம் வருங் காலத்து இவ்வாறு காலம் பற்றிய எண்ணங்கள் மக்கள் மனத்து எழுவது உகை இயல்பு நிகும்பலை யாகத்தில் ஈடுபட முனைந்து, அனுமன் முன் மாயாசீதையை இந்திரசித்து அழித்ததை, உண்மை என எண்ணி அவலமுற்ற அண்ணலிடம் இளவல் பேசும் உரையிலும் இக்காலக்கோட்பாடு விளக்கம் உறுகின்றது.

முடியும் நாள் தானே வந்து முற்றினால், துன்ப முந்நீர்
படியுமாம் சிறியோர் தன்மை நினக்கு இது பழியிற்றாமால்
(8902)

காலம் பற்றிய எண்ண நிலை ஒரு பாலாக, அக்காலத்தை வெல்லும் வினையாற்றலும் முயற்சியும் பற்றிய கருத்துகளும் அங்காங்கு அமைகின்றன. நடந்து முடிந்த பழந்துயருக்காக வருந்தியிராது இனி ஆகவேண்டிய செயல் நோக்கி முன்னேறும் போது துன்பம் நீங்கிப் பயன் விளைகின்றது. பயனற்ற துன்ப நினைவுகளில் உழலாது பயனுடைய ஆக்கவேலைகளில் ஈடுபடும் போது மனம் நிறைவு பெறுகின்றது. தன் ஆற்றலில் அல்லது சூழ்நிலையின் தன்மைகளில் ஐயுறாது, நம்பிக்கையுடன் முயன்றால் முடியாதது ஒன்றும் இல்லை. அஞ்சிய நெஞ்சினரை வீர உரையால் ஊக்கும் தூடணன் கருத்தில் இது வெளிப்படுகின்றது. உறுப்புக் குறையுற்ற சூர்ப்பணகையின் பொருட்டு, இராமனை எதிர்த்த படையில் தலைமை தாங்கிய திரிசிரா மடியப் புறமுதுகிட்ட புல்லர்களைத் தூடணன் ஊக்குவிக்கின்றான்.

நிச்சயம் எனும் கவசம்தான் நிலைநிற்பது அன்றி
அச்சம் என்னும் ஈது ஆர் உயிர்க்கு அருந்துணை ஆமோ
(3016)

அச்சமும் ஐயமும் கடமையினின்று விலக்கும்நிலை தோல்விக்கு வழி வகுக்கும் நிலைமாறுதல் முயறசியின் முன்னேற்றத்தில் முதற்படியாக அமைகின்றது.

முயற்சிக்கு அடிப்படையான உறுதி, மனத்தின் பண்பாகப் பொருந்துகின்றது. இம் மனம், அலைபாயும் பல்வகை எண்ணங் களுக்குக் களனாகவும் காணப்படுகின்றது. தொடர்புடையதும், தொடர்பு இல்லாததுமான பலவகை நினைவுகள் நெஞ்சில் அலைப்புண்டு அமையும் உலக இயல்பைத் தனிமைத் துயருறும் சீதையில் படைத்துக் காட்டுகின்றார் கவிஞர். நிகழ்ந்ததன் அடிப்படையில் நிகழக்கூடியதை நினைதது அல்லலுறும் நெஞ்சும், நடக்காததை நடந்ததாகக் கற்பித்துத் துயருறும் மனமும் இயல்புலகின் பிரதிபலிப்பாகவே தோன்றுகின்றன. அரக்கனால் அசோக வனத்துச் சிறைவைக்கப்பட்ட சீதை, கொல்லாமல் கொல்லும் துன்ப நினைவுகளும், பழைய நிகழ்வுகள் குறித்து எழுந்த இன்ப நினைவுகளும சிந்தையில் கலக்கும் நிலையில் காட்டப்படுகின்றாள் (5080-97). தன் சிந்தை செல்லும் இடத்தில் தற்போது என்னென்ன நிகழுமோ எனக் கற்பித்துக் கவலுகின்றாள். பல மாத காலம் சிறைப்பட்ட போதும் நாயகன் வராததால் அழிந்த நெஞ்சின் நினைவுகள் இவை நனவோடை உத்தி நிலை கொள்கின்றன. தன்னை அரக்கன் கொணர்ந்ததை இளவல் காணவில்லையோ? இலங்கை இருக்கும் இடம் அறியவில்லையோ? சடாயு மாண்டு விட்டதால் செய்தி கூறுவார் இல்லையோ?—என ஒருபோது நினைக் கின்றாள். அவர்களை இப்பிறப்யில் காண்பேனோ எனக் கவல்கின்றாள். இளவலைச் சொன்னசொல் அறிந்து, இராமன் 'இவள் அறிவிலள்' எனத் துறந்தானோ எனக் கலங்கு கிறாள். திடீரெனச் சிந்தனைக் கோணம் மாறுபடுகின்றது. அவனுக்கு யார் உண்ண அடகு அளிப்பர்? விருந்தினர் வரின் என்ன செய்வான்? என மயங்குகிறாள். மீண்டும் எண்ணம் சிறிது வேறுவழிச் செல்கின்றது; ஒருவேளை கொடிய வஞ்சக அரக்கர் இவனைத் தின்றனர் எனக் கருதி வாராதிருந்தானோ? பொறுமையே சிறந்தது என அதனைக் கடைப்பிடித்தானோ? மீண்டும் தாயரும் தமபியரும் வேண்ட, அரசாளச் சென்றானோ? என எதை எண்ணுவது என உணர இயலாது பல்வகை நினைவு களால் வருந்துகிறாள்.

வன்கண் வஞ்சனை அரக்கர், இத்துணைப் பகல் வையார்
தின்பர், என்இனிச் செயத் தக்கது, என்று தீர்ந்தானோ
தன் குலப் பொறை தன் பொறை எனத் தணிந்தானோ
என்கொல் எண்ணுவேன் என்னும், அங்கு இராப்பகல்
இல்லாள் (5084)

அன்பிற் சிறந்தாரிடையே பிரிவு ஏற்பட்டு, மீண்டும் இணைவதற்கு வழிவகைகள் காணாது துயருறும் உலகப் பொது நிலையின் ஒரு காட்சியையே இங்குக் காண்கின்றோம் எனக் கூறுமளவிற்கு உண்மையியல் சார்பு இதில் அமைகின்றது.

உலகியல், 'நால்வர் நான்கு விதமாகப் பேசும்' சொல்லமைப்பும் காணப்படுகின்றது. ஒரு நிகழ்ச்சியை அல்லது மனிதனைப் பற்றி ஒருவர் ஒருவிதமாகவும், மற்றொருவர் வேறு விதமாகவும், பலர் பலவிதமாகவும் பேசுகின்றனர். நடந்த நிகழ்ச்சி அல்லது குறிப்பிட்ட மனிதன் பற்றிய எண்ணமும், கேள்விப்பட்ட செய்திகளும், கண்ட கேட்டோரின் கற்பனையும் கலந்து உருவாகும் பல்செய்தி நிலையாக இது அமைகின்றது. நடந்ததைப் பேசுவோரும், நடக்கின்றதைக் கூறுவோரும், நடக்கப் போவதை எண்ணுவோருமாக அமையும் மக்களுக்கு ஏற்ப அவர் பேச்சும் மாறுபடுகின்றது.

இவ் உலகியல் நிலையைக் காப்பியத்தின் பல்லிடங்களிலும் கம்பன் அமைத்துக் காட்டுகின்றான். செய்தித் தொகுப்பாக மட்டும் அமையாது, பார்ப்போரின் கோணத்திற்கு ஏற்பப் பல்சுவை பயக்கும் பாங்கு பொருந்தும் வண்ணம், இதனை உத்தியாகக் கொள்கின்றான் எனலாம். கவிஞன் குரல் மட்டும் ஒலிக்காது, பல்வகை ஏற்ற இறக்கங்களுடன் மக்கள் ஒலியும் ஊடுருவிக் கலக்கச் செய்கின்றான். தான் படைக்கும் பேரிலக்கியம், அறிவுச் செம்மல்களுக்கு மட்டும் உரியதன்று எனக் காட்டுவது போன்று, மக்கட்குரலும் விரவிப் பொதுமைப்படுத்தி மக்கள் இலக்கியம் ஆக்குகின்றான்.

இராமன் நாடாள்வான் எனக் கேட்டு மகிழ்ந்திருந்த நகர மக்களுக்கு, அவன் கானாளச் செல்கின்றான் என்ற செய்திதந்த எண்ண வெளிப்பாடுகளைக் கம்பன் படைத்தளிக்கின்றான் (1700-15). 'என்னே நிருபன் இயற்கை' என மன்னன் தசரதன் மாறியதைச் சுட்டுகின்றான் ஒருவன்; 'கைகேசி உள்ளுறு காதல் இலள்' என அழிகின்றாள் ஒரு கணிகை; 'உய்யாள் கோசலை'

என உருகுகின்றாள் என்பான் ஒருவன்; 'ஆளான் பரதன் அரசு' என வருவது கருதுகின்றான் மற்றொருவன்; 'மாளாத நம்மின் மனம் வலியர் ஆர்' எனத் தன்னிரக்கம் கொள்கின்றான் ஒரு மனிதன்.'ஆ விதியே ஓ'என நொந்துரைக்கின்றான் ஒரு மாந்தன்.

மண் செய்த பாவம் உளது என்பார்; மா மலர் மேல்
பெண் செய்த பாவம் அதனின் பெரிது என்பார்;
புண் செய்த நெஞ்சை, வதி என்பார்; பூதலத்தோர்
கண் செய்த பாவம் கடலின் பெரிது என்பார் (1706)

அழுகையும், அரற்றலும், ஆற்றாமையும், கவலுதலும், வெறுப்பும், சினமுமாக மாந்தரின் மனநிலைக்கு ஏற்ப எழுந்த பல்வகைச் சொற்கோவையாக இவை அமைகின்றன.

நன்மையான எண்ணங்களும், அறிவுரையாக அமையும் சொற்களும் கூட, சார்ந்தோரின் தீமையால் தீயதாகிவிடும் என்று கம்பன் காட்டுகின்றான். சுவையும் மணமும் நிறமுமற்று, உயிர் தருவதாக அமையும் தூய நீர், நிலத்தின் இயல்பால் திரிதலும், சுவையுடைய நன் பால் கலத்தின் இயல்பால் வேறுபடலும் இங்கு நினைக்கத் தக்கன. பேடி கை வாள் போன்று ஆற்றலுடைய பொருளொன்று தீது பயத்தலும் கையாள்வோரால் ஏற்படுவது உண்டு. காலக் கடப்பால் நன்கனி அழிதலும், பால் புளித்தலும் போல, நன்மையும் காலத்தால் திரிந்த செயல் கொண்டு விடலாம். உரியதல்லாத காலத்தும், தகுதியில்லாரிடத்தும் வெளியிடப்பட்ட கருத்தும், அறிவுரையும் கூறியவரையே கொடுத்தவரையே அழிக்கும் நிலையை உலகியலின் பிரதிபலிப்பாக, மாரீசனிடம் காட்டுகின்றான் கவிஞன்.

தங்கை மூட்டிய காமத்தீயால் வெந்துருகிய இராவணன், இலங்கையைவிட்டு, கமலச் செல்வியைக் கவருவதைக் கருத்தில் கொண்டு மாரீசனை நாடி வருகின்றான்; தன் விருப்பினைக கூறி, அதனை நிறைவேற்றித் தர வேண்டுகின்றான். இராம இலக்கு வரின் வில் ஆற்றலை, முன்பே கரன்வதையில் கண்முன் கண்டு ஒளித்த மாரீசன் தயங்குகின்றான். மற்று ஒருவனுக்காய், மனை வாழும் தாரம் கொண்டாரைத் தருமம் தானே அழிக்கும் என்பதனை அகலிகையின்பால் பற்றுவைத்து இழிவுற்ற இந்திரனைக் காட்டி அறிவுறுத்துகின்றான். இராமனின் அறவலியையும் வில்வலியையும் எடுத்து இயம்பி, தகாத செயலை நினைவிலிருந்து நீக்க வேண்டுகின்றான். அரக்கன் சினந்து சீறிய போதும், அறிவுறுத்தல் தன் கடன் என உணர்ந்த மாரீசன்,

யாதும் அறியாய்; உரை கொள்ளாய்; இகல் இராமன்
கோதை புனையாமுன், உயிர் கொள்ளை படும் அன்றே;
பேதை மதியால், 'இஃது ஓர் பெண் உருவம்' என்றாய்;
சீதை உருவோ, நிருதர் தீவினை அது அன்றோ (3259)

என வருவது உரைத்து, காமத்திரை நீக்கி உண்மை நிலையை விளக்குகின்றான். ஆயின், இந்த நல்ல மொழிகளெல்லாம் விழலுக்கு இறைத்த நீராகப் பயனற்றுப் போய்விடுகின்றன. அதுமட்டுமன்றி, நன்மை கூறியவனே நாசமடைந்தானோ என அஞ்சும்படி, அவனை ஒறுக்கத் துணிகின்றான் தசகண்டன். அறிவுரையாகிய வாளால் காமத்திரையைக் கிழித்து உண்மை உணர முடியாத அவன், வடிவாளால், மறுக்கும் மாரீசனை அழிப்பான்போல் சினக்கின்றான். அறிவுரை மொழிகள். அவனுக்கு 'வெறுப்பன கிளத்தல்' ஆகின்றன (3266). நன்மை பயக்க வேண்டிய அற மொழிகள் தனக்கே தீமை பயக்கும்படி உருமாறிய நிலை உணர்கின்றான் மாரீசன். அழிவுக்காலம் நெருங்கியபோது, செய்யும் நன்மை கூட தீமையாக முடியும் எனும் உலகியலை அறிகின்றான்.

உன்வயின் உறுதி நோக்கி, உண்மையின் உணர்த்தினேன் மற்று
என்வயின் இறுதி நோக்கி, அச்சத்தால் இசைந்தேன் அல்லேன்
நன்மையும் தீமை அன்றே, நாசம் வந்து உற்ற போது (3268)

அழிவுக்காலம் நெருங்கிவிட்டதால், நல்லவரால் அழிவதே மேல் என, இராமபாணத்தை அரக்கன் வடிவாளினும் விரும்பி, இணங்குகின்றான் மாரீசன். அறவியல் உலகில், நன்மை வித்தினால் நன்மையே விளையும்; ஆயின் இவ் இயல்பு உலகிலோ நன்மை கூட தீமைபயத்தல் உண்டு என்பதனை உணர்ந்த கவிஞனின் எண்ண வெளிப்பாடாக இச்சொற்கள் தோற்றம் கொள்ளுகின்றன.

சொல்நிலை அறம், செயல்நிலையில் புலப்படாத இத் தன்மையைத் தாடகை மார்பில் தங்காது சென்ற இராம பாணத்திலும் உவமைவாயிலாக அமைத்துத் தருகின்றான் கம்பன். 'கல்லாப் புல்லர்க்கு நல்லோர் சொன்ன பொருள் எனப் போயிற்று அன்றே' (388) எனப், போட்ட நிலத்தின் வளம்

இன்மை காரணமாகப் பயன்விளையா உயர்விதையின் பாங்கு சுட்டப்படுகின்றது. கேட்ட அறிவுரை நெஞ்சில் தங்கி விளைவு அளிக்காது புறம்போய இரு ஓட்டைச் செவிகள் உணர்த்தும் உலகியலாக இது அமைகின்றது.

சிறியோர் சீர்மையில்லாச் செயலில் ஈடுபடும்போது பயனற்றுப் போகின்றன பெரியோர் அறிவுரைகள்; ஆனால் சூழ் நிலை காரணமாகச் சீரியோர் வழிதவறும் போது துணைவர் கூறும் நல்லுரைகள் பயன் அளிக்கின்றன. இதுவும் உலகியிலே என்பதைக் கம்பன் புலப்படுத்துகின்றான். இந்திரஜித்து இறக் கவே மானிடர் தலைமை தாங்கிய குரக்குப்படையை அழிக்க, இராவணன், மூலபலப்படையை அனுப்புகின்றான். கோணற்பூ உண்ணும் வாழ்க்கைக் குரங்கின் (9348) கூட்டம் அஞ்சி ஓடுகின்றன; அறத்தைத் தின்று, அருங் கருணையைப் பருகி, மறத்தைப் பூண்டு, வெம்பாவத்தை மணந்து, உலகத்தை வெல்ல ஒருவரே வல்லராகிய அவ் அரக்கப் படைக்கு அஞ்சாது அனுமனும் அங்கதனும் சுக்கிரீவனும் மட்டுமே இராமன் பக்கம் நிற்கின்றனர். 'பாம்பு அனை அமலனே மற்று இராமன்' என முன்பு ஏம்பலித்து உரைத்த சாம்பனும் அஞ்சியது கண்டு அங்கதன் அவனுக்கு அறிவுரை கூறுகின்றான். தெரிந்த சொல் லால் தேற்றுதலும், தெளிவில்லாதவரைத் தெருட்டுதலும், வழி தவறியவரை ஆற்றுதலும் செய்யும் இயல்பினனான சாம்பன் வேறுபட்டு அஞ்சியது கண்டு, அவன் தவறு உணரும் வண்ணம், சிறுமை உணர்ந்து தெளியும்படி அறிவுரை கூறுகின்றான்; புகழ் மறந்து, புலமை இழந்து, பழியஞ்சாது பின்னிட்டவனை உண்மை உணர்த்துகின்றான்.

எத்தனை அரக்கரேனும், தருமம் ஆண்டு இல்லை அன்றே
அத்தனை அறத்தை வெல்லும் பாவம் என்று அறிந்தது உண்டோ
பித்தரைப் போல நீயும் இவருடன் பெயர்ந்த தன்மை
ஒத்திலது என்னச் சொன்னான், அவன் இவை உரைப்ப தானான். (9347)

தன் நிலைக்கு நாணி, அரக்கர் 'தோற்ற'த்திற்கு அஞ்சியமைக்கு வருந்தி, 'எடுத்தலும் சாய்தல் தானும் எதிர்த்தலும் எதிர்ந்தோர் தம்மைப் படுத்தலும் வீர வாழ்க்கை பற்றினர்க்கு உற்ற' (9353) என வீரஉரை பகர்ந்து மீள்கின்றான். அறிவுரைகள் பயன் அளிக்கும் வளநிலையும், சொல் செயலாக உருவாகும் உயர் நிலையும் இங்குப் புலப்படுகின்றன.

நடப்பியல் உலகின், அறநிலையும், சிறியோர் பெரியோர் பான்மையும், ஆடவர் பெண்டிர் பாங்கும், தனிமனித-குடும்ப-சமுதாய ஏற்றமும், மனம், சொல்- செயல்நிலை உயர்வு புலப்பாடும் இவ்வாறு உருவாக்குகின்றன. ஆயின், அத்துடன் அமைந்து விடாது, பழக்க வழக்கங்களும் நம்பிக்கைகளும் இடை விரவி, இதனை வாழ்வியல் சித்திரமாக ஓவியப்படுத்துகின்றன.

இலக்கியம் என்பது காலக் கண்ணாடி எனவும், சமுதாயப் பிரதிபலிப்பு எனவும், மக்கள் வாழ்வியலின் வரை படம் எனவும் கூறப்படுவதற் கேற்பக் கம்பனும் தன் காப்பியக் கதையை உலகியல் சார்புடன் படைத்தளிக்கின்றான். தான் வாழ்ந்த காலத்தின், இடத்தின் தாக்கமும் தோய்வும் எல்லாக் கவிஞரின் படைப்பிலும் அமைதல் இயல்பு. தன்னைச் சூழ்ந்து வாழும் மக்களின் வாழ்வியல் செல்வாக்கும் அறிந்தும் அறியாமலும் புலவரின் ஆக்கத்தில் இடம்பெறல் இயற்கை. வடமொழிக் கதையைத் தமிழ்ப் பண்பாட்டுக்கும் மரபுக்கும் ஏற்ப மாற்றியும், புத்துருவாக வடித்து ஆக்கியும் தரும் நோக்குடன் செயற்பட்ட அறிஞனுக்கு அவன் சூழல் பலவும் உதவியதைக் காப்பியம் புலப் படுத்துகின்றது. அனைத்துலகுக்கும் பொதுவான பழக்க வழக் கங்களும் நம்பிக்கைகளுமே ஒருவேளை இடம் பெற்றாலும், கவிஞரின் மொழி, நாட்டுச் சார்பு காரணமாக நமக்கேற்றவை யாக உரியவையாக அவற்றைக் கருதவும் கூடும். இராமாயண காலத்துக்குரியவையாகவும்,கம்பன் காலத்தினவாகவும் அமையும் அவை, நம் காலத்திற்கும் ஏற்புடையனவாதல் பற்றிக் காலப் பொதுமை பொருந்திய உலகியல் கோட்பாடாகவும் கொள்ளல் சாலும்.

வரவேற்பும், விருந்தோம்பலும் மக்களின் சமுதாயப் பழக்க வழக்கங்களில் மிக இயல்பானதாகி அமைகின்றன. காப்பியங் களும் இவற்றைத் தம் களனில் அமைத்து வாழ்வுப் புலப்பாடா கவும் உத்தியாகவும் பயன்கொள்கின்றன. கம்பன் கதை காப்பிய நிகழ்வோட்டத்தில் பலவிடங்களில் இதனைக் காட்டுகின்றது.

கலைக்கோட்டு முனியை உரோமபதன் வரவேற்று உபசரித் தலை வசிட்டன் கூறுமிடத்து, நகர் அலங்கரித்தலும் சுற்றம் சூழ எதிர் கொண்டு அழைத்தலும், கோயில் கொண்டு செல்லும் உறைகளும் உயராசனமும் அளித்தலுமாக அரசியல் வரவேற்பு அமைதல் புலப்படுகின்றது (232). உரோமபதன் தசரதனுக்கு வர அளிக்கும் வேற்பில் எதிர் சென்று அடிவீழலும், முயங்கலும்,

புகழ்ந்து வாழ்த்தலும் (238) அமைகின்றன. குமரன் மணங்காண மிதிலை செல்லும் தசரதனைச் சனகன் எதிர் கொள்ளுதலில் (1044-46) இப்பழக்க வழக்கமே புலப்படுகின்றது.

தவமுனிவரையும் அரசரையும், அரசர் வரவேற்கும் இந் நிலை போன்று, அரசகுமரருக்குப தேவிக்கும், குசனும் தவத்தோ ரும் வரவேற்பளித்தலை ஆரணியக் காட்சிகள் புலப்படுத்துகின் றன. நன்மைகளே விளைவித்தனவாக, கங்கைக் கரையின் தபோ தனரும், பரத்துவாச முனிவரும், சித்திர கூடத்து வேதியரும், அத் திரிமுனிவரும், சரபங்கனும், தண்டகவனத்துத் தவமுனிவரும், சுதீக்கணனும், அகத்தியனும், சபரியும் சுக்கிரீவனும் அளித்த வர வேற்புகள் பொருந்துகின்றன. அரக்க உரு மறைத்துத் தவ வடி வினனாக வந்த இராவணனைச் சீதைவரவேற்று உபசரித்தது தீயதிருப்பத்திற்கு வழி வகுக்கின்றது.

நீராடல், உறையுள் அளித்தல், வழிபாடு செய்தல், உண வருந்தல் என விருந்தினரைப் போற்றுதலை கங்கைக்கரைத் தவப் பள்ளியில் காட்டுகின்றான்.

துறை நறும் புனல் ஆடி, சுருதியோர்
உறையுள் எய்தி, உணர்வுடையோர் உணர்
இறைவற் கைதொழுது, ஏற்று எரி ஓம்பி, பின்
அறிஞர் காதற்கு அமைவிருந்து ஆயினான் (1951)

அத்திரி முனிவரின் மனைவி அனசூயை, உணவளிப்பது மட்டு மன்றி ஆடை, அணி, சந்தனம் அளித்தலும் வரவேற்பின் பகுதி யாக அமைதலை உணர்த்துவதை 'கற்பின் அனசூயை பணியால், அணிகலன், துன்னு தூசினொடு சந்து இவை சுமந்த சனகன பொன்' (2:20) எனும் கம்பன் சித்திரத்தில் காண்கிறோம்.

பெரியோரிடம் வந்துபேசும் முறையில் சில பழக்க வழக் கங்கள் இருப்பது தெரிகின்றது. கண்டதும் வணங்குதலையும், வணங்கியவரை அவர் வாழ்த்தலும், 'வனைந்த பொன் கழற்கால் வீரன் வணங்கலும், குழைந்து வாழ்த்தி' (1607) எனக்கோசலை யும் இராமனும சந்திக்கும் இடம் காட்டி விளக்குகின்றான்கம்பன் செங்கையால் வாய்புதைத்து நிற்றலும், கையில் தானை மடக்கிப் பிடித்தலுமாகப் பெரியோர்முன் நிற்றலைக் கைகேசியின் முன் நிற்கும் இராமனில் காட்டுகின்றான்.

வந்தவன் தன்னைச் சென்னி மண் உற வணங்கி வாசச்
சிந்துரப் பவளச் செவ்வாய் செங்கையின் புதைத்துமற்றைச்
சுந்தரத் தடக்கை தானை மடக்குறத் துவண்டு நின்றான்
(1598)

பழக்கவழக்கங்கள், வாழ்வில் படிந்து அமைவதுபோலவே, நம்பிக்கைகளும் மக்கள் நெஞ்சில் இடம் கொண்டு வாழ்வில் பாதிப்புக் கொள்கின்றன. காதல் நோயால் சீதை உற்ற துன்ப நிலை உணராது, அவள் உடல் வெம்மைநீக்கப் பல உபாயம் செய்து முயல்கின்றனர் தோழியர். கரியும் மலர்ப்படுச்கை கண்டு செய்வதறியாது திகைக்கின்றனர். தாதியரும், செவிலியரும், தாயரும், தவ்வையரும் இவள் துன்பம் கண்டு தாழும் துயர் உழந்து அழுங்கி மாழ்குகின்றனர். காரணம்காண இயலாத நிலையில், கண்ணேறு பட்டது போதும் எனக் கருதி, அதை நீக்க நம்பிக்கை வயப்பட்ட பழக்கவழக்கமாக, 'போதுடன் அயினி நீர் சுற்றிப்' போற்றுகின்றனர் (530).

வரும் இடையூறை முன் சுட்டும் சகுனம் பற்றிய நம்பிக்கையும் காணப்படுகின்றது. மணவணி கண்டு மிதிலையினின்று மகிழ்ந்து மீளும் தசரதன் கண்ட பறவைச் சகுனத்தால் கலங்குகின்றான். வலமாக மயில் வந்ததும், இடமாகக் காகம் முதலியவும் தடை செய்ய முந்தியதைக் காண்கின்றான்; இடையூறு வரும் என அந்நிமித்த நம்பிக்கையின் அடிப்படையில் முடிவும் செய்கின்றான் (1267).

வரும் தீமை மட்டுமன்றி, நன்மை சுட்டியும் நிமித்தங்கள் அமைதலைத் தமிழர் நம்பிக்கையாகக் காண்கின்றோம். அசோக வனத்தில் சிறையுற்ற சீதையின் செவியில் ஊதிச் சென்ற பொன் நிறத் தும்பியின் காட்சி, நன்மை சுட்டுவதாகத் திரிசடை விளக்குகின்றாள்.

உன் நிறம் பசப்பு அற, உயிர் உயிர்ப்புற
இன் நிறத் தேன் இசை, இனிய நண்பினால்
மின் நிற மருங்குலாய், செவியில் மெல்லென
பொன் நிறத் தும்பி வந்து, ஊதிப் போயதால் (5105)

இயற்கையான இத்தகு நிமித்தங்கள் மட்டுமன்றி மீவியல்பு சார்ந்த நிமித்த எண்ணங்களும் இராமாயணத்தில் காணக் கிடைக்கின்றன. அனுமனை எதிர்த்து வந்த அக்ககுமரன்

வதைக்குமுன் இத்தகு சகுன நிலையை அமைத் தளிக்கின்றான் கவிஞன். இயல்பான, தோளும் கண்ணும் இடம் துடித்தல் உடல் நிலையில் நிமித்தம் சுட்ட, காகம் ஏங்கி ஆர்த்தலும், வயல் புரவி தூங்கி விழுதலும் இயற்கையின் இயல்பில் நிமித்தமாகின்றன; அத்துடன் மேகஇருள் இல்லா விண் இடிமுழக்கம் செய்தலும் மேகம் எங்கும் பரந்து குருதித் துளி வீழ்த்தலும் மீவியல்பு நிமித்த நிலை காட்டுகின்றன (5683). மரபாக வந்த நம்பிக்கை களும், இலக்கியக்கோட்பாடுகளும் மக்கள் வாழ்வியல் சார்புடன் இங்குப் படைக்கப்படுகின்றன எனலாம்.

கனவும், வருவதை உணர்த்துவதாக நம்பின சமுதாய நிலையை முன் இலக்கியம் போன்றும் தற்கால உலகியல் போன்றும் கம்பனும் உணர்த்துகின்றான். திரிசடை உணர்த்திய கனவு இராவணாதியருக்கு தீமையும் சீதைகேள்வனுக்கும் நன்மை யும் ஆக இருபயன் சுட்டி அமைகின்றது. வெளிப்படையாக, தென்புலம் நண்ணும் அரத்த ஆடையினனான இராவணனைக் கனவில் காணுதல் அழிவு உணர்த்துகின்றது. குறியீடாக அரக்கர் மதகரியாகவும், அவரைக் கொன்றொழிக்கும் இராம இலக்குவர் கோளரியாகவும், குரக்குப்படை உழுவை அம் குழுவாகவும், சீதை, வனத்தில் வாழும் மயிலாகவும் கனவில் சுட்டப்படுகின்றனர் (5114-19). இதுபோன்று, காப்பியக் கதையின் மீவியல் களனுக்கு ஏற்ப, மந்திரம் சாபம் போன்ற இயற்கை இகந்த நம்பிக்கை நிலைகளும் அங்கங்குப் பொருந்து கின்றன.

உலகியல் இலக்கியம் என்று கூறுவதற்கு ஏற்ப, மக்களையும் அவர்கள் எண்ணம், சொல், செயல் நிலைகளையும் அங்கங்குப் பொருத்திக் காட்டிய கவிஞர், தம் மொழி நடையிலும், மக்களின் பேச்சு நிலையும், வழக்கியல் சொற்களும், உரையாடல் தொடர்களும் கொள்கின்றார். பேச்சு வெளியீட்டு நிலையும், பழமொழி ஆட்சியும் மக்கள் இயல்பாகப் பேசுவதுபோல் அமைதல் வழி, மக்கள் இலக்கியமாகப் படைத்துத்தரும் கவிஞரின் விருப்பு வெளிப்படுகின்றது எனலாம்.

பொருள் விளக்கத்துக்காகப் பழமொழிகளைக் கையாளுதல் உலக இயல்பு. இப் பொது அமைப்பை அறவியல் பொருண் மைக்கும், கவிதையிலும் பயன்படுத்துகின்றனர் கவிஞர். கருத்து விளக்கத்திற்காகவும், உணர்வு வெளிப்பாட்டிற் காகவும்

பாத்திரக் கூற்றுகளிலும் இப்பழமொழிகளை அமைத்துக் காட்டுகின்றான் கம்பன். உறுப்புக் குறைபட்ட சூர்ப்பணகையின் ஓலம்,

புலிதானே புறத்து ஆக குட்டி கோட்படாது என்ன
ஒலிஆழி உலகு உரைக்கும் உரை பொய்யோ (2133)

என இராவணன் இருக்கவும் அவன் தங்கை வருந்திய நிலையைப் பழமொழி வாயிலாகப் புலப்படுத்துகின்றது. பாதுகாப்பும், ஆற்றலும், வருத்தியவரை வீழ்த்தும் பண்பும் இச்சிறு தொடரின் மூலம் புலப்படுத்தப்படுகின்றன.

இராமன் கடிந்தபோதும், தன்னை ஏற்குமாறு இறைஞ்சி வற்புறுத்துமிடத்தும் சூர்ப்பணகை இத்தகு உலகியல் வழக்கு மொழிநிலையைப் பயன்படுத்துகின்றாள். ஆழமும், பொருட் பரப்பும் உடைய சில சொற்கள் ஆற்றலும், அழுத்தமும், பொருள் வன்மையும் கொண்டு அமைதல் பற்றியே இவற்றின் பயன்பாடு வாழ்விலும் இலக்கியத்திலும் மிகுந்து அமைகின்றது போலும். அரக்கரை வெல்ல வந்த இராம இலக்குவருக்கு, தான் வஞ்சம் அறிந்து தடுக்க வழி மொழியும் நிலையில் பயன்பட இயலும் என்பதனைச் சுட்டிக்காட்ட விரும்புகின்றாள் சூர்ப்பணகை. அரக்கியாகிய தன்னால் தான் அவர் வஞ்சம் அறிய இயலுமேயன்றிப் பிறரால் முடியாது எனும் நிலையும் இணைத்து உணர்த்துவது போன்று,

பாம்பு அறியும் பாம்பின் கால் என மொழியும்
பழமொழியும் பார்க்கிலீரோ (2870)

என ஒப்புநிலை காட்டுகின்றாள். தன்நிலை சுட்டவும், தன் பயன் புலப்படுத்தவும் சூர்ப்பணகையின் சொற்களில் பழமொழிகளைப் பொருத்துகின்றான் கவிஞன்.

அரசியல் அறம் கூறுமிடத்தும் இத்தகு உலக வழக்கியலைச் சுட்டும் பாங்கு அமைகின்றது. இராமன், வாலியை வீழ்த்தி, அவன் தம்பிக்கு அரசளித்து அறிவுரை கூறுகின்றான். நெருப்பும் புகையும் தொடர்புடையன ஆதலின், ஒன்றிருக்க மற்றதனை உணர்தல் இயல்பாக அமைகின்றது. அதனால், தொடர்புடைய செயல்கள், ஒன்றால் பிறிதொன்று இருப்பதாகத் தவறாகவும், மிகையாகவும் கருதப்படலாம் எனக் குறிப்பாகச் சுட்டவும் இவ் ஆட்சி பயன்படுகின்றது.

புகை உடைத்து என்னின், உண்டு பொங்கு அனல்
அங்கு என்று உன்னும்
மிகை உடைத்து உலகம்; நூலோர் வினையமும்
வேண்டற் பாற்றே (4123)

மக்கள் மத்தியில் அமையும் ஆட்சி, கவனமாகச் செய்யப்படலின் தேவையும், மக்களின் மிகுதியான அறிவு காரணமாகத் தலைவனிடம் தேவைப்படும் முன் எச்சரிக்கையும், முறை திறம்பா அறிவும் செய்கையும் இங்கு உணர்த்த இவ் உலகியல் ஆட்சி உதவுகின்றது.

பழமொழிகள் மட்டுமன்றி, வேறுசில உலகியல் வழக்குத் தொடர்களும் வருணனையாகவும், உவமையாகவும், நிகழ்வு வெளிப்பாடாகவும், தன்னுணர்வுப் புலப்பாடாகவும் தரப்படுகின்றன. எழுச்சிப் படலத்தில், இராமன் மணவினை காண எழுந்த படைப்பெருக்கின் மிகை வருணனை, 'உழுந்து இட இடம் இலை உலகம் எங்கணும்' (754) என இதனை அளிக்கின்றது- 'எள் போட்டால் எள் விழாது' என இன்று சமுதாயப் பழமொழி வழக்காக இன்று அமைந்துள்ளது.

தன் மைந்தன் இந்திரசித்து மாண்டதை அறிந்து வந்த மண்டோதரியைக் காட்டும் கம்பர் உவமை நிலையில் இத்தகு உலகியல் வழக்கைக் கையாளுகின்றார். துன்புற்றுத் தடுமாறி, நொந்து வரும் அவள் நிலை தீமிதிப்பது போன்று அமைந்தது என அகவெம்மையைப் புறம் ஆக்கித் தருமிடத்தில் இவ்வெளியீடு அமைகின்றது. மிகச்சாதாரண நிலையில், மக்களின் பேச்சு வழக்கில் இன்றும் நிலவும் கூற்று நிலையாக இது பொருந்துகின்றது.

தலையின்மேல் சுமந்த கையள், தழலின் மேல்
மிதிக்கின்றாள் போல்
நிலையின் மேல் மிதிக்கும் தாளள், நேசத்தால் நிறைந்த
நெஞ்சள் (9230)

சீதையைக் கொல்லத் துணிந்து செல்லும் இராவணனை மகோதரன் தடுத்து உரைகூறுமிடத்து இத்தகு உலகியலைச் சுட்டுகின்றான். ஊரார் கைகொட்டிச் சிரிப்பார்கள், எனும் உலகியல் வழக்கு நிலைக்கு ஏற்ப,

கங்கை அம் சென்னியானும் கண்ணனும் கமலத்தோனும்
செங் கையும் கொட்டி, உன்னைச் சிரிப்பரால்,
சிறியன் என்னா (9243)

என அமைக்கின்றான். எள்ளி நகையாடலின் புலப்பாடாகச் சுட்டப்படும் இப்பேச்சு நிலை, காவியக் களனின் பொருத்தமான சூழலில் எடுத்தாளப்படுவது இங்குக் காணப்படுகின்றது.

சூடாமணிப்படலத்தில், சீதை, தன்னையே நொந்து உரைக்கும் சூழலிலும், உலகியல் சொற்களை அவள் வாய் மொழியாகப் பொருத்திக் காட்டுகின்றான் கம்பன். ஒரு குறிப்பிட்ட நிகழ்வைப் பார்ப்பதற்கு விதியில்லை என நொந்து உரைத்தலும், 'என்ன சொல்லி என்ன பயன்' என வருந்திக் கூறுதலும்தன்வினை நினைந்து வருந்தலுமான உலகியல் காட்சி-செயல்-எண்ணத்தின்படி கம்பன் சீதையைக் காட்டுகின்றான், இராமனிடம் கூறவேண்டியது யாது என வினவும் அனுமனுக்கு விடையாகக் கூறும் பல்லுரையில் இவ் உணர்வும் புலப்படுகின்றது.

அரசு வீற்றிருந்து ஆளவும், ஆய் மணிப்
புரசை யானையின் வீதியில் போதவும்
விரசு கோலங்கள் காண விதி இலேன்
உரை செய்து என்னை, என் ஊழ்வினை உன்னுவேன் (5380)

இவ்வாறு, கம்பன் தன் காப்பியத்தின் பல்வகைச் சூழலிலும் பன்முறை உலகியல் சொற்களையும் தொடர்களையும் பயன் படுத்துகின்றான். மொழி நிலையிலும் இதனால் காப்பியத்தை உலகியல்படுத்துகின்றான் எனலாம்.

நிறையும் குறையும் உடைய இயல்புலகுக்கு ஏற்பக் காப்பியப் பின்புலத்தையும் பண்பு நிறைவுடைய மாந்தரோடும் குணக்குறையுடைய மக்களுடனும் படைத்து, உளக்குறை பாட்டையும், சொல் சீர்கேட்டையும், செயல் சிறுமையையும் காட்டிய கம்பர், அவ் உலகியலுக்கு ஏற்பவே, அகக்குறை மட்டுமன்றிப் புறக்குறை உடையவரையும் படைக்கின்றார். அக உறுபபுக் குறையால் தானும இழிந்து, பிறரையும் இழிவுறச் செய்கின்றான் மனிதன்; ஆயின் புற உறுப்புக் குறையுடைய ஒருவன் அகநிலையில் நிறைவுடையவனாக அமைநதால், கோளில் பொறியனாகி அமையும் நிலைக்கு உயர்ந்து காணப் படலாம். இவ்வாறன்றி அகக்கூனும் புறக்கூனும் கொண்டு, உள்ளத்திலும உருவத்திலும் கோடிய கூனி போன்றவரையும், குறையுறுப்பும் உருவும உடைய மனிதரையும் கம்பன், உலகியல் பற்றியே அமைத்துத் தருகின்றான் எனலாம்.

காப்பியக்களனிலும், அரசியலிலும் கூனும், குறளும், ஊமும் செவிடும் வந்துபோதலை, முந்தைய தமிழ் இலக்கியங்களும் காட்டுகின்றன. அதற்கேற்பவும், மூலநூலின் கதை நிலைக்கு ஏற்பவும் கம்பன் இத்தகு உலகியலைப் படைத்து அளிப்பதையும் விட்டானில்லை எனவும் கருதலாம்.

அரசமாதருக்கு அடித்தொழிலராக அமைந்த கூன், குறள், சிந்து ஆகிய உருவினரை எழுச்சிப் படலம் காட்டுகின்றது.

கூனொடு குறளும் சிந்தும் சிலதியர் குழாமும் கொண்ட
பால் நிறப் புரவி அன்னப் புள்எனப் பார்ல் செல்ல (799)

'பொறியின்மை யார்க்கும் பழியன்று' எனும் வான்மறையை இங்குக் கருதலாம். உடற்குறை காரணமாக ஒருவர் சிறுமை யுறாமையும், செயற் குறையும் மனக் குறையும் காரணமாகவே அவர் சிறுமையுறலும் அமையும் எனும் உலகக் கோட்பாட்டு நிலையை இங்கு உணரலாம்.

விசுவாமித்திரர் வேள்வி காக்க இராமனை வேண்டியபோது, தசரதன் உற்ற துயரை 'கண் இலான் பெற்று இழந்தான் என உழந்தான் கடுந்துயரம்' (325) எனக் காட்டுவான் கம்பன். இரு கண்களும் இன்றிய தாய் தந்தையருக்கு-முனிவன் சலபோசன னுக்கும் மனைவிக்கும், கண்ணாக இருந்த மைந்தன் சுரோசனன் காரணமாக ஏற்பட்ட சாப வரலாறு இங்கு நினைக்கத் தக்கது (1677-92). புறப் புலன்களான கண்கள் இருந்தும் குருடனாக' காட்சி இல்லாதவனாக அமைகின்றான் தசரதன். வேட்டைமீது வேட்கையுற்று, துருவித்திரிந்தும் காட்டில் ஒரு விலங்கும் கிடைக்காதபோது. காதே கண்ணாக அவன் செயல்படுகிறான். நீர்மொள்ளும் முனிமைந்தனை அறியாது தண்ணீர் பருகும் யானை என ஒலியால் கருதிக் கணைவிடுகின்றான்.

புக்குப் பெருநீர் நுகரும் பொருபோதகம் என்று ஒலிமேல்
கைக்கண் கணை சென்றது அலால், கண்ணில் தெரியக்
காணேன்

பொய்யா வாய்மைப் புதல்வன் புனல் மொண்டிடும்
ஓதையின் மேல் (1680)
கைஆர் கணை சென்றது அலால் கண்ணின் தெரியக்
காணேன் (1685)

எனக் கோசலைக்கும், முனிவருக்கும் தன் தவறு சுட்டுகின்ற தசரதன் உரை, இதனை உணர்த்துகின்றது. மகனையே

கண்ணாகக் கொண்ட முனித் தம்பதியரின் முன்நிலை, தசரதனிலும் இராமன் வடிவில் பொருந்துகின்றது. கண்கள் இல்லாத நிலையும், கண் இருந்தும் பார்க்காத நிலையும், கண் இல்லாதவன் பார்வை பெற்று மீண்டும் அதனை இழந்த நிலையும் இணைவு காட்டுகின்றன. கண்ணான மகனை இழந்த முனிப் பெற்றோர் 'விழி போயிற்று இன்று' (1684) எனக் கூறுவதில், புறப்புலனிலும் மைந்தனுக்குரிய உயர்வு வெளிப்படுகின்றது. குழந்தை இல்லாத தசரதன் மகவருள் ஆகுதிவழிப் பெற்ற மைந்தன் இராமனை, வேள்விகாத்தல் காரணமாகப் பிரியும் சூழலில், கம்பன் பொருத்தமாக இவ் உலகியல் நிலை சுட்டுகிறான்.

உறுப்புக் குறைநிலையில், ஊனக் கண்களைக் காட்டிய கம்பன், உவமை நிலையில ஊமனையும் எடுத்து ஆள்கின்றான். கையில் ஊமன் கண்ணில் காக்கும் வெண்ணெய் பற்றிய பழந் தமிழ் இலக்கிய நயநிலை இங்கும் புலப்படுகின்றது. முனிவனுடனும் இளவலுடனும் போகும் மைவண்ணன் மீது சென்ற சிந்தையால் காதல் நோயுற்ற நங்கையின் மனநிலையை,

> நோம்; உறும் நோய் நிலை நுவலகிற்றிலள்
> ஊமரின் மனத்திடை உன்னி விம்முவாள் (521)

என்று, உணர்வுகளைச் சொல்லில் வெளியிட இயலாத ஊமையை வைத்து விளக்குகின்றான் கம்பன். கவிஞன் தன் இலக்கியப் படைப்புக்கும் பொருள் விளக்கத்திற்கும், உலகோரான உறுப்புக் குறையுடையவரையும் தேவைக்கேற்பப் பயன் கொள்ளும் பாங்கு இங்கெல்லாம் வெளிப்படுகின்றது.

கம்பன் உலகியலின் பல முகங்களைப் பன்முக நோக்கோடு இவ்வாறெல்லாம படைத்து அளிக்கின்றான். மக்களின் அகநிலையாக அமையும் எண்ணங்களும் பண்பும, புறநிலையில் புலப்படும் சொல்லும், செயலும அளவிடற்கும ஆழங்காணவும் முடியாத பரப்பும் பெருக்கமும கொண்டு இயல்வன ஆயினும், கம்பனின் கூரிய பார்வை அவற்றைப் பெரும்பாலும் புனைந்தும் புலப் படுத்தியும் கற்போரை இன்புறுத்துகின்றது.

# அறிவு உலகியல்

பல்துறை வாழ்வியல் அறிஞனான கம்பன் தன் காப்பியத்தைப் பல்வகைத் துறை அறிவுடன் படைத்துள்ளான். மக்களின் தினசரி வாழ்க்கையின் வண்ணச் சித்திரங்கள் வெளிப்படையாகப் புலப்படுத்தும் உலகியலை அறிந்து வெளியிடுதல் ஓரளவு எளிதாக அமையலாம்; ஆயின், உள நிகழ்வுகளை, உள்ளுணர்வுகளைப் புரிதலும் புலப்படுத்தலும் அத்துணை எளியன அல்ல. மக்களுள் ஒருவனாக, மக்களிடையே வாழும் கவிஞனுக்கு அவர் வாழ்வியலைப் படைத்து அளித்தல் வாய்ப்பாக அமையலாம்; ஆயின் அரச வாழ்வையும் அரசியலையும் ஆரணியத்தின் முனிவர் வாழ்வையும் காட்சிப்படுத்துவது அருமையே. காட்சி அறிவு மட்டும் அல்லாது, கேள்விஞானமும், நூலறிவும், நுனித்து உணரும் ஆற்றலும், கற்பித்துக் கொள்ளும் பான்மையும், மன ஆழங்களை அறியும் பாங்கும் இயற்கையின் பல உண்மைகளை அறியும் ஆர்வமும், மிகச் சிறிய எளிய செய்திகளைக் கூட வாய்ப்பு நோக்கிப் பயன்கொள்ளும் நிலையும் அமைந்து கம்பனைப் பல்துறை அறிஞனாகக் காட்டுகின்றன.

உளவியல் உணர்வு, புலப்பட்டும் புலப்படாதும், தெரிந்தும் தெரியாதும், மனமுடை மனிதர் யாவர்கும் அமைய வேண்டியதே. ஆயின், பிறர் மனம் அறியும் ஆற்றல் தன் மனச் செயற்பாட்டை உணரும் பாங்கு, எல்லோரிடத்தும் அமைதல் இல்லை. பலவகைப் பாத்திரங்களை, மிக வேறுபட்ட சூழல்களில் பன்முறை படைத்தளிக்கும் ஒரு காப்பியக் கவிஞனுக்கு, இவ் உளவியல் அறிவு மிகத் தேவை. இவ் அடிப்படை அறிவே, உண்மைப் பாத்திரங்களை, உணர்வுச் செம்மையுடைய

மாந்தர்களைக் கதையில் உலவவிட ஆசிரியருக்குத் துணையாக நிற்கின்றது. பாத்திரங்களின் மனநிலைக்கு ஏற்ற சொல்லாட்சி, செயல்திறன் என்பனவற்றை அமைக்கவும், இன்ன சூழலில் இத்தகு மனநிலையினர் இவ்வாறுதான் செயல்படுவர், அல்லது இவ்வாறெல்லாம் தம்மைப் புலப்படுத்துவர் எனத் தர்க்க ரீதியாக உணர்ந்து படைக்கவும் இவ் அறிவுநிலை பயனாக அமைகின்றது.

ஒரே பொருள் இருவருக்கு இருவிதமான உணர்வகளையும் உண்மையையும் அளிப்பதும், புலப்படுத்துவதும் உலகியலில் காணப்படுவதுவே. தனி மனிதனின் மனநிலை நோக்கம் போன்றன காரணமாக ஏற்படும் இவ் வேறுபாட்டை உளவியலார் உணர்த்துவர். ஓர் உளவியல் அறிஞனாக அமையும் கம்பனும் தன் காப்பிய மாந்தரிடம் இவ்வேறுபாட்டைப் புலப்படுத்து கின்றான். தன்மகனின் ஆட்சிக்குப் பாதுகாப்பாக, இராமன் நாட்டைவிட்டுப் பிரிதலின் தேவை உணர்ந்த கைகேயிக்கு அவன் பதினான்கு ஆண்டுக் காலம் வருந்தி உழலுதலும் நோக்கமாகி விட்டதால், மனக்கசப்புச் சொற்களாக உருவம் கொள்கின்றது. இராமன் துன்புறவேண்டும் என்ற கண்ணோட்டமில்லாக் கொடுங்கண்ணால் பார்த்த அவளுக்கு அவன் செல்லவிருக்கும் கானம் புழுதியுடையதாகவும், வெம்மையுடையதாகவும் அவள் நெஞ்சம் போல் தென்படுகின்றது இவளுக்குப் 'பூழி வெங்கானம்' (1601) ஆகத் தோன்றிய அதே காடு, வேண்டுதலும் வேண்டாமையும் அற்ற மனத்தினனான இராமனுக்கு மின்ஒளிர் கானம் (1604) ஆகப் புலப்படுகின்றது. மைந்தனைப் பிரிய ஒல்லாக் கோசலைக்கோ நெடுஞ்சுரமாக (1616) அமைகின்றது.

பாத்திரத்திற்கு ஏற்ற கூற்று உலகியல் கடவா வண்ணம் அமைதலை, இந்நிகழ்வின் தொடர்பும் காட்டுகின்றது. கைகேயி,

> ஆழி சூழ் உலகம் எல்லாம் பரதனே ஆள நீ போய்
> தாழ் இருஞ் சடைகள் தாங்கி, தாங்க அருந் தவம்
> மேற்கொண்டு
> பூழி வெங் கானம் நண்ணி, புண்ணியத் துறைகள் ஆடி
> ஏழ் இரண்டு ஆண்டின் வா, என்று இயம்பினன் அரசன்
> என்றாள் (1601)

என்பதின், தாழ் இருஞ்சடை தாங்க அருந்தவம், ஏழ் இரண்டாண்டு எனும் தொடர்கள் செயற் கடினத்தையும், கால

நீட்சியையும் அழுத்திக் கூறுவதைக் காண்கின்றோம். கைகேயியின் நெஞ்சக் கடினத்திற்கு ஏற்ப இச்சொற்களைப் பெய்கின்றான் கம்பன். ஆயின், இராமன் தான்கானாளும் செய்தியைக் கோசலைக்குக் கூறி, அவள் துயரை ஆற்றுமிடத்துத் தவத்தை நல்நெறியாக (1611), மிக இனிய எளிய உயர்ந்த செயலாகச் சுட்டுகின்றான்; ஏழிரண்டு ஆண்டு அவனுக்குப் பதினான்கு பகற்பொழுதாகக் காலநீட்டிப்பில்லா எளிதாகக் கழிந்து மறையும் சிறுபொழுதாகப் புலப்படுகின்றது. 'ஏழ்இரண்டு ஆண்டு' என்பதை 'ஆண்டு ஓர் ஏழினொடு ஏழ்' எனத் தொடர் மாற்றம் செய்து இராமன் கூற்றில் கம்பன் அமைப்பதும், குறுகிய நாட்டின் சிறைப்பட்டது போன்ற வாழ்விலிருந்து வேறுபடுத்தி 'அகன்கான்' என ஆக்குவதும், தாங்களும் தவத்தை, 'மாண்ட மா தவத்தோருடன் வைகுதல்' எனப் புனைவதும் (1612) போன்று, இது அமைகின்றது.

சித்தம் நீ திகைக்கின்றது என், தேவரும்
ஒத்த மாதவம் செய்து உயர்ந்தார் அன்றே
எத்தனைக்கு உள ஆண்டுகள், ஈண்டு, அவை
பத்தும் காலும் பகல் அல்லவோ என்றான் (1626)

எனப் பாத்திர மனநிலைக்கு ஏற்பச் சொல்வடித்து, மாந்தர் இயல்பும், பண்பும், பெருமையும், பெருந்தன்மையும், சிறப்பும், உயர்வும் காட்டுகின்றான் கவிஞன். நல்ல மனம் எதிலும் நன்மையே காணும்; எதையும் நன்று எனவே கொள்ளும்; கடுகையும் மலையாக்கிக் காட்டும் மனிதரிடையே, மலைபோன்ற துன்பத்தையும் மலராக்கி மாற்றும் மாந்தனாக அமைக்கும்.

அகத்தின் அழகு, சொல்லில் வெளிப்படுவது போன்று, முகத்திலும் புலப்படும். மெய்ப்பாடுகளுக்குக்களனாக அமைவதில் பெரும்பங்கு பெறுவதும் முகமே என்பது இங்கு நினைக்கத் தக்கது. திரையிட்ட முகங்கள் பல உலகியலில் இருப்பினும், அடுத்தது காட்டும் பளிங்கு போன்று நெஞ்சம் கொண்ட உணர்வை உணர்த்தும் முகங்களும் பல. உளவியலாரும் ஒருவர் முகத்தை, அதன் அமைப்பும் பாவங்களும் அடிப்படையாக வைத்து, உள்ளத்து உண்மைகளை உணர்வதன் வாய்ப்பினைப் புலப்படுத்துவர். அறிவுக் குறைவையும், மன ஆழமின்மையையும், பண்புக் குறையையும் முகம் காட்டுவதனையும் சுட்டுகின்றனர். சாதாரண மனிதன் ஒருவனுக்குப் பிறர்முகம் வாயிலாக உள்ளத்தைக் காணவியலாது போயினும், உளவியல் அறிவு

வல்லுநர் எளிதாக இதனை அறிய இயலுகின்றது. கம்பனின் கதைமாந்தர் சிலரில் இவ் இயல்பை நாம் காண்பதால், அவனை உளவியல் அறிஞனாகக் கருத முடிகின்றது.

அனுமனுக்கு, அடுத்தவர் மனம் அறியும் இவ் ஆற்றலை ஒருமுறைக்கு மேல் பொருத்திக் காட்டுகின்றான் கவிஞன். வாலிக்கு அஞ்சி ஒளிந்து வாழ்ந்த சுக்கிரீவன் முதலியோருக்கு இரலை மலைநோக்கி வரும் வில்தாங்கிய இரு வீரர் அச்சம் அளிக்கின்றனர். அஞ்சி, முழையில் ஒளிந்த தன் மன்னனுக்காக, மாணவ உருவம் தாங்கி, அவரை அறிய மறைந்து வருகின்றான் அனுமன். இராம இலக்குவரின் பளிங்கன்ன முகங்களே அவர் உணர்வனைத்தையும் உணர அனுமனுக்கு வாயிலாக அமை கின்றன. விட்டுவிலகுதற் குரியரா, எதிர்த்தற்கு உரியரா எதிரே சென்று வரவேற்றற்கு உரியரா, நட்புக் கோடற்குத் தக்கோரா என 'நோக்கி'யே உணர அனுமனின் உளவியல் அறிவு உதவுகின்றது. அவர்கள் இயல்பையும், வரும் நோக்கத்தையும் சிக்கறஉணர்ந்துகொள்கின்றான். தருமத்தையும்நன்னடையையும் தமக்கு உரியஅரும்பொருளாகமதிக்கும் தன்மைஉடையவர் அவர் எனவும்,அருமருந்து அனைய பொருளொன்று இடையே இழக்கப் பட்டதால், அதனைத் தேடி வருகின்றனர் எனவும் உணர் கின்றான் (3757). அத்துடன்,

கதம் எனும் பொருண்மை இலர்; கருணையின் கடல்
அனையர்,
இதம் எனும் பொருள் அலது, ஓர் இயல்பு உணர்ந்திலர்
இவர்கள்;
சதமன் அஞ்சுறு நிலையர்; தருமன் அஞ்சுறு சரிதர்;
மதனன் அஞ்சுறு வடிவர்; மறலி அஞ்சுறு விறலர் (3758)

என, அவர்கள் சினமின்மையும், கருணையும், அறமும் உடையவர் என்பதனை உணர்கின்றான். இவ் ஆற்றலால்போலும் அவனைக் கம்பன், 'தன் பெருங் குணத்தால் தன்னைத் தான் அலது ஒப்பு இலாதான்' (3759) என்கின்றான்.

சீதையைத் தேடிச்சென்ற விடத்தும், அனுமனிடம் இவ் உளவியல் அறிவுச் சார்பினைக் காட்டுகின்றார். அரக்கர் மாளிகைகள் பலவற்றில் புகுந்து புறப்பட்ட அவன், துயிலும் வீடணனையும் காண்கின்றான். கருநிறத்தோர்பால் ஒளித்து வாழ்கின்ற தருமம் அன்ன வீடணனை, அவன் உணர்வைத் தன் உணர்வினால் உணர்ந்த அனுமன், 'குற்றம் இல்லது ஓர்

குணத்தினன் இவன்' (4971) எனக் கூறுகின்றான். இங்கும் அனுமனின் நுண்ணறிவு வெளிப்படுகின்றது. இவ்வாறு விடணனை முழுமையாக உணர்ந்தமை பற்றியே, பின்பு அவன் 'அடைக்கலம்' என இராமன்பால் வந்தவிடத்து, பிறரைப் போலன்றி, அவனுக்காகப் பேசமுடிகின்றது நுணங்கிய கேள்வியனான அனுமனால். ஒருவன் வஞ்சகன் ஆயின், அவன் முகத்தைகண்டபோதே அதைத்தெரிந்துகொள்ள இயலும் என்பது அனுமன் கூற்று; அவ்வாறே நன்மையையும் முகங்களே காட்டும்.

உள்ளத்தின் உள்ளதை, உரையின் முந்துற
மெள்ளத் தம் முகங்களே விளம்பும், ஆதலால்
கள்ளத்தின் விளைவு எலாம் கருத்து இலா இருள்
பள்ளத்தின் அன்றியே வெளியில் பல்குமோ (6452)

புற நிலையால், அகநிலையை அறியும் இப்பாங்கினை அனுமனிடம் மட்டுமன்றி, அவனைக் கண்ட இராமனிடமும் அமைப்பான் கவிஞன். நுணங்கிய கேள்வியனாகவும் வணங்கிய வாயினனாகவும் அவன் உரைத்த மாற்றம்கேட்ட இராமன், தேற்றம் உற்று, இவனின் ஊங்குச் செவ்வியோர் இன்மை தேறி' அமைவதோடு, 'ஆற்றலும், நிறைவும், கல்வி அமைதியும் அறிவும் என்னும் வேற்றுமை இவனோடு இல்லையாம்' (3767) என உணர்கின்றான். குகன், முதலில் ஐயுறலையும், பின்பு பரதனின் திருமேனி நிலையும், நகை இழந்த முகமும் கண்ணுற்றுத் தெளிவடைதலையும் (2330-32) இவ் உள்ளுணர்தலின்பாற் படுத்தலாம்.

முன்பின் காணாதவரை, அவர் உளநிலையை, முகம் கண்டு உணரும் இந்நுண்ணறிவு நிலையிலிருந்து சிறிது வேறுபட்டு அமைகின்றது 'குறிப்பறிதல்'. பிறர் அக ஆழங்களை உணர்வது அறிவாலும் பழக்கத்தாலும் ஏற்படுவது போலவே, குறிப்பறிதலிலும் பட்டறிவு காரணமாக அமைகின்றது. முன்னதில் அறிவுறுத்தல் இன்றி, தானே அறிதல் மட்டும் அமைய, பின்னதில் குறிப்பாக அறிவுறுத்தலும், அக்குறிப்பை உணர்தலும் ஆகிய இருநிலையும் அமைகின்றன. அகத்திற்கும், புறத்திற்கும் இக் குறிப்பறிதல் தேவையானதாக அமைகின்றது. இதனை, வள்ளுவர், பொருட்பாலிலும் (71) இன்பத்துப்பாலிலும் (110), அமைக்கும் குறிப்பறிதல் அதிகாரங்களும் விளக்குகின்றன. யான் கண்டனையர் என் இளையரும் எனப் பிசிராந்தையார்

குறிப்பதிலும் இக் குறிப்பறிதலின் முதன்மை வெளிப்படுவதாகத் தோன்றுகின்றது.

மனத்தில் எழுந்த எண்ணத்தை-கருத்தைப் பிறருக்கு அறிவுறுத்த, சொல் பயன்படாதவிடத்தும், தேவைப்படாத விடத்தும், தகுதியாகப் பொருந்காத விடத்தும் குறிப்புணர்த்தல் அமைகின்றது. எல்லாப் புலன்களுள்ளும் சிறந்ததாகவும் சீரிய தாகவும் அமையும் கண்களே பெரும்பாலும் குறிப்புணர்த்தப் பயன்படுகின்றன. உடலுக்கு விளக்கமாகவும் ஒளியாகவும் அமையும் அக் கட்புலனே குறிப்புணரவும் வாயிலாகப் பொருந்து கின்றது எனலாம்.

பொது இடத்தில், பலர் முன்னிலையில், செய்திப் பரிமாற்றம், பிறர் அறியாவண்ணம் நிகழவும் இக்குறிப்புப் பயன்படுகின்றது. ஒன்றைக் கூறும் போது பிறிதொரு பொருள் குறிப்பாகச் சுட்டப்படும் குறிப்புப்பொருள் நிலையினை உணர்வதற்குச் சூழல் உணர்வும் கவனமும் அறிவும் தேவைப் படுவதினும் மிகுதியாகக் குறிப்புணர்தலுக்கு உளவியல் அறிவு பயன்படுகின்றது. சொற்கள் இடைபுகுதலின்றி ஒரு உள்ளம் பிறிதொரு உள்ளத்தைச் சில குறிப்புகளால் உணரும் இந் நிலையையும், அக் குறிப்புக் கேற்பச் செயற்படும் பாங்கையும் கம்பன் பன்முறை தன் காப்பியத்தில் அமைக்கின்றான்.

வேள்விகாத்து, தவமுனியுடனும் இளவலுடனும் மிதிலை செல்லும் இராமன், சனகமன்னன் ஆணைப்படி கொணர்ந்த கார்முகத்தைக் காண்கின்றான். அப் பெருவில்லின் பெருமையை உரைத்த சதானந்த முனிவர், சிலையிறுத்துச் சீதையைப் பெறும் ஆற்றலின்மை பற்றித் தேர்வேந்தர் ஒளித்ததால், என்றும் இனி மணமும் இல்லை என்று இருந்தோம்; இவன் வில்லை யேற்றினால் நன்று; சீதையின் நலமும் பழுதாகாது என முடிக் கின்றார் (689). தன்விருப்பினை-உள்ளக்கிடக்கையை இங்குவெளிப் படுத்துகிறார். விசுவாமித்திரர் இதனை எல்லாம் முறையே நினைந்து, சடைமுடி துளக்கி இராமனின் முகம் பார்க்கின்றார். குறிப்பு உணர்த்துகின்றார். முனிவர் உள்ளத்து எண்ணங்கள் அனைத்தும் இராமனுக்குத் தெளிவாகின்றன. அவர் குறிப் புணர்ந்து, வில்லை நோக்குகின்றான், அதை நோக்கி எழுகின்றான்.

*நினைந்தமுனி பகர்ந்த எலாம் நெறி உன்னி, அறிவனும்தன்*
*புனைந்த சடைமுடி துளக்கி,போர் ஏற்றின் முகம் பார்த்தான்*

வனைந்தனைய திருமேனி வள்ளலும், அம் மா தவத்தோன்
நினைந்த எலாம் நினைந்து, அந்த நெடுஞ்சிலையை
நோக்கினான் (690)

மாற்றரசன் அவையில்,பல்லோர் முன்னிலையில், மாதவத்தோன் மாமன்னன் மைந்தனை ஆணையிட்டுச் செயற்படுத்தாது, சொற்களால் வேண்டாது, குறிப்பால் விருப்பைப் புலப்படுத்தலின் பொருத்தம் சுட்டுதற்கு உரியது. வாலறிவனான இராமனும் அக்குறிப்பினை உணரும் உள அறிவு ஆற்றலினனாக அமைவதால் விருப்பு முழுமை பெறுகின்றது.

அயோத்தியா காண்டம், சுமந்திரன் நோக்கால் உணர்த்திய குறிப்பை முனிவன் பரதனுக்கு வாக்கால் உரைத்தலைக் காட்டுகின்றது. குறிப்புணர்த்தும் ஆற்றலில் வல்லனாக அமைந்த சுமந்திரனை, 'புலமை உள்ளத்தான்' எனக் குறிப்பிடுகின்றான். கம்பன். சொல்லப் படவேண்டிய செய்தியை நினைவூட்டுவது போன்று இங்குக் குறிப்பு அமைகின்றது.

கொற்றவர்க்கு உறுபொருள் குறித்த கொள்கையான்
முற்று உணர் முனிவனை முகத்து நோக்கினாள் (2246)

நோக்கினால் சுமந்திரன் நுவல லுற்றதை
வாக்கினால் அன்றியே உணர்ந்த மாதவன் (2247)

குறிப்பு, செயல் நிலையாக வெளிப்படலை அங்குக் காண, சொல் நிலையில் வெளிப்படலை, 'தெரியக் கூறும்' முனிவர் மொழியில் காண்கின்றோம் (2247-54).

நோக்கால் நுவலுதலும், வாக்கு இன்றியே உணர்தலுமான இக் குறிப்புணர்த்தல் உலகியலின் மிக இயல்பான உளவியல் அறிவுப் புலப்பாடாக அமைகின்றது எனக் கூறலாம். மந்திரக் கிழவர் மனநிலை உணர்ந்து வசிட்டன் பேசுதல் (1345) இராமன் முடியேற்பதற்கு மகிழ்ந்த அவையோரின் மனநிலையை, 'முழுதும் எண்ணுறும் மந்திரக் கிழவர் தம் முகத்தால் எழுதி நீட்டிய இங்கிதம்' (1357) எனச் சுட்டுதல், இராமன் குறிப்பினால் இலக்குவன் சடாயுவுக்கு விடையிறுத்தல் (2722), வீடணன் அடைக்கலத்தின் போது இராமன் அனுமனைக் குறிப்பின் வினவல் (6442), தாடகையைப் பெண் என நினைந்து கணைதொடாத இராமன் மனக் குறிப்பு அறிந்து முனிவர் தெளிவுறுத்தல் (374) எனக் கம்பனும் இதனைப் பன்முறை ஆள்கின்றான்.

நல்லவருக்கு எல்லாவற்றிலும் நன்மை தென்படுவது போலத் தீயோருக்கு, அனைத்திலும் தீமை தென்படுகின்றது. நல்லன வற்றிலும் தீமையே காண அவர்கள் தீமைநிறைந்த உளவியல் காரணமாகின்றது. தீயோரின் இவ் உளநிலை யுணர்ந்த உலகியல் கவிஞன் தன் காப்பியத்திலும் அதனைப் பொருத்திக் காட்டு கின்றான். கள்வனான பொற்கொல்லன் தூயோனான கோவலனைக் கள்ளன் எனக் கூறும் பாங்கினை இளங்கோ சிலம்பில் படைப்பதுபோன்று, அரக்கியான சூர்ப்பணகை, சீதையை அரக்கி எனக் கூறலைக் கம்பன் காட்டுகின்றான். தன் மனத்து வஞ்சத்தை, தான் பகைகொண்டவரிடம் இருப்பதாக மொழிதல் இவர்தம் இயல்பு. இராமன்பால் காமுற்று மயங்கி நிற்கும்சூர்ப்பணகைக்கு,கடிகமழ்சாலையில்நின்றுசீதை திடீரென வெளிப்போந்தமை பல்வகை எண்ணங்களைத் தோற்றுவிக் கின்றது. இறுதியில், தன்னைப்போல் இடையே வந்த தகையோளாக அவளைக் கருதி, தன் இயல்பும் நிலையும் அவள் மேல் ஏற்றி மொழிகின்றாள்.

வரும் இவள் மாயம் வல்லள்; வஞ்சனை அரக்கி; நெஞ்சம்
தெரிவு இல; தேறும் தன்மை,சீரியோய் செவ்விது அன்றால்,
உரு இது மெய்யது அன்றால்; ஊன்நுகர் வாழ்க்கையாளை
வெருவினென்; எய்திடாமல் விலக்குதி,வீர, என்றாள் (2794)

சீதையின் மீது, தன் செயல் குண இயல்பு நிலைகளையே முழுமையாகப் பொருத்திக் காட்டுகின்றாள். அரக்கி எனவும், வஞ்சனை உடையவள் எனவும், மாயம் வல்லவள் எனவும், அழகிய உருவம் உண்மை வடிவம் அன்று எனவும், நெஞ்சம் தெளிவாக அறிதல் இயல்பன்று எனவும், ஊன்நுகர் வாழ்க்கையள் எனவும், அவளை அனுமதித்தல் செவ்விது அன்று எனவும், எய்திடாமல் விலக்கு எனவும் அவள் கூறியது அனைத்தும் முன், பின் நிலைகளில் அவளுக்கே உரியனவாகி அமைவனவாம்.

உளவியல் அடிப்படையில் பாத்திரங்களைப் படைத்து அவற்றின் பேச்சையும் அமைத்தது போன்று, உரையாடலிலும், வாதப் பிரதிவாதங்களிலும் கதைமாந்தரின் உள்ளமும் உணர்வும் வெளிப்படும் வண்ணம் அமைக்கின்றான் கவிஞன். கைகேயியின் மனத்தை மாற்ற இருவர் முனைகின்றனர். கூனி, அவள் மனநிலைக்கும் தன் மன நிலைக்கும் ஏற்பப் பருப்பொருள் வாதம் பயன்கொண்டு வெற்றி பெறுகின்றாள்; தசரதனோ

தன்மனத்திற்கு ஒத்த ஆயின் கைகேயியின் திரிந்த மனத்திற்கு ஒவ்வாத நுண்பொருள் வாதம் கையாண்டு தோல்வியடை கின்றான். சேடியின் மனநிலைக்கு ஏற்ப அவள் சொற்களும், மன்னனின் உளநிலைக்கு ஏற்ப அவன் வார்த்தைகளும் அமையும் வண்ணம், உளவியல்பாங்கு பொருந்தப் படைக்கின்றான் கம்பன். உலகியற் படிப் பேசும்வன்மை கூனியிடம் அமைவதால் அவள் வெற்றியடைகின்றாள்.

தூமொழி மடமானான கைகேயி, சிந்தை திரிந்து, உள்ளம் கோடிய கொடியளாக மாறுதற்குத் துன்னருங் கொடுமனக் கூனி காரணம் ஆகின்றாள். தெய்வக் கற்பினளாக விளங்கிய அவளுக்குத் தலைவனின் அறம் சார் கூற்றுகளும், அவன் உறும் வேதனையும், வேண்டுதலும் கூடப் பாதிப்பு ஏற்படுத்த இயலாததாகி விடுகின்றன. கூனியைக் காட்டிலும் தசரதன் அறிவுடையவன், ஆற்றலுடையவன், பெருமையுடையவன், உரிமையுடையவன், அரசன், கணவன்; இருப்பினும், இறுதி மூச்சுவரை வாதாடித் தோல்வி அடைகின்றான்.

எந்நிலையிலும் தசரதனுக்கு ஈடாகாது, சேடியாக இருந்த மந்தரை வெல்வதற்கு, அவள் உலகியல் அறிவும், பேச்சுத் திறனும், வாத வன்மையும், கைகேயியின் மனத்தைத் தொடும் அளவிற்குச் செல்லும் ஆழப் பார்வையும், அவளை முழுமையாக அறியும் உளவியல் அறிவும் காரணமாக அமைகின்றன. உலக இயற்கையோடு ஒட்டி நின்று, பருப்பொருள் வாதமாக, எப்படிக் கூறினால் கேட்போர் மனத்தில் பதியும் என்பது உணர்ந்து, முதலில் ஏற்பட்ட தோல்வியால் பின்னிடாது, அதற்கேற்ப முயன்று செயல்படுகின்றாள். மனத்தின் ஆழத்தில் மறைந்து கிடக்கும் பொறாமை உணர்வைத் தூண்டி, மாற்றாள் பெறப் போகும் மாண்பைப் பெரிதுபடுத்தி உரைத்து, அதனால் இவள் பெறலாகும் சிறுமையை விளக்கி முதற்படியில் வெற்றியுறு கிறாள். கொழுந்துவிட்டெரியும் பொறாமை நெருப்பில் நெய்வார்ப்பதாக, மாற்றாள்பெற்ற செல்வத்தால் இவளும் இவளைச் சார்ந்தாரும் உறும் இன்னல்கள், அவள் கையை நோக்கி இவள் வாழும் இழிபிழைப்பு என்பன பெரிதுபடுத்தப்படு கின்றன. பருப்பொருள் நிலையில் வருங்காலம் காட்சிப்படுத்தப் படுவதுடன், நிச்சயமற்ற இவள் வாழ்வு நிலையும் சுட்டப்படு கின்றது.

தூண்டும் இன்னலும் வறுமையும் தொடர்தரத் துயரால்
ஈண்டு வந்து உனை இரந்தவர்க்கு, இருநிதி, அவளை
வேண்டி ஈதியோ, வெள்குதியோ, விம்மல் நோயால்
மாண்டு போதியோ, மறுத்தியோ, எங்ஙனம் வாழ்தி (1478)

உலகியல் நோக்குடைய எந்த மனமும், உறுதியிழந்து தன் வாதத்தின் வழிப்படும் வண்ணம் ஆற்றலுடையதாக அமைகின்றது கூனியின் பேச்சு; 'எனக்கு நல்லையும் அல்லை' (1471) எனச் சினந்து வெறுத்துக் கூறியவளே, 'எனை உவந்தனை, இனியை என்மகனுக்கு' (1485) என உவந்து, அவளிடமே அறிவுரை நாடும் அளவிற்கு வரும்படி செய்கின்றது.

ஒருவரைத் தெளிவாகப் புரிந்து கொள்ளுதலும், தன் விருப்புக்கும் மனநிலைக்கும் ஏற்ப அவரைத் திருப்பிக் கொள்ளுதலும் உடைய உளவியல் வல்லாரின் ஆற்றல் நிலை இதில் புலப்படுவதாகக் கொள்ளலாம். ஒரு குறிப்பிட்ட மன நிலையினர், ஒரு குறிப்பிட்ட சூழலில் எவ்வாறெல்லாம் எண்ணுவர், பேசுவர், ஒழுகுவர் எனவும் உளவியலார் அறுதியிடுதற்கு ஏற்பக் கம்பன், மறைந்து எய்த இராமன் வாளியால் வீழ்ந்த வாலியைப் படைக்கின்றான்.

தான் தன் தம்பியுடன் பொருதும் போரில், யார் இடை வரமாட்டான் என நினைத்தானோ, அவனே இடைபுகுந்து மறைந்து நின்று, தன்மீது கணை தொடுத்தது கண்டு திகைக்கின்றான் வாலி; சிந்தை சோர்கின்றான்; உயிர் அளிக்கும் தருமமே மாறுமோ என அயிர்க்கின்றான்; தன் நம்பிக்கைக்கு உரிய நாயகன் செயலோ என உணர்வழிகின்றான்; தன் நம்பிக்கை வீணானதே எனக் கவல்கின்றான்; இறையே திறம்பினால் மற்றோர் என்ன செய்யார் என ஐயுறுகின்றான்; தன்னைக் காரணம் இன்றித் தண்டித்து விட்டானே எனக் கோபிக்கின்றான்; தன்னால் உயர்வாக மதிக்கப்பட்டவன் இவ்வாறு தாழ்ந்து நிற்கின்றானே என்று ஏங்குகிறான் நீதியினின்று நீங்கினானே என இரங்குகிறான்,

அரக்கர் ஓர் அழிவு செய்து கழிவரேல், அதற்கு வேறுஓர்
குரக்கு இனத்து அரசைக் கொல்ல மனு நெறி கூறிற்று
உண்டோ
இரக்கம் எங்கு உகுத்தாய், என்பால் எப் பிழை கண்டாய்
அப்பா

பரக்சமி இது நீ பூண்டால் புகழை யார் பரிக்கற்பாலார் (4021)

எனக் கேள்விக் கணைகளைத் தொடுகின்றான். பாத்திரத்தின் மனநிலையோடு ஒன்றிக் கவிஞன் படைக்கும் இச்சித்திரம் அவனை அறிவியல் வல்லுநனாகக் காட்டுகின்றது.

கோலங்காண் படலத்தில், சீதையைத் 'தெய்வம்' எனக் கொண்டு கைகூப்பிய அவையோரைக் காட்டுமிடத்திலும் உளவியல் அறிவு வெளிப்படுகின்றது. உடலின் செயல்களுக்கு அடிப்படையாகவும், புலன்கள் மேல் ஆட்சி செலுத்துவதாகவும் மனம் அமைதலால், மனமும் பிற அந்தக் கரணங்களுமுடைய உயிர்கள் எல்லாம், அவ் அழகிய திருமகளைத் தெய்வம் என உணர்ந்து தலைமேல் கைகள் கொண்டதாகக் காட்டுகின்றான் கம்பன்.

நைவளம் நவிற்று மொழி நண்ண வரலோடும்
வையம் நுகர் கொற்றவனும், மாதவரும், அல்லார்
கைகள் தலை புக்கன; கருத்துளதும் எல்லாம்
தெய்வம் என உற்ற; உடல்சிந்தைவசம் அன்றோ (1150)

சிந்தை வயப்பட்ட உடல் செயல்பாட்டின் இவ்வுலகியல் பாங்கு உளவியலையும் உட்கொண்டு அமைகின்றது.

உளவியல் வல்லுநனாகக் காப்பியத்தில் வெளிப்படுகின்ற கம்பன், அரசியல் அறிஞனாகவும் கதைக்களனில் புலப்படுகின்றான். அயோத்தியரசும், சுக்கிரீவனின் அரசும், அரக்கனின் அரசுமாகக் காப்பியக்களன் பல அரசுகளையும் அரசரையும் தருவதனால், அரசியல் எண்ணங்கள் வெளிப்பட வாய்ப்பு அமைகின்றது. சோழ நாட்டு அரசியல் சூழலில் கம்பன் வாழ்ந்ததால், மூல நூலின் எண்ணங்கள் ஒரு பாலாகத் தானும் கண்டுணர்ந்த கருத்துகளை இணைத்து அளிக்கும் பாங்கும் பொருந்தியிருக்கலாம்.

அரசியற் படலம், தயரதனின் ஆட்சியைக் காட்டுவதன் மூலம் ஒரு இலட்சிய அரசியலைப் படைக்கின்றது. அரசன் உயிராக மக்கள் உலகாக வாழ்ந்த பண்டை உலக அரசியலுக்கு மாறாக, அரசனே உடம்பாக, வாழும் மக்கள் எல்லாம் உயிராக அமையும் நிலையைக் காட்டுகின்றான் கம்பன் (177). அரசன் தன் உயிரே போன்று உலக மக்கள் அனைவரின் உயிரையும் பாதுகாத்துப் போற்றியதால், இம் மறிநிலை அமைகின்றது

எனலாம் (1423). சென்று வாழ் உயிரும் நின்று வாழ் உயிரும் காக்கும், எங்கும் நின்று நிலவும் கதிரவனாக மன்னன் கருதப்படு கின்றான் (178). தன் நலனில் மட்டும் அக்கறை உடையவனாக அன்றி தன் நாட்டு மக்கள் அனைவரின் நலனிலும் சிந்தை கொண்டமைவன் சிறந்த அரசன்; உழவன் பாதுகாக்கும் வயல் போன்று, பகை எனும் களை நீக்கி, அன்பு எனும் நீர்பாய்ச்சி, அறிவு எனும் நல் உரம் இட்டு, கடமை யுணர்வால்ஆழ உழுது, கல்வி எனும் பருவத்தால் விளைவுறச் செய்கின்றான். உலகிய லின் இவ் உழவுக் காட்சியை அரசியலில் பொருத்திக் காட்டி, அரிதின் பெற்ற அருமையான செல்வத்தை ஓம்பிக் காப்பது போன்ற அரசாட்சியைப் புலப்படுத்துகின்றான் கவிஞன்.

எய் என எழுபகை எங்கும் இன்மையால்
மொய் பெறாத் தினவு உறு முழவுத் தோளினான்
வையகம் முழுவதும் வறிஞன் ஓம்பும் ஓர்
செய் எனக் காத்து, இனிது அரசு செய்கின்றான் (179)

தசரதனின் தனிப் பெருமை சுட்டும் போது எடுத்து மொழியும் நல்லியல்புகள், ஒரு சிறந்த அரசனுக்குரிய இலக்கணமாக அமை கின்றன. அறிவும், அருளும், அறனும், அமைவும், வீரமும்' ஈகையும், நீதியும் அவனுக்கு உரியன (169). அன்பால் தாயாகவும், நலமளிப்பதால் தவமாகவும், உய்யும் கதி அளித்தலால் சேயாக வும், கல்விக்கு அறிவாகவும் நோய்க்கு மருந்தாகவும் அமையும் மன்னன் நிலையும் இங்குப் புலப்படுகின்றது (171).

நல்லரசனின் நல்லாட்சி, வளமுடை உலகநிலையாக அமைவதனை தசரதன் வினாவுக்கு வேத்தவையோர் தந்த விடை புலப்படுத்துகின்றது. ஊருணி நிறைந்தது போன்றும், பயன்மரம் பழுத்தது போன்றும், பருவமழை பொழிவது போன்றும், கழனியில் பாயும் நதியின் நீர் பெருகியது போன்றும், வரவேற்கத் தக்கதாகவும், இன்பமும் இனிமையும், வளமும் தருவதாகவும் நல்லாட்சி அமைதலுக்கு இவை குறியீடாகின்றன (1394).

இராமனுக்கு வசிட்டன் கூறும் அறிவுரையில் அரசியல் உறுதிப்பொருள் பலவும் சுட்டப்படுகின்றன. காட்சிக்கு எளியனாகவும் கடுஞ்சொல் இல்லானாகவும் அமையும் அரசனை வள்ளுவன் சுட்டியது போன்று, பல நல்லியல்புகளுக்கும் களனாகி இலட்சிய மன்னனாகி அமைதல் வேண்டப்படுகின்றது.

இனிய சொல்லினன் ஈகையன் எண்ணினன்
வினையன் தூயன் விழுமியன் வென்றியன்
நினையும் நீதி நெறி கடவான் எனில்
அனைய மன்னற்கு அழிவும் உண்டாம் கொலோ (1424)

இராமன் சுக்கிரீவனுக்கு உணர்த்தும் நல்லரசு பற்றிய எண்ணங்களும் கம்பனை ஒரு அரசியல் வல்லுநனாகக் காட்டுகின்றன. வள்ளுவர் உணர்த்திய அரசியல் கோட்பாடுகள் பற்றிய பல எண்ணங்களும் இங்குக் கம்பனால் கொள்ளப்படுகின்றன (4123-30). அரசன் மக்களுக்குத் தாயாக அமைதலின் தேவை, பகை ஒறுத்தல், அறமுடை ஆட்சி, இன்சொல், தீமை செய்யாமை, செயல் ஆற்றல், காவல், நண்பர்-அயலவர்-விரவார் எனப் பகுத்துணர்தல், வெஃகாமை, அணுகாது அகலாது பழகுதல் எனப் பல இயல்புகள் சுட்டப்படுகின்றன.

நல்லரசுக்கு, நல்லாட்சிக்கு, அரசியல் தலைவனுக்கு நன்றே உதவும் மதிமந்திரியரின் தேவையும் காப்பியத்தில் சுட்டப்படுகின்றது. வாய்மைசால் அறிவின் வாய்த்த மந்திரமாந்தர் (4122), 'இந்திரற்கு இமையவர் குருவை ஏய்ந்த மந்திரக் கிழவர்' (1316) என இவரைச் சிறப்பிக்கின்றான் கவிஞன்.

குலம் முதல் தொன்மையும், கலையின் குப்பையும்
பல முதல் கேள்வியும், பயனும் எய்தினார்
நலம் முதல் நலியினும் நடுவு நோக்குவார்
சலம் முதல் அறுத்து, அருந் தருமம் தாங்கினார் (1318)

என அவ் அமைச்சர் மாண்பு சுட்டப்படுகின்றது. அரசனுக்கு அமைச்சன் மருத்துவன் போன்று அமைகின்றான். நல்லவும் தியவும் நாடி உதவுகின்றான்; காலமும் இடமும் அறிந்து செயற்படுகின்றான்; நீதி விடாது நிற்கின்றான்; மன்னன் முனிந்த போதும் மேற்சென்று இடிக்கின்றான்; உயர் பிறப்பும், நூலறிவும், கவரிமா அன்ன மானமும் உடையவனாக அமைகின்றான்; வந்தது கொண்டு வருவதைக் கணிக்கின்றான்; வினையையும் மாற்றியமைக்கும் பெற்றியினனாகின்றான் என அவர் பல்லியல்பினை எடுத்துமொழியுமிடத்தும் (1319-22) கம்பனின் அரசியல் அறிவு புலப்படுகின்றது. 'என் உணர்வு அனையநீர்' என அமைச்சரைத் தசரதன் சுட்டுவதிலும் (1325), 'அவன் மனம் அனையான்' (1361) எனத் தசரதனையும் சுமந்திரனையும் கம்பன் இணைப்பதிலும் மன்னனும் அவன் அறிவுச் சுற்றமும் கொண்ட நெருக்கம் புலப்படுகின்றது.

ஓர் அரசனின் ஆட்சி நீங்கி மாற்றரசனின் தலைமைக்கு அரசு மாறும் உலகியலைக் காப்பியக்களனிலும் காண்கின்றான் கம்பன். இத்தகைய மாற்றத்தால் அமைதியான ஆட்சி நிலை குலைதலும், மக்கள் குழப்பம் உருவாகலும், பல தீமைகள் நிகழ்தலும் கூடும். ஒரு நிறை அரசு, இவ்வாறு அரசியல் தலைவன் மாற்றச் சூழலால் நிலைகுலையும்போதும், அறிவும் பொறுமை யும் உடையோரின் பேருதவியாலேயே மீண்டும் நிலையும் நிம்மதி யும் பெற இயலும். வாலியின் ஆட்சியிலிருந்த அரசு, இராமனின் வாயிலாகச் சுக்கிரீவனுக்கு ஆய சூழலில், அவ் அரசுக்கு மாருதி யின் துணையின் தேவை புலப்படுத்தி இத்தகு செய்திகளைக் கூறுகின்றான் இராமன்.

நிரம்பினான் ஒருவன் காத்த நிறை அரசு இறுதி நின்ற
வரம்பு இலாததனை மற்று ஓர் தலைமகன் வலிதின்
கொண்டால்
அரும்புவ நலனும் தீங்கும்; ஆதலின் ஐய நின்போல்
பெரும்பொறை அறுவினோராய் நிலையினைப்
பெறுவது அம்மா (4143)

ஒரு பேரரசன் ஆண்ட நிலத்தில், அவன் மறைவுக்குப்பின், சிற்றரசர் பலர் தலையெடுத்தல் உலக இயல்பு. தலைவன் ஒருவன் இல்லா ஆட்சியில் தருக்கி எழும் இக்குறுநில மன்னரைக் கதிரவன் விழத் தோன்றும் புன்மாலையில் காட்டுகின்றார் இளங்கோ. கம்பன், இவ் அரசியல் நிலையை மாலை மலரும் சேதாம்பலில் சுட்டுகின்றான்.

உரைசெய் திகிரி தனை உருட்டி ஒருகோல் ஓச்சி உலகு
ஆண்ட
அரைசன் ஒதுங்க தலை எடுத்த குறும்பு போன்றது
அரக்கு ஆம்பல் (554)

இயற்கையிலும் அரசியலைக் காணும் அளவிற்கு அவ்அறிவில் தோய்வுடையவனாக அமைகின்றான் கம்பன்.

மந்திராலோசனை அவை கூடுதல், அரசியலில் இயல்பாகவும் இன்றியமையாததாகவும் அமையும் ஒன்று. இராவணன் மந்திரப்படலம் காட்டுவது தேவை காரணமாகக் கூட்டிய மந்திர அவையாக அமைகின்றது. மந்திரத்தொழில் நிரம்பிய முதியரும், சேனை நீள்கடல் தரம்பெறு தலைவரும் ஆலோசனை மண்டபத்தில் அரசனுடன் காணப்படுகின்றனர் (6076). மிக

முக்கியமான செய்தி பேசப்படுமிடத்தும், செய்திகள் புறத்துத் தெரியாது பாதுகாக்க வேண்டியவிடத்தும், மந்திர அவை கூடும் போது, பலர் விலக்கப்படலும், மிகச் சிலரே கொள்ளப்படலும் அமைகின்றது. 'பண்டிதர், பழையவர், கிழவர், பண்பினர், தண்டல் இல் மந்திரத் தலைவர் சார்க' (6077) அழைக்கப்படு பவர் அமைய, முனைவரும், தேவரும், மகளிரும், இளைஞரும். வண்டும், காற்றும் கூட தவிர்க்கப்படுதலை (6076) இராவணனின் மந்திர அவை காட்டுகின்றது. பேசுதலை உணர்தற்கு அரிய ஊமும், பொறி இலரும் பிறருமே ஏவலராக அமைதலையும் இரவில் கூடிய இராவணன் மந்திர அவை தருகின்றது (6786).

பகையுற்ற காலத்துக் குழுமிய இம்மந்திர அவைபோல் அன்றி, இளவரசனுக்கு முடிசூட்டல் செய்தி கூறக் கூடிய மந்திர அவையைக் கோசலத்தில் தசரதன் தலைமையில் காண் கின்றோம். மன்னன் கூறியதை மறுத்து மொழியாது விரும்பி யும் ஏற்றுப்பேசும் நிலை இங்கமைய, கருத்து வேறுபாடுகள் எழுவதைப் பகைவன் அவையில் காண்கின்றோம். செய்தி தெரிவிக்க மந்திர அவை மட்டுமன்றி, மன்னர் அவையும் கூடுவதையும் அயோத்தியில் பார்க்கின்றோம். மகனுக்கு முடி சூட்டற்கு இசைந்த மந்திரக் கூட்டத்திற்கும் பின், ஓலைபோக்கி வந்த மன்னர் குழாத்தினருக்குச் செய்தி கூறும் வேத்தவை (1392) நிலை இங்குப் பொருந்துகின்றது.

இவ்வாறு குறிப்பிட்ட தேவையும் நோக்கமும் இல்லாத போதும், பல்வகைச் சுற்றம் சூழ மன்னன் மணிமண்டபத்தில் வீற்றிருத்தலை மிதிலைக் காட்சி தருகின்றது (635). வில் இறுக்கவும், தூதுவரைக் காணவும், செய்தி கொணரும் ஓலையைப் படிக்கவும், தண்டனைக்கு உரிய வர்க்குத் தீர்ப்பு வழங்கவும், தன் குறையுணர்த்தி முறையிடவும் மன்னன் அவை, களனாக அமைதலைக் கம்பன் காட்டுகின்றான்.

அரசியலில், தூதுவர்க்குச் சிறந்த பங்கு அமைகின்றது. மிகுதியான கருத்து வேறுபாடும், பகையும், போரும் உள்ள காப்பியக்களன் தூதுக்கும் மிகுந்த இடம் அளிக்கின்றது. ஓலை கொணர்தல் அன்றி, வாய்மொழியாகவும் தூது அமைதலை அனுமன், அங்கதன் போன்றோர் தூது காட்டுகின்றன. பாசத்தால் கட்டுண்டு நின்ற அனுமனைத் தூதுவன் ஆனமையின்

கொல்லலாகாது என வீடணன் கூறும் (5914-21) நிலை அரச முறையைச் சுட்டுகின்றது. பகைவரின் தூதுவனைத் தண்டிக்க முயலலும் இங்கு அமைகின்றது.

போருக்கு எழுமுன் தூதுவிடுதல் அரசியல் நெறியாக அமைதலையும் இராமாயணம் காட்டுகின்றது. இராமன் முதற் போருக்கு முன், இளவல் மறுத்த போதும், நெறியிது என விரும்பி அங்கதனைத் தூதாக்குகின்றான். 'அறனும் அஃதேநீதியும் அஃதே' (6975) எனத் தம்பிக்கு உணர்த்தித் தூது விடுப்பது நீதிநூல் முறை என இராமன் வாயிலாகச் சுட்டுகின்றான் அரசியல் அறிஞன்.

அயர்த்திலென், முடிவும் அஃதே, ஆயினும் அறிஞர் ஆய்ந்த
நயத் துறை நூலின் நீதி நாம் துறந்து அமைதல் நன்றோ
புயத் துறை வலியரேனும், பொறையொடும் பொருந்தி வாழ்தல்
சயத் துறை, அறனும் அஃதே என்று இவை சமையச் சொன்னான் (6981)

ஓலையுடன் வந்த தூதினைச் சனகன் தயரதனுக்கு அனுப்பிய மணச்செய்தியில் காண்கின்றோம். அரசனுக்கு வரும் ஓலையாயினும் அதனை வாசிக்க 'வேறு ஒரு புலமகன்' (784) இருந்ததையும் அரசன் ஆணைப்படி ஓலலச்செய்தியை அவன் படித்து வெளியிடலும் அரசியல் வழக்காக அமைகின்றன. இராமனுக்கு முடிபுனையும் செய்தியை மன்னர் பலருக்குத் தெரிவிக்க, அவரை 'வருக' என அழைக்கும் உவணம் வீற்றிருந்த 'பொன் திணித் தோட்டு அரும் பெறல் இலச்சினை' உடைய ஓலை போக்குதலும் அரசமுறையாக வருகின்றது (1385). நற்செய்தியுடன் வரும் தூதுவர்க்கு வரையாது பெரும் பரிசில் அளித்தலும் அமைகின்றது (737).

அரசர்க்கு, வெளிப்படையாகத் தூதும் ஓலையும் போக்குதல் ஒருபுறமாக, மக்களுக்கு அரசியல் செய்தி தெரிவிக்க முரசறைதல் முறையாகக் காணப்படுகின்றது. தயரதன் ஆணையால் 'ஆனைமேல் மணமுரசு அறைதலும்' (738) வள்ளுவன் செய்தி தெரிவித்தலும் எழுச்சிப்படலம் தருகின்றது. இராமனின் இம் மணச்செய்தி போன்றே, முடி புனையும் செய்தியும் வள்ளுவரால் பேரிகொட்டித் தெரிவிக்கப்படுகின்றது (1431). இங்கு நகரணி செய்தற்காகவும், அங்கு மன்னரும் படையும் மக்களும் மிதிலை நோக்கி எழுவதற்காகவும் முரசச்செய்தி பயன்படுகின்றது.

அவ்வாறே, பரதன் இராமனை அழைத்து வருதல் பற்றிய செய்தியைத் தெரிவிக்கவும், தானையை விரைவில் எழுக என விளம்பவும் முரசு அறைவிக்க சத்துருக்கனிடம் கூறுகின்றான் (2264).

ஒற்றாடல் அரசியல் முறையாக அமைதலைக் கம்பன் காட்டுமிடத்தும் உலகியல் வெளிப்படுகின்றது. ஒற்றுக் கேள்விப் படலம், அரக்கர் குரக்குருவில் ஒற்றாட வந்ததனைக் காட்டு கின்றது. ஒற்றர் உருக்கரந்தும் உருமாறியும் வருதலும், அவர் கைப்பற்றப்படின் தண்டிக்கப்படுதலும், வன்மையும் ஆற்றலும் இல்லாத ஒற்றர் மாற்றார் கைப்படும்போது உண்மை உரைத்தலும் (6777), அவரையே தூதுச் செய்தியுடன் மீண்டு போக அனுமதித்தலும் (6778-83) அமைகின்றன.

அரசியலில், பகைவரிடமிருந்து தம்மைக் காக்கும் தற்காப்புக் கருவியாக அரண் பயன்படுகின்றது. அரசுக்குரிய அறுவகை அங்கங்களுள் அரணையும் இறுதியாகச் சுட்டினும் இன்றியமை யாததாகக் கொள்ளும் வள்ளுவர்வாக்கு இங்கு நினைக்கத் தக்கது. நகருக்குக் காவலாகவும் அழகாகவும் அமைந்த மதிலின் மாட்சியை அயோத்தியில் அமைக்கின்றான் அரசியல் அறிஞன் (100-105). மதிலரணுடன் நீரரணாக அகழியும் காட்டரணாகச் சோலையும் பொருந்துகின்றன. இஞ்சி சூழ் மிதிலை புனையும் நீள் கொடிப் புரிசை (464) என மிதிலை, அக்கடி நகரின் மதிற் புறத்துக் கொடிகளுடன் காட்டப்படுகின்றது (480-82). பகை வரும்போது ஆற்றலற்ற நிலையில் அரணின் வாயில்கள் அடைக்கப்படலைக் கிட்கிந்தை ஆட்சியில் கம்பன் அமைக் கின்றான் (4301-306). இலங்கையின் செம்பிட்டுச் செய்த இஞ்சி (7424),

> ஆழி அகழ் ஆக, அருகா அமரர் வாழும்
> ஏழ் உலகின் மேலை வெளிகாறும் முகடு ஏறி
> கேழ் அரிய பொன் கொடு சமைத்த, கிளர் வெள்ளத்து
> ஊழி திரி நாளும் உலையா மதில் (4896)

எனக் காட்டப்படுகின்றது. இலங்கையின் இவ் அரண்வலியை இராமனுக்கு வீடணன் உணர்த்தும் இடத்திலும் (6532-34) காண்கின்றோம்.

தற்பாதுகாப்பாக அரண் அமையப் பகை ஒறுத்தலுக்கும் பயன்படுவதாகப் படை வலிமை அமைகின்றது. உலக அமைதியையே நாடிய தற்காலத்திலும் படைபலத்திற்காகப்

பெரும்பொருள் செலவிடப்படுதல் அதன் முதன்மையை உணர்த்துகின்றது. வள்ளுவரும் அரசருள் ஏறாக அமைபவனுக் குரியனவற்றின் பட்டியலில் படையையே முதலில் கூறுகின்றார்.

'தீமைதீர் ஒழுக்கின் வந்த திறத்தொழில் மறவர்' அமைச்சர் போன்று (4122) அரசியலுக்கு இன்றியமையாதவர் ஆதலை இராமன் மொழியும் காட்டுகின்றது. அரசன் எங்குப் போயினும், கடலன்ன தானை உடன்போதல் இயல்பாக அமைகின்றது (236-37). தசரதனுடன் இராமன் மணங்காண நால்வகைப் படையும் எழுகின்றன (740-46; 1034-39). எதிர்கொள்ள வந்த சனகனும், 'கந்து அடு களிறும் தேரும் கலினமாக் கடலும் சூழ, வருகின்றான் (1032). இராமனை அழைத்து வர எழுந்த பரதனும் படை புடைசூழப் போகின்றான் (2268-92).

அரசப் பரிவாரமாக அமையும் இச்சேனையின் ஆற்றல் போரில் வெளிப்படுகின்றது. பல போர்களால் உருவாகும் இராமாயணக் களம், பல தானைகளையும் காட்டுகின்றது. கரன் வதை முதல் அரக்கப் படையும், தானைகாண் படலம் முதல் குரக்குப் படையும் காப்பியச் செயற்பாட்டில் பேரிடம் பெறுகின்றன. இராமன், இலக்குவன், அனுமன் போன்று ஒருபக்கம் தனியொருவர் அமைய, எதிர்ப்பக்கம் பெரும்படை அமைதலும் காணப்படுகின்றன. அரக்கர் பக்கம் நாற்படையும் (2898-907; 9311-19), கிங்கரவீரர் படையும் (கிங்கரர் வதைப் படலம்), பஞ்ச சேனாதிபதிகளின் தலைமையில் அமைந்த படையும், மூலபலப் படையும் எனப் படைப்பெருக்கம் அமைகின்றது. வானரக் குன்றுறழ் நெடும்படை, எழுபது வெள்ளப் பரப்புடையதாகக் காட்டப்படுகின்றது. வானரமும், எண்கின் ஈட்டமும் (4412) கொண்டு அமையும் இப்படை, நீலன் சேனைப்பதியாக, அறுபத்து ஏழு வீரர் தலைமையில், ஒருவருக்குக் கோடி வீரராகக் காணப்படுகின்றது (4449).

படைப்பெருக்கைக் காட்டும்போதே அதன் ஆற்றலையும், செயல்திறனையும் படைக்கின்றான் கவிஞன். வானர சேனையின் ஆற்றலும் சிறப்பும்,

தோயின், ஆழி ஓர் ஏழும் நீர் சுவறி வெண் துகள் ஆம்
சாயின், அண்டமும் மேருவும் ஒருங்குடன் சாயும்
ஏயின், மண்டலம் எள் இடஇடம் இன்றி இரியும்
காயின், வெங் கனல் கடவுளும் இரவியும் கரியும் (4429)

எனப் புனையப்படுகின்றது. மேரு மலையை ஒடிக்கும் வன்மையும், வான் முகட்டை இடிக்கும் ஆற்றலும், காற்றையும் கூற்றையும் பிடிக்கும் தன்மையும், ஏழ் கடலையும் குடங்கையில் குடிக்கும் இயல்பும் உடையதாகக் கற்பிக்கப்படுகின்றது (4431). மூலபலப் படையின் பான்மை உரைக்குமிடத்தும் இம் மீவியல் நிலையே சுட்டப்படுகின்றது.

ஒருவரே வல்லர், ஓர் உலகத்தினை வெல்ல
இருவர் வேண்டுவர், ஏழ் உலகத்தையும் இறுக்க
திரிவரேல், உடன் திரிதரும் நெடு நிலம், செவ்வே
வருவரேல் உடன் கடல்களும் தொடர்ந்து பின் வருமால்
(9310)

உலகியலுக்கு அப்பாற்பட்ட நிலையில் இப்படைகளும், படையின் வலிமையும் அமைக்கப்பட்டுள்ளது போன்றே, போர் வருணனையும் இயற்கை இகந்த நிலையில் காட்டப்படுகின்றது. போர் உலகியலாயினும், அதன் பொருதும் முறையில், படைக்கலச் செயற்பாட்டில், உலகியலுக்கு வேறுபட்ட நிலையையே காண்கின்றோம். வில்லாற்றலால் பொருதல் இராமஇலக்குவரிடமும், மற்போர் புரிதல் வாலி, சுக்கிரீவரிடையும், நாற்படையுதவியால் பொருதல் அரக்கரிடத்தும், சரம் மழு தோமரம் மணித்தண்டு சக்கரம் சூலம் 9757) எனப் பல்வகைப் படைக்கலங்களை உலகியலுக்கு ஏற்பக் கையாளுதல் அரக்கரிடமும் அமைந்து இயல்பு நிலை காட்டுகின்றன.

இவ்வாறு, அரசியலின் ஆட்சி, ஆக்கம், பாதுகாப்பு, பொருதல், வெற்றி எனப் பல்வகைத் துறைகளிலும் கருத்துச் செலுத்தித் தெளிந்த எண்ண வெளிப்பாடுகளுடன் அமைகின்றான் கம்பன். தான் எடுத்துக்கொண்ட பொருளை முழு வெற்றியுடன் படைப்பதற்கு அரசியல் அறிவும் மிகுந்த உதவி புரிதலை இத்தகு பகுதிகள் புலப்படுத்துகின்றன. புராணக் கதைச்சார்பு பற்றி, போர்க்களக் காட்சிகளில் மீவியல்பு பொருந்தினும், பிற அரசியல் சூழல்கள், உலக நிலைக்குப் பொருத்தமாகவும் விளக்கமாகவும் அமையும் வண்ணம் தரப்படுகின்றன.

இயற்கையை நுணுகி நோக்கும் இயல்பினனாக அமையும் கவிஞன், அப்பின்புலத்தில் அமையும் மனித உயிர்களுக்கு முதன்மை அளித்துக் கலைகள் புனைந்தபோதும், பிற உயிரினங்களையும் ஆழ்ந்தறியும் ஆர்வம் கொள்கின்றான்.

உயிரின வல்லுநன் போன்றன்றி, உலகியலில் அவ் உயிர்களின் செயலும், ஒழுக்கமும் கண்டு, சிந்தனையில் தூண்டுதல் கொள்கின்றான். மனிதன் கற்றுக்கொள்ள வேண்டிய பல இவ் உயிரினங்களிடையே சிதறி அமைதலைக் கண்டு, அவனுக்கு அறிவூட்டும் நோக்கில் தன் கலையில் அவற்றைப் பயன்கொள்கின்றான். எளிதில் புரியாததும் சிந்தைக்கு அகப்படாததுமாக அமையும் உண்மை-தத்துவங்கட்கு அவற்றின் மூலம் பொருளும் விளக்கமும்பெற முயல்கின்றான். இவ்வாறு அறிவு விளக்கத்திற்காகவும் இயல்புணர்தற்காகவும் உயிரினங்களை நுனித்துக் காணும் அறிவுப்பாங்கு கம்பனிடம் அமைகின்றது.

அளவால், ஆற்றலால் இன்னும் பிற பல பண்பு நிலையால் வன்மையானதாக அமையும் பெருமையுடைய யானையைச் சிற்றெறும்பு வருத்தும் உலகியல் இயல்பினில் ஒரு பேறாண்மையின் பிரதிபலிப்பினைக் காண்கின்றான் கம்பன். யானையுடன் எந்நிலையிலும் ஒப்பு உடையனவல்ல இவ் எறும்புகள்; தினைத் தானியத்தின் அளவினும் சிறிய வயிறுடைய சிற்றெறும்புகள், காட்டில் கட்டற்று வாழும் பெருவிலங்கான யானையையும் வருத்தும் பான்மையை, சிறுமையுடைய துன்பம், பெருமனங்களையும் பாதிக்கும் நிலை விளக்கப் பயன் கொள்ளுகின்றான்.

தினைத்துணை வயிறு இலாச் சிற்றெறும்புகள்
வனத்திடை கரிகளை வருத்தி வாழ்வன
அனைத்து உள உயிர்களும் யாவும் அங்ஙனே
மனத்து இடர் நீங்கினார் இல்லை மன்னனே (மிகை 232)

ஓர் உயிர் இன்னொரு உயிரை வருத்தும் உலகியலை இதில் மட்டுமன்றி மனித உயிரிடையும் காண்கின்றோம். சிற்றெறும்பு போன்ற கூனியின் சூழ்ச்சியால் ஒரு பேரரசனும், மைந்தனும், சுற்றமும், அப் பேரரசும் கலங்கும் கதைக்காட்சியே இங்குக் குறிப்பாக வெளிப்படுவதாகக் கொள்ளலாம். உலகில் எத்துணைப் பெரியவர்க்கும் துன்பம் இயல்பு என்பதும், அது எப்பண்பிலும் தன்மையிலும் அவரோடு ஒப்பு இல்லாதவரால் கூட ஏற்படலாம் என்பதும் உணர்த்த, இயற்கையின் உயிரினத்தில் நோக்கிக் கண்ட செய்தியைக் கவிஞன் பயன் கொள்ளுவதல் அவன் அறிவுப் பரப்பும் புலப்படுகின்றது.

எங்கும் பரந்தும், உள்ளும் புறமும் நின்றும் நிலவும் இறைமையைக் காட்டவும் உயிரின வாழ்வியல் ஒன்றைக் கையாளுகின்றான் கம்பன். இலந்தி, தன் உள்ளிருந்து தோன்றி

உமிழ்ந்த பொருளாலேயே வலை பின்னுகின்றது; பின் அதன்மீதே தங்குகின்றது. அந்நிலையில் அக்கூடு புறத்தும், அதை ஆக்கிய பொருள் அகத்தும் ஆகச் சிலந்தி கொண்டிருப்பதால், உலகை உண்டும் உமிழ்ந்தும் பின்பு அதில் வாழ்ந்தும் அமையும் திருமாலின் தன்மை பொருந்தி நோக்கப்படுகின்றது. இந்திரசித்தனின் பிரம்மாத்திரத்தால் மாண்டான்போன்று கிடக்கும் இலக்குவனைக் கண்டு தன்னுணர்விழந்து துயருறும் இராமனின் பனிதநிலையில், அவன் மனிதனன்று எனும் உண்மையைத் தேவர்கள் உணர்த்துவதில் கம்பன் இவ் உயிரின இயல்பைப் பொருத்துகின்றான்.

அண்டம் பலவும், அனைத்து உயிரும், அகத்தும் புறத்தும் உள ஆகி
உண்டும் உமிழ்ந்தும், அளந்து இடந்தும், உள்ளும் புறத்தும் உளை ஆகிக்
கொண்டு சிலம்பி தன் வாயின் கூர் நூல் இயையக் கூடு இயற்றி
பண்டும் இன்றும் அமைக்கின்ற படியை ஒருவாய், பரமேட்டி (8665)

புரிதற்கு அரியதும்,தெளிதற்குக் கடினமானதுமான இறைமையின் செயல்நிலையை, ஆக்கல்-அழித்தல்-காத்தல்-நிலவுதல் ஆகியனவற்றை மிக எளிமையாகவும் அருமையாகவும் சிலந்தியில் இணைத்துக் காட்டுவதன் நுண்மை நினைத்தற்பாலது.

உலகில் காணப்படும் மிகச் சிறு உண்மைகளையும் உயிரினம் பற்றிய கருத்துகளையும் பயனுடை ஆக்கமாகக் காப்பியத்தில் பொருத்துகின்றான் அறிவியல் வல்லுநனான கவிஞன். நற்கவிஞனாக, பல்துறை அறிவும் தேடி உணர்ந்து கொண்டவனாகக் கவிஞன் அமைவதாலேயே, பல்சுவை நிரம்பிய தெவிட்டாத தேனடையாகக் காப்பியத்தை அவனால் படைக்க முடிகின்றது. ஒரு சிறு தேனீயின் இடைவிடா முயற்சி, தன்னலம் மட்டும் கருதா உழைப்பு, பல தேனீக்களின் பல்வகை நிலையில் அமையும் கூட்டுமுயற்சி - இவையே ஒரு சுவை நிறைத் தேனடையை ஆக்கமுடியும் என இயற்கையில் கண்டு உணருகின்றான் கவிஞன். பல்வகை நூல்களிலிருந்தும் உலகின் பல்வகைத் துறைகளிலிருந்தும் கண்டும், கேட்டும், கற்றும், அனுபவித்தும் துளித்துளியாகச் சேர்தத அறிவின் பெருக்கு நெஞ்சில் நிறைந்து, உருமாறி, புதுச்சுவையும், நிறமும், தன்மையும் பெற்றுக் கவிதையாகப் புறப்பட்டுக் காவியமாகப்

பெருக்கெடுத்து ஓடுவதில் தேனீயின் முயற்சியையும் தேனொழுகும் கூட்டினையும் கவிஞன் காண்கின்றான்.

சரத நாள் மலர் யாவையும் குடைந்தன தடவிச்
சுரத நூல் தெரி விடர் என, தேன் கொண்டு தொகுப்ப
பரத நூல் முறை நாடகம் பயன் உறப் பகுப்பான்
இரதம் ஈட்டுறும் கவிஞரைப் பொருவின, தேனீ (4185)

கிட்கிந்தையின் கார்காலக் காட்சி வருணனையில் தேனீயை இவ்வாறு கம்பன் காட்டுமிடத்துத் தன்னையே உணர்த்துகின்றான் போல் தோன்றுகின்றது. காம நூன்முறை தெரிந்து இன்புறும் மனிதனின் விருப்போடு அறிவுத் தேட்டமும், அன்றன்று புதிது புதிதாகத் தோன்றும் அறிவியல்–கலைத்துறையனைத்திலும் மூழ்கி ஆழ்ந்து, குடைந்து அறிவு சேர்க்கும் பாங்கும், வெறும் இயலாக அமைந்துவிடாது, இசை-நாடக இணைவை விரும்பி ஆக்கும் பான்மையும், மலரின் தாதினையும் தேனையும் உண்டு உருமாற்றிச் சுவைசேர்ப்பது போன்று புதுச் சுவை அளிக்கும் தன்மையும் கவிஞனுக்கு இன்றியமையாததாகின்றன. ஒரு சிறு தேனீயின் செயலில், தெவிட்டாத தெள்ளமுது ஆக்கும் கவிஞனை உணர்த்தும் அளவிற்குச் செய்தி இருப்பதைக் கம்பனின் நுண்மாண் புலமை காட்டுகின்றது.

பல வேளைகளிலும் கற்பனை வானில் சிறகடித்துப் பறக்கும் கவிஞன், அவ்வப்போது இயல்புலகக் காட்சிகளையும் இணைத்துத் தருகின்றான். இயற்கை வளனை மிகுத்துக்கூறும் நாட்டுப்படலத்தில் சிறு குருவிகளின் இயல்புலகச் செயற்பாட்டையும் சேர்க்கின்றான். குப்பைமேடுகளில் கோழிகள் கிண்டிக் கிளறுதல் மிக இயல்பான காட்சி; இருண்ட இரவுகளில் நீலவானில் மீனாக மின்மினிப் பூச்சிகள் ஒளிர்வதும் இயற்கையில் காணக்கூடியதே. ஆயின், சிறு குருவிகள், ஒளி வேண்டியோ அன்றி ஏதேனும் கவர்ச்சி பற்றியோ மின்மினிப் பூச்சிகளைத் தம் கூட்டில் கொண்டு வைத்துக் கொள்ளுதல் இயற்கையை மிக நுனித்து நோக்குவார்க்கே புலப்படும் அரிய காட்சியாம் கம்பனின் காட்சிப்புலன் இதனையும் காணும் அளவிற்குக் கூரியதாக அமைகின்றது. சிறிது கற்பனை நயத்துடன், குப்பையைக் கோழி கிளறும்போது வெளிப்பட்ட மணிகளை, மின்மினி எனக் கருதித் தம் கூட்டில் கொண்டு குருவிகள் வைக்கும் என ஓவியப் படுத்துகின்றான்,

சூட்டுடைத் துணை தூநிற வாரணம்
தாள் துணைக் குடைய, தகை சால் மணி
மேட்டு இமைப்பன, 'மின்மினி ஆம்' எனக்
கூட்டின் உய்க்கும் குரீஇயின் குழாம் அரோ (58)

ஒன்றனைப் பிறிதொன்றாகக் கருதி மயங்கும் மனித மனத்தின் இயல்பினைப் பிற உயிரினங்களிலும் பொருத்திக் காட்டுவதாகவும் இது அமைகின்றது.

அறிவு, மிகுந்த பரப்பும் விரிவும் உடையது. எவ் எல்லையிலும் வரையறையிலும் அடங்குவது அன்று. என்றும் வளர்ந்து கொண்டிருப்பது. செழிப்புக் குன்றாதது. உயிரினப் பரிணாமம் போன்று மாறியும் புத்துருவாகியும் பெருகுவது. அண்டங்கள் போன்றும் உலகம்போன்றும் இயங்கிக்கொண்டிருப்பது. உயிர்கள் போன்று புதிது புதிதாகப் பிறந்துகொண்டிருப்பது. கற்றது கைம்மண் அளவு கல்லாதது உலகளவு என்பது போன்றே, அறியப்பட்ட அறிவு ஒருதுளி மட்டுமே. ஆயின் அவ் ஒருதுளியும் அண்டத்தைப் பிரதிபலித்தும், ஒளியை ஏழு வண்ணமாகப் பிரித்து அளித்தும், வன்மையும் ஆற்றலும் காட்டுவதுபோன்று, கம்பன் புலப்படுத்தும் அறிவு உலகமும் அமைகின்றது.

கம்பன் காப்பியம் ஓர் உலகம்; இல்லாதது எதுவும் இல்லாத உலகம் என்று கூறும் அளவிற்கு அனைத்தும் உடைய உலகமாக அமைகின்றது.

# கலையியல் உலகு

தொடக்க காலம் முதலே மனித வாழ்க்கையில் அறிவியல் போன்று கலையியலும் இன்றியமையாத இடம் பெற்றிருக் கின்றது. இருகற்களை உரசி நெருப்பு உருவாக்கிப் பயன் படுத்திய மனிதன், கரித்துண்டால் குகையில் சில படங்களும் வரைந்தான். தேவைகள் ஏற்பட்டபோது புது ஆக்கங்களில் ஈடுபட்டுக் கண்டுபிடிப்புகள் செய்த மனிதன் தன் பல புறத் தேவைகளையும் அகத்தேவைகளையும் நிறைவேற்றக் கலையி லும் ஈடுபட்டான்.

உலக வாழ்க்கையில், கலை இன்றியமையா இடம்கொண்டு, புறவாழ்வுக்குரிய பயன்படு கலையாகவும் அகவாழ்வுக்கேற்ற கவின்கலையாகவும் கிளைத்தது. உலகின் அனைத்துச் சலனங் களும் செயற்பாடுகளும் வாழ்க்கைக்காகவும் வாழ்க்கையாகவும் அமைந்ததுபோன்று கலையும் வாழ்க்கைக்காகவும் ஒரு சிலருக்கு வாழ்க்கையாகவும் அமைந்தது எனக் கூறலாம். பல்வகைத் தொழில்களும் மனிதனின் ஆக்கபூர்வமான கலையுணர்வுப் புலப்பாட்டைக் காட்டுகின்றன. எச்செயலிலும் ஓர் ஒழுங்குப் புலப்பாட்டோடும், அழகு உணர்வோடும், சில இலக்கணச் செவ்வி கருதியும் ஈடுபடும்போது, தொழிலும் செயலும் கலை வயப்படுகின்றன.

பயன்படு கலைகளில், பல்வகைத் தொழில் நிலைகளும் பொருத்திக் காணக்கூடியனவே. உலக வாழ்க்கை, தொழிலை மையமாகக் கொண்டு இயங்கி, பின்பு தொழில்மயமாகவே ஆகி விடுகின்றது. உலகியலைப் பின்புலமாக அமைத்துப் படைக்கப் படும் இலக்கியமும் இத்தொழில் நிலையை அங்கங்குச் சுட்டிச் செல்கின்றது. நால்வகை வருணத்தாரைக் கருதிய சமுதாயமும்

நால்வகைத் தொழிலுடன் நின்றுவிடவில்லை; மிகப் பல வகைத் தொழில்களை உரைத்து அமைகின்றது. அவ்வக் கால மன நிலைக்கேற்பவும், கவிஞனின் தனிச் சிந்தனைக்கேற்பவும் சில தொழில்கள் முதன்மை பெற்றும், பிற அத்துணைச் சிறப்புடன் சுட்டப்படாமையும் அமையலாம். பொருட் செயலுக்காகத் தலைவியைப் பிரிந்து நிலம் கடந்து செல்லும் சங்க அகத் தலைவனில் வணிகத்தொழில் சிறப்பிக்கப்படுவதுபோல் தோன்ற, 'சுழன்றும் ஏர்ப்பின்னது உலகம்' எனும் வள்ளுவர் வாக்கில் உழவுத்தொழில் ஏற்றம் பெறுகின்றது; இளங்கோ படைத்த காப்பியத்தில் தலைமகன் சூழலால் வணிகத்தொழில் உயர்த்தப்பட, கம்பன் காவியத்தில் அரசர் தொழிலும், முனிவர் செயலும் முன்னிற்பதாகத் தோன்றுகின்றன.

எத்தொழில் உயர்ந்ததாயினும், சிறந்ததாயினும், அவ்வொரு தொழிலால் மட்டும் உலகம் நிலை நிற்பதில்லை. பல்வகைத் தொழில்வளமும், வளர்ச்சியும், இயக்கமுமே உலகை ஆக்கபூர்வ மாக்கி உதவுகின்றன. எனவே உலகியல் நோக்குடைக் கவிஞனான கம்பனும், பல்தொழில் அறிவைக் காப்பியத்தில் கையாள் கின்றான். நாட்டு நகரப் படலங்களில் நானிலத்தின் தொழில் களும் சுட்டப்படுகின்றன. கரும்பாலை (34), உழுதல் (38, 49), கடல் வணிகம் (50), தயிர் கடைதல் (59), யானைபிடித்தல் (63) என இயல்பான வாழ்வுநிலைப் புலப்பாட்டுடன் இவை பொருந்துகின்றன.

பயன்பாடுடையதால் தொழிலாக அமைந்தபோதும், அழகும் செவ்வியுமுடைமையால் கலையாக மிளிரும் கட்டிடக் கலை பற்றிப் பலபட உணர்த்துகின்றான் கவிஞன். புகார் நகர் அமைப்பும், ஆடலரங்கும், மதுரை மதிற் பொறிகளும் இளங்கோவை ஒரு பெருங்கட்டிடக்கலை வல்லுநனின் அறிவுடன் புலப்படுத்துவது போன்று மாடங்களும், மாளிகை களும், வாயில்களும், மதில்களுமுடைய நகர அமைப்புப் பன் முறை கம்பனைக் கட்டிடக்கலைஞனாகப் புலப்படுத்துகின்றது. அறையும் ஆடரங்கும் மடப் பிள்ளைகள் தரையில் கீறிடின் தச்சரும் காய்வரோ' (9) என அவையடக்கத்திலேயே இக்கலை யுணர்வினைவைக் கம்பனிடம் காண்கின்றோம்.

'மயன் முதல் தெய்வத் தச்சரும் தம்தம் மனத்தொழில் நாணினர் மறந்தார்' (96) எனும் வண்ணம் அழகுடையதாக

அமைகின்றது அயோத்தி நகரம் புலப்படுத்தும் கட்டிடக் கலை. மதிலின் மாட்சியைப் பேசுமிடத்து,

நால்வகைச் சதுரம் விதிமுறை நாட்டி
நனி தவ உயர்ந்தன, பனி தோய்
மால் வரைக் குலத்து இனி யாவையும் இல்லை (100)

என்பதில், அளவு பற்றிய கவிஞரின் அறிவு புலப்படுகின்றது. ஒரு பெருநில மன்னனின் அரண்மதில் பல்வகைப் பொறிகளுடன் எதிரியைத் தாக்கி அழிக்கும் வன்மையுடன் அமைதல் இயல்பு. மதியின் இத்திண்பொறி அடக்கிய செயலை (101), அயோத்தியில்,

சினத்து அயில் கொலை வாள் சிலை மழு தண்டு
சக்கரம் தோமரம் உலக்கை
கனத்திடை உருமின் வெருவரும் கவண்கல்
என்று இவை கணிப்பு இல; கொதுகின்
இனத்தையும் உவணத்து இறையையும்
இயங்கும் காலையும் இதம் அல நினைவார்
மனத்தையும் எறியும் பொறி உள என்றால்
மற்று இனி உணர்த்துவது எவனோ (104)

எனக் காட்டுகின்றான் கவிஞன். அரணில், அதன் விண்தொடும் உயரம் பற்றிப் போலும் சூலவடிவில் இடிதாங்கியும் அமைக்கப் பட்டமை (101) தெரிகின்றது. இம்மதிலைப் போன்றே அகழியின் அமைப்பும் கட்டிடக் கலையறிவைப் புலப்படுத்துகின்றது. கல்தளமிட்டு, விளிம்பு சுற்றும் வெள்ளி கட்டி முற்றுவித்து, உள்ளுறப் பளிங்குப் பொன்தலத்து அகட்டு அடுத்துறப் படுத்ததாக (112) அயோத்தியின் நீளகன் கிடங்கின் கட்டுமானத்தைக் காட்டுகின்றான். ஆழியே அகழாக அமைந்த இலங்கையின் நகர், உள்ளும் அகழிகளைக் கொண்டு அமைகின்றது. இடை நகர் அகழி எழுகடலன்ன ஆழ அகலங்களைக் காட்டும்போது, அதில், 'நீலமே முதல் நன்மணி நித்திலம் மேல கீழ பல்வேறு ஒளி வீச'லும் (4989) சுட்டப்படுகின்றது.

நகரமைப்பினை, இலங்கையில், ஒரு வல்லுநனின் பார்வையுடன் அமைத்தளிக்கின்றான் கம்பன். அகழி சூழ்ந்து, பெரு வாயில்களுடைய மதிலின் உள் அமையும் நகர், பல்வகைப் பகுதிகளுடனும், வீதிகளுடனும், மாடங்களுடனும் அமைகின்றது. மூன்று பகுதிகளாக, புறநகரும் (4979), இடைநகரும் (4990),

அசநகரும் (5000) ஆக இலங்கை அமைப்புத் தரப்படுகின்றது இவற்றுள் புறநகர்,

மாட கூடங்கள் மாளிகை ஒளிகை மகளிர்
ஆடு அரங்குகள் அம்பலம் தேவர் ஆலயங்கள்
பாடல் வேதிகை பட்டிமண்டபம் முதல்பலவும் (4967)

கொண்டு அமைகின்றது. 'வான் தொடர் மணியின் செய்த மை அறு மாட கோடி'யும் (4931), பசுக்கள் நிரம்பிய கொட்டிலும், ஆனையின் கூடமும், பெரிய தேர்கள் நிற்கும் இடமும், குதிரைகள் உள்ள சாலைகளும் (4935), பெரிய நாள் ஒளிகொள் நானாவித மணிப்பித்திப் பத்திகளும் (4936) உடையதாக இப் புறநகரைக் கம்பன் புனைகின்றான்.

அகழியும் இஞ்சியும் சூழ்ந்த இடைநகர், 'பன்னிரு யோசனைத் தெருவு மும்மை நூறாயிரம்' (4991) உடையதாக அமைகின்றது. அதனகத்து அமையும் அகநகரும் இவ்வாறே கிடங்கும் மதிலும் உடையதாகி, 'அரசர் வைகும் தூய தெரு ஒன்றொடு ஒருகோடி' (5000) பெற்றதாகிக் காணப்படுகின்றது. திங்களைச் சூழ்ந்த விண்மீன்கள் போன்று 'அரக்க அரசன் பொன் கோயிலும் உரிமை மகளிர் உறைவிடங்களுமாக இந்நகர்ப்பகுதி தீட்டப்படுகின்றது. இயக்கியர் ஈண்டிய மனை ஓர் ஆயிரம் ஆயிரம் வாயிலும் (5013), அரக்கிமார்கள் ஈர் இரு கோடி ஈட்டம் பத்தியர் உறையும் பத்திப்படர் நெடுந்தெருவும், சித்தியர் உறையும் மாடத்தெருவும், விஞ்சை மாதர் உறையுளும் (5025) இங்கு அமைகின்றன. விஞ்சை மடந்தையர் உறைவிடம் ஆறு இரண்டு அமை கோடித் தூய மாளிகை நெடுந்தெருவின் பின், மயன்மகள் உறைமாடமும், நாயகன் பெருங்கோயிலும் (5029), அயலே கள் உறையும் மலர்ச்சோலையும் (5068) காட்டப் படுகின்றன.

நகரமைப்பு வல்லுநனாக இங்குப் புலப்படும் கம்பன் மாடங்கள், மாளிகைகள் பற்றிய அமைப்பு ஒழுங்கைக் கவிதைப் படுத்துவதன் வழி, அதிலும் தன் வன்மையைப் பறைசாற்று கின்றான். மிதிலையின் மணிநெடுந் தெருக்கள் (486), ஆறு போன்று (485), இருபக்கங்களிலும் பல மாடங்கள் உடையதாக அமைகின்றது (484). நிரம்பிய மாடத்து உம்பர் நிரைமணிக் கொடிகள் (481) விசும்பின் அரம்பையர் ஆடல் போன்றமையும் காட்சி, அவற்றின் விண்தோய் உயர்ச்சியையும் காட்டுகின்றன.

அயோத்தியின் வருணனையில், எழுநிலை மாடங்களைக் கவிஞன் காட்டும்போது, அதன் அமைப்பினை விரிவாகவும் விளக்கமாகவும் அமைத்துள்ளதிலும் அவன் கட்டிடக்கலையறிவு வன்மை புலப்படுகின்றது. சிற்ப நூன்முறை அறிந்து, ஏழ்நிலை அமைத்துப் பொன் வேய்ந்த, மாணிக்கம் இழைத்த கலசங்களை யுடைய மாடம் (118).

கல் அடித்து அடுக்கி, வாய் பளிங்கு அரிந்துகட்டி, மீது
எல்லுடைப் பசும் பொன் வைத்து, இலங்கு பல் மணிக்குலம்
வில்லிடக் குயிற்றி, வாள்விரிக்கும் வெள்ளி மாமரம்
புல்லிடக் கிடத்தி, வச்சிரத்த கால் பொருத்தியே (116)

மரகதத்து இலங்கு போதிகைத் தலத்து வச்சிரம்
புரை தபுத்து அடுக்கி, மீது பொன் குயிற்றி, மின் குலாம்
நிரை மணிக் குலத்தின் ஆளி நீள் வகுத்த ஒளி மேல்
விரவு கைத்தலத்தின் உய்த்த மேகத்தின் மீது அரோ (117)

எனக் காட்டப்படுகின்றது. கற்சுவர் எழுப்பி, பளிங்கு வாயில் கட்டி, பொன்பதித்து, இரத்தினங்களை இழைத்து, வெள்ளிக் கைமரம் பரப்பி, வச்சிரத்தூண் நாட்டி, மரகத மணியாலான போதிகையின்மேல், வயிரக்கற்களை அடுக்கி, பொன்னால் சந்து பதித்து, பலநிற மணிகளாலான சிங்கங்களை வரிசையாக வைத்து, அதன்மேல் கோமேதகக் கொடுங்கை அமைத்துக் கட்டப்படுகின்றது. இங்குப் பயன்பெற்ற பொருட்களில் மிகை தோன்றினாலும், தளமும், சுவரும், வாயிலும், கைமரமும், தூணும், அதன் உறுப்பான போதிகையும், அழகுருவங்களும், கூரையும், கலசமுமாகக் கட்டிடத்தின் பல்வகை உறுப்புநிலை புலப்படுவதும், அவை சிற்பநூற்படி அமைக்கப்படலும் கவிஞனின் இத்துறை அறிவை வெளிப்படுத்துகின்றன.

மாடங்கள் போன்றே மாளிகைகளின் அமைப்பு முறையை விளக்குமிடத்தும் கவிஞன் ஒரு கட்டிடக்கலை வல்லுநனாக உயர்ந்து நிற்கின்றான். வெண்சுதை பூசப்பெற்ற தவளமாளிகை (119), தமனியத் தகடு வேயப்படுகின்றன (120). வயிர மணி யால் இயன்ற தூணின்மேல், பச்சைமணியாலான துலாத்தைக் குற்றமறச் செய்யப்பட்ட போதிகையின் கீழே கிடத்திச் செய்யப் பட்ட பலகோடி மாளிகைகள் அமைகின்றன.

வயிர நல் கால் மிசை மரகதத் துலாம்
செயிர் அறப் போதிகை கிடத்தி, சித்திரம்

உயிர் பெறக் குயிற்றிய உம்பர் நாட்டவர்
அயிர் உற இமைப்பன அளவில் கோடியே (121)

ஓவியம் உயிர் பெற்றது போன்றும், வானவர் வியக்கும்படியும் அமைந்த இம் மாளிகைகள், மணிகளாலான சித்திரங்கள் பல வற்றைக் கொண்டமைகின்றன. சந்திர காந்தக் கல்லால் ஆன தள வரிசையிலும், சந்தனமரத்தாலான வரிசையாகிய தூண்கள்மேல் பவளத்தால் இயன்ற போதிகையில் சிவந்த ஒப்பற்ற மாணிக்கத் தாலான உத்தரங்களிலும், இந்திரநீலக் கற்களாலான வலிய சுவர்களிலும் இவ் ஓவியங்கள் பொருந்துகின்றன (122). எண்ணி றந்த ஓவியங்கள், பாடகம் அணிந்த கால்களின் அடிப்பாகங்கள் செந்தாமரை மலரை ஒப்பனவும், கணவரைத் தழுவிக் கொண் டிருப்பனவும், சிவந்த வாயை உடையனவும், பரதத் தொழில் உள்ளனவும், பஞ்சின் நுனிபோன்ற இடையினை உடையனவும், பொன்னிறமான காட்சியினவாகவும் அமைகின்றன.

பாடகக் கால்அடி பதுமத்து ஒப்பன
சேடரைத் தழீஇயின செய்ய வாயின
நாடகத் தொழிலின நடுவு துய்யன
ஆடகத் தோற்றத்த அளவு இலாதன (123)

என்பதில், சித்திரங்கள் பல தீட்டப்பட்ட மாளிகையின் கவின் காட்சி பொருந்துகின்றது. வானுற நிவந்த (126), மலையொத்த (127) இம் மாளிகைகள் தச்சரின் கைவண்ணத்தால் வெண்ணிறம் பொலிவதனை நிலவொளியால் அண்டம் புதுக்கும் விண்மதி யிலும் காட்டுவான் கம்பன் (553).

அனுமனால் எரியுண்ட இலங்கையை, தெய்வத்தச்சனான மயன் 'மூவகை உலகினும் அழகு முற்றுற'ப் புதுப்பிக்கின்றான் (607); பொன்னினும் மணியினும் அமைந்து முன்னையின் அழகுடையதாக அது அமைகின்றது (6072). அங்கு, இராவணன் ஆலோசனை மண்டபத்தைப் பல்லாயிரம் தூண்களுடையதாகக் காட்டுகின்றான் கவிஞன்– 'ஆயிரம் ஆயிரம் அவிர் செவ் வழி செம் மணித் தூணம் சேர்த்திய அவ் எழில் மண்டபம், (6075) என.

இலங்கைக்கு வானரப்படை செல்ல வாய்ப்பாக வருணனை வழிவேண்டி, அவன் கூறியதற்கேற்ப சேதுகட்ட, வானரத் தச்சன் நளன் வருகின்றான் (6675). மலைகளை ஏந்தி இட்டு, அடுக்கி அணையைக் கட்டுகின்றான் (6681).

குலை கொளக் குறி நோக்கிய கொள்கையான்
சிலைகள் ஒக்க முறித்துச் செறித்து, நேர்
மலைகள் ஒக்க அடுக்கி, மணற் படத்
தலைகள் ஒக்கத் தடவும், தடக் கையால் (6720)

எனக் கற்களை அளவுக்கேற்ப முறித்தலும், செறித்தலும், சமமட்ட அளவாக அடுக்கலும் போன்ற கட்டுநிலைகள் குறிக்கப்படுகின்றன.

பெருநகரும், பேரணையும் அமைக்கும் இயல்பு ஒருபாலாக, மிக எளிமையான கைவேலைப்பாடுடைய கட்டிடநிலையும் கம்பனில் அமைகின்றது. இராமனுக்கும், சீதைக்கும் கானக வாழ்க்கைக்குத் தேவையான சாலையைச் சித்திரகூடத்தில் இலக்குவன் அமைப்பதில் இது வெளிப்படுகின்றது. நான்கு செய்யுட்களில் தொடர்ச்சியாகக் கவிஞன் அமைக்கும் பன்ன சாலையின் வருணனை மன்னர்மகனின் செயல்வன்மையைக் காட்டுவதோடு கவிச்சக்கரவர்த்தியின் கலையீடுபாட்டையும் காட்டுகின்றது (2089-92). குறிய தூண்களை நிறுத்தி, அவற்றின் மேல் நீண்ட மூங்கில்களை வளைகளாக ஒழுங்குபட வைத்து, பெரிய முகடு போக்கி, வரிசையாக நெருங்குதல் இல்லாத கைகளை வளைகளினின்று முகட்டொடு பொருந்த இணைத்து ஏற்றி, மேலெங்கும் வளைவு இல்லாத வரிச்சுகளைப் பரப்பி இணைக்கின்றான். பின்பு அதன்மீது தேக்குஇலைப் படலையால் மூடி மறைத்து, நாணற் புல்லால் கூரை வேய்ந்து, மூங்கிலால் சூழ மதிலெழுப்பி, இடை வெளியின்றிக் குழைத்த மண் எறிந்து, தண்ணீர் தெளித்து வழவழப்பாகப் பூசுகின்றான். இயற்கையில் கிடைத்த பொருட்களால் எழுப்பப்பட்ட இச்சாலையை அழகுபடுத்தும் நோக்குடன், வலிய மதில்களைக் குங்குமச் சேற்றால் செவ்வியவாகத் தீற்றி, ஆற்றோரத்தில் பெற்ற மணிகளையும் முத்துக்களையும் பதிக்கின்றான் இளவல். பின்னும்,

மயிலுடைப் பீலியின் விதானம் மேல்வகுத்து
அயிலுடைச் சுரிகையால் அருகு தூக்கு அறுத்து
எயில் இளங் கழைகளால் இயற்றி, ஆறு இடு
செயலுடைப் புது மலர் பொற்பச் சிந்தியே (2092)

இன்னணம் இளையவன் இழைத்த சாலை... (2093)

எனப் புறநிலை போன்றே அகநிலையிலும் வீட்டை அழகு படுத்தும் கலைத்திறனுடை நிலை புலப்படுகின்றது.மயிற்றோகை

யாலான மேற்கட்டி அமைத்தலும், ஆறு தரும் மலர்களைப் பரப்பலும், கூரையின் அடிவாரத்தில் நீண்டு தொங்கும் புல்தழை முதலியவற்றைக் கூரிய கத்தியால் கொய்து சீர் செய்தலும் அழகுணர்வினைக் காட்ட, மூங்கிலால் புறமதில் அமைத்தல் பாதுகாப்பு நோக்கையும் புலப்படுத்துகின்றது. பயன்பாட்டு நோக்கில் இறைவனுக்கும் தேவிக்கும் வேறு வேறு இருக்கை அமைத்தலும் (2091) பிறவும் வாயிலாகக் காப்பியக் கவிஞரின் கலைநிலையும் புலப்படுகின்றது. நுண்மையாகவும், தெளிவாகவும், முறையாகவும் சாலையினை எழுப்புதலைக் கண்முன் கவினுறப் படைக்கின்றான் இக் கலைஞன்

சேது கட்டி, இலங்கைபுக்க குரக்குப் படைக்காகப் பாசறை சமைக்குமிடத்தும் கம்பன் தன்னை இத்துறை வல்லு நனாகக் காட்டுகின்றான். ஏழு நாட்கள் எனும் மிகச் சுருங்கிய காலத்தில் மயன் இலங்கையைப் புதுப்பிக்க (6581-82), நளன் 'இறைவர்க்கும் பிறர்க்கும் எல்லாம் நல்நகர் நொய்தின்' செய்கின்றான்.நான்முகன் போன்று,பொன்னாலும் மணியாலும் நால்வகைச் சதுரம் (சிற்ப நூல் கூறும் கட்டட அமைதியில் ஒருவகை) நாட்டி, கட்டட அமைதி கொண்டு இது இன்னார் இருக்கை என்று அறிய முடியாதபடி செய்கின்றான் (6760).

வில்லினாற்கு இருக்கை செய்யும் விருப்பினால்,
பொருப்பின் வீங்கும்
கல்லினால் கல்லை ஒக்கக் கடாவினான்; கழைகள் ஆன
நெல்லினால் அலக்கும் காலும் நிரப்பினான்; தருப்பை
என்னும்
புல்லினால் தொகுத்து வாசப் பூவினால் வேய்ந்து
போனான் (6761)

என நளன் இராமனுக்கு இருக்கை அமைத்தல் காட்டப்படு கின்றது. மலையின்கண் மேடாக நின்ற கற்களைக் கல்லால் அடித்து, அழுத்தி, நிலத்தைச் சமப்பரப்பாக்கி, விளைந்த நெல்லினையுடைய மூங்கில்களால், தூணும், வரிச்சும் அமைத்துத் தருப்பைப் புல்லால் பிணைத்து, நறுமணமுடைய பூக்களால் கூரை வேய்ந்து இதனை அமைக்கின்றான்.

இவ்வாறு பல்வகைச் சூழலில் ஒரு சிறந்த, பன்முக நோக்குடைய கட்டிடக்கலை வல்லுநனாகக் கம்பன் தன்னைப் புலப்படுத்துகின்றான். கன்னி மாடம் (502), நிரை மணி மாட நெற்றிச் சாளரம் (493), நளன் இயற்றிய நாயகக் கோயில் (4286)

எனச் சுட்டிச் செல்வதுடன் அமைந்து விடாது, ஆழ்ந்து கண்டும் வருணித்தும் கூறும் நிலை கவிஞனின் கலையறிவு விருப்பையும் புலப்படுத்துகின்றது.

பயன்படு கலையில் ஈடுபாடு காட்டும் காப்பியக்கவிஞன் தானே ஒரு இன்பியல்கலை வல்லுநனாக அமைகின்றான். சொற்களைப் பயன்கொண்டே ஐம்புல இன்பத்திற்கேற்ற அனைத்தையும் இவன் படைத்து அளிக்கின்றான். கற்கோயிலையும் பளிங்கு மாளிகையையும் காலத்தாலும் கவினாலும் வெல்லவும் மிஞ்சவும் செய்கின்றது அவன் ஆக்கும் சொற்கோயில். கண்ணுக்கு விருந்தளிக்கும் ஓவியம் போன்றும் நாடகம் போன்றும் அவற்றைப் பற்றிய அவனது வருணனைகள் மனத்திற்கு இன்பம் அளிக்கின்றன. காதால் கேட்டு இன்புறும் இசையை அவன் சொல்லொலியிலும், சொற் சேர்க்கையிலும், விளக்கங்களிலும் காட்டுவதில், காட்சிப்படுத்துவதில் வெற்றி பெறுகின்றான். இயற்கை வள வருணனையால் ஓர் ஓவியச் சாலையாகவே அமையும் 'சித்திரகூட'ப் படலப் பகுதிகள் (2047-81) இங்குச் சுட்டத்தக்கன.

ஆடலும், இசை யிணைவும் உடைமையால், பலவகை இன்பச் சேர்க்கை உடையதாக அமையும் நாடகத்தில் கவிஞன் கொண்ட விருப்பப் புலப்பாட்டால்போலும் அவன் படைப்பே 'கம்பநாடகம்' எனக் கூறும் சிறப்புப் பெறுகின்றது. மக்கள் வாழ்வில் ஆடலும் இசையும் இணையும் உலக இயல்பு பற்றியும், மகிழ்வும் நிறைவும் உள்ள உலகியலின் வெளிப்பாடாகவும், இத்தகு நாடகக் காட்சிகள் கவிஞன்பால் பெற்ற செல்வாக்குக் காரணமாகவும் காப்பியக்களனில் இவை இடம் பெற்றதாகக் கருதலாம். நாடகு அரங்குணர்வு கம்பனுக்கு மிகுதியாக அமைந்ததால் போலும் இயற்கையைப் புனையுமிடம் பலவற்றிலும் இத்தகு காட்சிகளை அமைக்கின்றான்.

கிட்கிந்தையின் கார்காலக் காட்சியில், ஆடல்மகளிர் போன்ற மயிலைக் காட்டுகின்றான் கவிஞன். ஆடலுக்குப் பின்புலம் அமைக்கின்றது இயற்கை. பின்னணியின் கின்னர இசையாக வண்டின் ரீங்காரம் அமைய, மேகத்தின் முழக்கு மத்தள ஒலியாகத் தாளம் அளிக்கின்றது. நாடக அரங்கத்துக்குத் தேவையான ஒலி-ஒளி அமைப்பு, விளக்குப்போன்று எழுந்த தோன்றி மலர்களால் நிறைவுறுகின்றது. அரங்கின் ஆடலைக் கண்டு களிக்கும்சுவைஞரின் இமையாத கண்களாகக்

கருவிளை மலர்கள் பொருந்துகின்றன (4179). பெண்ணும் ஆணுமான வண்டுகள் இணைந்து பாய்ந்தும், பெயர்ந்தும் செல்லலால் தாக்குண்டு கூதாள மலர்கள் விரிந்து அசைவதில் ஒலி எழுச்சியும் தாள அசைவும் பொருந்துகின்றது. மீண்டும் மீண்டும் வண்டுதாக்கலால் ஓர் இலயத்துடன் ஒலியும் அசைவும் தோன்றுதலால் தாளமாகத் தட்டப்படும் கரங்களும், கைத்தாளமும், கூத்திற்கு இசைய எழுப்பப்படும் பாடலும் நினைக்கப்படுகின்றன. இளம் கலைஞர் ஆடலும், முதிய பெண்டிர் பாடலிசைத்துத் தாளம் கொட்டலும், சிலம்பின் அரங்கத்தின் தொன்னெறி இயற்கைத் தோரிய மடந்தையரில் அமைதல் இங்கு நினைக்கத் தக்கது (3. 134; 6. 19; 14. 155).

பேடையும் ஞிமிறும் பாயப் பெயர்வுழிப் பிறக்கும் ஓசை
ஊடுறத் தாக்கும்தோறும் ஒல் ஒலி பிறப்ப நல்லார்
ஆடு இயல் பாணிக்கு ஒக்கும் ஆரிய அமிழ்தப் பாடல்
கோடியர் தாளம் கொட்டல் மலர்ந்த கூதாளம் ஒத்த (4180)

முன் செய்யுளில், கார்காலத்து மயில்கள் ஆடும் நாடக அரங்கைக் காட்டியவன், இங்கு, அவ் அரங்கில் நிகழும் கூத்திற்கு ஏற்பக் கூத்தர் கொட்டும் தாளம் போலக் கூதாளமலர் மலர்ந்ததைக் கூறுகின்றான். தாளம் போன்ற கூதாள மலரின் வடிவமைப்பும், எதிரெதிரே நிற்கும் இரு கூதாள மலர் வண்டு பாய்தலால் ஒன்றையொன்று அடுத்து அசைதலும், வண்டின் ஓசையால் ஒலி இணைவு காட்டுதலும், தாளத்தின் ஓசையும், அசைவும், வடிவும் கூதாள மலரில் பொருத்திக்காட்ட வாய்ப்பு அளிக்கின்றன. 'தெத்தே' என முரன்றுகொண்டு வண்டு பாய்தலால் நட்டுவரின் தாளத்தாக்கம் கருதப்படுகின்றது.

அரசவையில் ஆடிய வேத்தியலும், பொதுமக்கள் முன்பு ஆடிய பொதுவியலுமாக நாடகநிலை பகுப்புண்ட பண்டை நிலை, கம்பனால் இயற்கைப் புனைவில் நினைவூட்டப்படுகின்றது. அரியாசனத்து இருக்கும் ஆளும் அரசத்தலைவன்முன் நடன மாடும் நங்கையை மருதவீற்றிருப்பின் மயிலாட்டத்தில் பொருத்துகின்றான். மேகமுழக்கம் தாளமிடும் முழவாக, வண்டின் ஒலியாழிசையாக, தாமரைகள் ஒளிசெய்யும் விளக்காக, நீர்த்திரைகளே திரைச்சீலையாக மயிலாடும் அரங்கநிலை அமைய, பார்ப்போர் கண்களாகக் குவளைமலர்கள் அமைகின்றன (35). 'மயில்கள் ஆட' எனும் பன்மை நிலை, குழு நாட்டியத்தின் பாங்கினையும் சுட்டுகின்றது போலும்.

களிக்கும் மஞ்ஞையைக் கண்ணுளர் இனம் எனக் காட்டி (4184) வேத்தியல் சூழல் அமைத்த கவிஞர் நீர்நாயில் பொதுவியல் ஆடல் காட்டுகின்றார் எனத் தோன்றுகின்றது. பம்பை வாவியின் நீர்நிலையும், அதில் பாயும் வாளைமீன்களும், உகளும் நீர்நாயும், ஒலிக்கும் தேரைகளும் ஒரு தெருக் கலைக்காட்சியைக் காட்டக் கவிஞருக்குக் களமாகின்றன. பல மக்கள்குழுமி நின்று பாராட்ட, வலிமையுடன் வீசும் வாள்களின் இடையே கழைக் கூத்தாடி ஆடுவது இங்குக் காட்சிப்படுத்தப்படுகின்றது.

வலி நடத்திய வாள் என வாளைகள் பாய
ஒலி நடத்திய திரைதொறும் உகள்வன நீர்நாய்
கலி நடக் கழைக் கண்ணுளர் என நடம் கவின
பொலிவு உடைத்து என தேரைகள் புகழ்வன போலும்
(3729)

பொதுமக்கள் முன் காட்டப்படும் இவ் வீர ஆடல் போன்று மதங்கியர் ஆடலும் பொதுமக்கட் சார்புடையதாகத் தோன்றுகின்றது. பல்வகைப் பறவைகளின் ஒலியே முழவு முழக்கமாகிப் பதங்களாக அமைய, வண்டின் இசை இணைவுடன் விதவிதமாக ஆடும் மதங்கியை ஒக்கின்றது மயில். மரக்கிளையில் ஒயிலாக ஆடும் மயிலும், மழை முழக்குக்கு அஞ்சி மரத்தின் கீழ் ஒதுங்கிய உழைமான் கூட்டமும் மதங்கியும் பார்வையாளருமாகப் பொருந்துகின்றன (4226).

இயற்கையின் இப் பல்வகை ஆடல் காட்சிகளினின்று வேறுபட்ட சிறப்புடன் அயோத்தியிலும், மிதிலையிலும் இலங்கையிலும் அரங்கில் அமையும் நாடகக் காட்சிகளைத் தருகின்றான் கம்பன். அரங்கிடை ஆடும் மகளிரின் கருங்கடைக் கண்வேலால் உருகும் காமர் நெஞ்சும், தேயும் உயிரும், வளரும் ஆசையும் (138), ஆடல் மகளிர் அழகினையும் ஒருவேளை காமப்பொருள் கலந்த ஆடலையும் புலப்படுத்துவதாகக் கொள்ளலாம் (145). ஆடல்பாடல் வல்ல மதங்கியரின் இலயமுடை ஆடலையும் கலை நகரான அயோத்தி தருகின்றது.

பதங்களில் தண்ணுமை பாணி பண் உற
விதங்களின் விதி முறை சதி மிதிப்பவர்
மதங்கியர் அச்சதி வகுத்துக் காட்டுவ
சதங்கைகள் அல்லன புரவித் தார்களே (144)

மத்தளமும், தாளமும், பாட்டும் ஆகிய இவை தம்முள் ஒத்துப் பொருந்த, பரத சாத்திரத்தில் கூறப்பெற்ற விதி முறைகளின்படி சதிகளைப் பதங்களுக்கு ஏற்ப மதித்து நடிக்கும் நாடக மகளிரையும், அச்சதிகளைப் பாகுபடுத்திக் காட்டும் அவர் காலில் அணிந்த சதங்கைகளையும், ஆடுங் குதிரையின் கழுத்தின் கிண் கிணியையும் இங்குக் காட்சிப்படுத்துகின்றான்.

மிதிலையிலும் இத்தகு நடனங்களை-நடனசாலைகளைக் காட்டுவது நகரங்களின் கலை இணைவைப் புலப்படுத்துகின்றது எனலாம். தேனொழுக்குப்போலத் திரண்ட நரம்பினால் எழுப்பியது போன்ற இசை அமையப்பெற்றதும், மழலைச் சொல்லொடு கூடியதும் ஆகப் பாடலின் இசை அமைந்து பின்னணி தருகின்றது; தடவி வாசிக்கும் மகர வீணையின் இசையும் மத்தள ஒலியும் ஒன்றோடொன்று இணைந்து இலயப்பட்டு இன்னொலி செய்கின்றன; பாவனைக் குறிப்புகளைக் காட்டும் கைகளின் வழியே கண்களின் நோக்கம் செல்லவும் அந்நோக்கின் வழியே மனத்தின் குறிப்புச் செல்லவும் அபிநயித்துக்கொண்டு நிருத்தம் செய்கின்றனர் மகளிர்.

நெய் திரள் நரம்பின் தந்த மழலையின் இயன்ற பாடல்
தை வரு மகர வீணை தண்ணுமை தழுவித் தூங்க
கை வழி நயனம் செல்ல கண் வழி மனமும் செல்ல
ஐய நுண் இடையார் ஆடும் ஆடக அரங்கு கண்டார் (487)

கை, கருத்து, மிடறு, சரீரம் என நான்கன் தொழிலாலும் நிகழும் நடனமுறை இங்கு விளக்கம் பெறுகின்றது. கைவழி நயனம் செல்லலால் கையின் தொழிலும், கண்வழி மனம் செல்லலால் கருத்தின் தொழிலும், நரம்பின் தந்த பாடல் என்பதால்மிடற்றின் தொழிலும், ஆடும் என்பதனால் சரீரத்தின் தொழிலும் பொருந்தி அமைகின்றன.

அரக்கர் கோன் இராவணனின் இலங்கையிலும் நாடகங்களையும் அதனைப் பார்த்து மகிழும் மகளிரையும் காட்டுகின்றான். கலைகளின் தன்மையும் பெருக்கும் பண்பாட்டையும் நாகரிகத்தையும் களனாகவும் பற்றுக்கோடாகவும் கொண்டு அமைகின்ற இயல்பு வெளிப்பாடாக இதனைக் கருதலாம். பூப்பந்தலும் தமனிய அரங்கும் ஒளி அமைப்பும் கலையுணர்வு மிக வளர்ந்த பின்புலத்தைக் காட்டுகின்றன. காண்போரின்

வகுப்புக்கும் விருப்புக்கும் ஏற்ப ஆடுவோர் ஆடுதல், கலையிலும் கலைஞர் வாழ்விலும் மக்கள்கொண்ட செல்வாக்கை உரிமையைப் புலப்படுத்துவதாகக் கொள்ளலாம்.

சீதையைத் தேடும் அனுமன் காணும் அரக்கரின் பற்பல நிலைகளில் ஒன்றாக இது அமைகின்றது.

சந்தப் பூம் பந்தர் வேய்ந்த தமனிய அரங்கில் தம்தம்
சிந்தித்தது உதவும் தெய்வ மணி விளக்கு ஒளிரும் சேக்கை
வந்து ஒத்தும் நிருத மாக்கள் விளம்பின நெறி வழாமை
கந்தர்ப்ப மகளிர் ஆடும் நாடகம் காண்கின்றாரை (4740)

களத்தில் வந்து நிற்கின்ற ஆடலாசிரியர் முதலியோர் சொன்ன வழி பிசகாமல் கந்தருவ மகளிர் ஆடிக்காட்டும் நாடகம் எனவும் இது விளக்கப்படுகின்றது.

போர்க்களத்தின் பேயுடன் கவந்தம் ஆடும் காட்சியிலும் ஆடற்கலையைக் காணும் அளவிற்குக் கம்பனின் கவின்கலை உணர்வு மிக்கு அமைகின்றது. ஆடல் கற்கும் மாணவர்க்கு ஆசிரியர் நடனம் கற்பிக்கும் இயல்பு இங்கு இணைத்துத் தருவது ஒரு புதியகோணப் பார்வையைத் தெரிவிக்கின்றது. மதம் பொழியும் யானை எனும்படிக் கிளர்ந்து ஆடுகின்ற கறுத்துப் பருத்த அரக்கரின் தலையற்ற உடம்புகளின் ஆடலுக்கு ஏற்பத் தன் கைகளைச் சேர்த்துத் தாளம் போடுகின்றது பேய்; இது, தாளமிடும் தொழிலைச் செய்துகொண்டு, உடம்பின் உறுப்புகள் மிகுதியாக மடங்கச் செய்கின்ற நீண்ட அபிநயக் கூத்தினை மாணாக்கர்க்கு அமையக் கற்பிக்கும் பொருட்டு நடனம் செய்யும் காலின் முறையைக் காட்டுகின்ற கூத்தர் நிலையை ஒத்து அமைகின்றது. பேய், கூத்தாசிரியன் போன்றும், கவந்தம் கூத்துப் பயில்வோன் போன்றும் அமைதலால் பரத நாட்டிய ஆசிரியனையும் பிரதிமைக் கூத்துப் பயிற்றும் முறையையும் சுட்டியதாகவும் கொள்ளப்படுகின்றது.

கடக் கார் எனப் பொங்கு கவந்தத்தொடு கைகள்
தொடக்கா நிற்கும் பேய், இலயத்தின் தொழில் பண்ணி
மடக்கோ இல்லா வார் படிமக் கூத்து அமைவிப்பான்
நடக் கால் காட்டும் கண்ணுளர் ஒக்கும், நமரங்காள் (9591)

நடனக் கலையின் பன்முகங்களை-பரிணாமங்களை இவ்வாறு பன்முறையும் புலப்படுத்தும் கவிஞன் இசைக் கலையையும் பண்

நிலையிலும் பாடல் நிலையிலும் பல்லிடங்களில் காட்டுகின்றான். குடமுழாவும் தண்ணுமையும பாடலும் இணைந்து ஆடற் பின் புலத்தைத் தருகின்றன (5020). ஆடலுக்குப் பின்னணியாக அமைந்த இக்கருவி இசையும் கண்டப்பாடலும், இணைந்தும் தனித்தும் இயங்குதலையும் உலகியலில் காண்கின்றோம். பண்ணுடைக் கருவி இசை தனித்து இயன்றபோதும் கண்டப் பாடல் பெரும்பாலும் கருவி இசையுடன் இணைந்தே காட்டப் படுகின்றது,

ஆடலை இயற்கையில் கண்டது போன்றே பண்ணினையும் பாடலையும் இயற்கையில் காண்கின்றான் கவிஞன். மேகமுழக் கும், அருவி ஒலியும், வண்டின் இசையும், காற்றின் ஓசையும், கடலின் ஓதையும் இயற்கையே ஒலிமயமாக அமைவதைக்காட்டி இன்னிசைக்கும், தாள ஓசைக்கும் களனாகி, மனித மனத்தில் அடிப்படை அமைக்கின்றன. 'ஓசை, ஒலியெலாம் ஆனாய், நீயே' என்ற இறை உணர்வையும் நமக்கு ஏற்படுத்துகின்றது. பள்ளி எழுச்சியும் பல்லாண்டும் அரச வாழ்க்கையில் இசை இன்றி யமையா இடம்பெற்றதைக் காட்டுகின்றன. புகழ்பாடல் இராவணனிடமும் அமைந்ததை, 'ஆடினான் புகழ், அம் கை நரம்பினால் நாடி, நாற் பெரும் பண்ணும் நயப்பு உறப் பாடி னான் புகழ் பாடுகின்றார்' (5012) என்பதில் புலப்படுகின்றது.

மதுவுண்ட மயக்கம் காரணமாக ஒலிவேற்றுமையுடன் ரீங்காரம் செய்யும் வண்டினில், பண்இணைவு காட்டுகின்றான் கவிஞன். 'தும்பி காலைச் செவ்வழி முரல்வ'(45) என்பதால் மாலையில் பாடப்படும் செவ்வழிப்பண்ணை மயங்கிக் காலையில் பாடியதாகக் காட்டுகின்றான்.

இசைக் கருவிகளுள் எழுவகை நரம்புகளால், இன்னிசை மிக்கதாக அமையும் யாழ், வேறு எந்தத் துணைக் கருவியின் பின்னணியுமின்றி இசைக்கப்படும் இயல்பு உடையதாக அமை கின்றது. 'இலக்கண மரபிற்கு ஏற்ற எழுவகை நரம்பின் நல் யாழ், அலத்தகத் தளிர்க்கை நோவ, அளந்து எடுத்து அமைத்த பாடல்' (4939) என அரக்க நங்கையரின் வீணைத் தொழிலைக் காட்டுமிடத்து இது புலப்படுகின்றது. இவ்வாறு ஓரிசைக் கருவி யன்றிப் பலவகை வாத்தியங்களின் இன்னோசை, கடலொலியை விஞ்சி அமைதலை அயோத்தி நகரம் காட்டுகின்றது.

வளைஒலி, வயிர்ஒலி, மகர வீணையின்
கிளைஒலி, முழவுஒலி, கின்னரத்து ஒலி
துளைஒலி, பல்இயம் துவைக்கும் சும்மையின்
விளைஒலி, கடல்ஒலி மெலிய விம்முமே (153)

பல்வகை நரம்புக் கருவிகளும், ஊது கருவிகளும், துவைக்கும் தோல்-கஞ்சக் கருவிகளும் இங்கு இணைவதாகத் தெரிகின்றது. பாடல் ஒலியின்றி, பல்வகை இசைக் கருவிகளின் குழுஒலிநிலை மட்டும் இங்கு அமைவதாகக் கொள்ளலாம்.

இன்னிசைக் கருவிகள் தனியே ஒலிப்பதைவிடப் பெரும் பாலும் வாய்ப்பாட்டுடன் இணைந்தே அமைகின்றன. சுருதி யளிக்கும் நரம்புக் கருவியான தும்புருயாழின் பின்னணியில் மகளிர் அளித்த இனிய பாட்டிசையை மிதிலை நகர வீதிக் காட்சி யாக அமைக்கின்றான் இசைவல்லுநனான கவிஞன். காதில் பாயும் இத்தேனிசை மகளிர் புதியோருக்கு மனமுவந்து அளித்த விருந்து ஆகின்றது. மென்மலர்க் கைகள் நோகுமாறு சுருதிக் கருவியின் முறுக்காணியைப் பிடித்துத் திருகி, ஒழுகும் தேன் தாரை போன்ற நரம்புகளை இறுக்கி, அந்நரம்புகளை மீட்டும் கைவிரலுடன் மனநிலையும் ஒன்றுசேரக் கூட்டித் தெளிவுள்ள வாய்ப்பாட்டு அளிக்கின்றனர். பாடுவோர் தாங்களே சுருதி கூட்டும் பாங்கு இங்கு அமைகின்றது. முறுக்கலும் மீட்டலு மாகிய வீணைத் தொழிலும் புலப்படுகின்றன.

வள் உகிர்த் தளிர்க் கை நோவ மாடகம் பற்றி, வார்ந்த
கள் என நரம்பு வீக்கி, கையொடு மனமும் கூட்டி
வெள்ளிய முறுவல் தோன்ற, விருந்து என மகளிர் ஈந்த
தெள் விளிப் பாணித் தீம் தேன் செவி மடுத்து, இனிது
சென்றார் (490)

மகர யாழ் எடுத்த இன்னிசை, மிடற்றுப் பாடலால் எடுப்பாக ஒலித்தலும், மிடற்றுப் பாடலுடன் ஏறியும் இறங்கியும் ஆரோகண அவரோகணங்களைப் பெற்று ஒலித்தலும் இசையும் பாட்டும் இணைதலைக் காட்டுகின்றன. யாழுடன், வாரால் இழுத்துக் கட்டப்பட்ட தோற்கருவியாகிய மத்தளமும் ஒலித்து, மகளிரையும் கிளி முதலிய பறவைகளையும் மெய்மறக்கச் செய்கின்ற இனிமை கொள்கின்றது (140).

மகளிர் வாழ்வில் இசை இன்றியமையாத இடம் பெறுவதை அரக்கமாதர் வருணனையிலும் புலப்படுத்துகின்றான் கம்பன்

பல்கலைச் செல்வியராக அமையும் இராவணனின் இவ் உரிமை மகளிர், தம் அகம் சுடு காதலின் வடிகாலாகவும் வெளியீடாகவும் இவ் இசையைக் கொள்கின்றனர். இன்பக் களிப்பில் இசைத்த இசை ஒருபாலாகத் துன்பம் சூழ் தனிமையில், உறக்கம் வாராத இராப்பொழுது கழிய இசை இங்குப் பயன்படுகின்றது.

> ஆணியின் கிடந்த காதல் அகம் சுட, அருவி உண்கண்
> சேண் உயர் உறக்கம் தீர்ந்த சிந்தையர் செய்வது ஓரள்,
> வீணையும் குழலும் தம்தம் மிடறும் வேற்றுமையின் தீர்ந்த
> பாணிகள் அளந்த பாடல் அமிழ்து உகப் பாடுவாரும்
>
> (5021)

குரலிசையும் கருவி இசையும் வேறுபடாது ஒலிக்கும் நிலை இங்குச் சுட்டப்படுகின்றது. மனம் ஒன்றாது இசைத்தலால் இனிமை பிறழந்து ஒலிக்கும் இயல்பு நிலையை அமிழ்த்து உக அமைந்த பாடல்நிலை காட்டுகின்றது எனலாம். கோவலன் பிரிவாற்றாமையால் மாதவி மயங்கி, இசைவிரவுதலால் யாழ் மீட்டலைக் கைவிட்டமை (8 43-44) இங்குக் கருதத்தக்கது.

மனமயக்கத்தால் ஏற்படும் இவ் இசைமயக்கத்தையும், கள்ளுண்டோர் தம்நிலை மறந்து, நிலை தடுமாறிப் பாடுதலையும் கவிஞன் உலகியல் பற்றிப் படைக்கின்றான் எனலாம். இசை வெறும் உளறலாக மாறும் இந்நிலையையும் அரக்கியரிடம் காட்டுகின்றான் கம்பன். நச்சு எனக் கொடிய நாகக் கள்ளையும் குருதியையும் குடித்தமையால் பித்தர் போன்று பிதற்றி, கூட்டமாகக் கூடிக்கொண்டு, குச்சரி என்ற பண்ணைப்போன்ற ஒலி தண்டத்திலே தோன்ற, சச்சரி எனும் தோற்கருவியின் தாளம் போன்று கைகளைக் கொட்டி நிறை தளருகின்றனர் (5023). கள் விற்பார் சேரியிலுள்ள பொருநர் பாட்டிசையின் இனிமை இயைபு பற்றி இங்கு நினைக்கத் தக்கது (13[illegible]).

ஆடலையே வாழ்க்கையாகக் கொண்ட நாடகமகளிர் போலப் பாடலையே தொழிலாகக் கொண்டவராகச் சிலர் அமைகின்றனர். பாணனும் விறலியுமாகப் பல பாட்டிசைத்து மக்களை மகிழ்விக்கும் பொதுநிலை இவ் எண்ணத்தை எழுப்புகின்றது. தசரதனொடு மிதிலை நோக்கி எழுந்த கூட்டத்தில் இவ் இசைஞரும், ஆணும் பெண்ணும் இணைபிரியாதிருக்கும் தேவசாதியான கின்னர மிதுனம போன்று துணைச் செல்கின்றனர். செவியில் தேன் பாய்ந்ததொத்த இவர்களின் நைவள அமுதப் பாடல் யாழிசையின் பின்னணியுடன் எழுகின்றது.

அறல் இயல் கூந்தல், கண் வாள் அமுது உகு குமுதச்
செவ்வாய்
விறலியரோடு, நல் யாழ் செயிரியர், புரவி மேலார்,
நறை செவிப் பெய்வது என்ன; நைவள அமுதப் பாடல்
முறை முறை பகர்ந்து போனார், கின்னர மிதுனம் ஒப்பார்
(791)

மக்கள், பொழுது போக்காக விறலியர் பாடல் கேட்டு இன்புற்ற தனை, 'உயிரின் இன் இசை பாடவும், விறலியர் பாடல் கேட்கவும், ஆடவும்' (158) எனும் நகரப்படலப் பகுதியும் உணர்த்துகின்றது.

உலக வாழ்க்கையில் இசை இத்துணை முதன்மை பெற்ற தால் போலும் மழலைச் சொல்லில் குழலையும் யாழையும் கண்டனர் அறிஞர்; குழலும் யாழும் அமிழ்தும் குழைத்த மழலைச்சொல்லைக் காதலியின் குதலையில் கண்டனர் கலைஞர்; பல்வகை இசையைப் பெண்டிரின் இன்மொழியில் காட்டுகின்றனர் கவிஞர். இன்பம் தரும் மகளிரின் எழுத்துருப் பெறாத குதலையும், சொல்லுருப் பெறாத மழலையும், இன் சொல்லும் குழலாகவும், யாழாகவும் பாட்டாகவும் முறையே சுட்டப்படுகின்றன. கம்பன் தரும் இக் கவினுறு காட்சி, மிகுத்துக் கூறுதல் வழியாக இசையினிமையைப் புலப்படுத்துகின்றது.

குழல் இசை மடந்தையர் குதலை, கோதையர்
மழலை அம் குழல் இசை, மகர யாழ் இசை
எழில் இசை மடந்தையர் இன் சொல் இன் இசை
பழையர் தம் சேரியில் பொருநர் பாட்டு இசை (135)

புலனின்பம் தரும் இவ் இசையை இறைவழிபாட்டுக்கும் பயன் படுத்திப் பெருமையளிக்கின்றனர் உலகோர். பல்வகை மதங் களும் தம் வழிபாட்டு முறையில் இசைக்கு முதன்மை அளிக் கின்றன. இறை வழிபாட்டில் பாடும் மங்கல கீதம் பற்றிக் கம்பனும் கூறுகின்றான். இல்லுறை தெய்வத்திற்கும் மலர்ப் பலியிட்டுப் போற்றி, முரசு முழங்க அரம்பையர் பாணிகொட்டி பாடுகின்றனர்.

சங்கொடு சிலம்பும் நூலும் பாத சாலகமும் தாழ
பொங்கு பல் முரசம் ஆர்ப்ப, இல் உறை தெய்வம் போற்றி
கொங்கு அலர் கூந்தல் செவ் வாய் அரம்பையர் பாணி
கொட்டி
மங்கல கீதம் பாட, மலர்ப் பலி வகுக்கின்றாரை (4949)

கொட்டு முழக்கங்களுடனும், தாளம் கொட்டிப் பாடும் நிலையுடனும், இறைமையை ஏற்றிப்போற்றிப் பாடும் மங்களகரமான இசைப்பாட்டுகளுடனும் வழிபாடு நிகழும் இன்றைய நிலையின் பண்டைச் சித்திரமாகவே இது அமைகின்றது.

மக்கள் வாழ்வின் இவ் இறைவழிபாட்டு நிலைபோன்றே இன்னும் பல இனிய சூழல்களும் இசைக்கலை இணைவுடன் அமைகின்றன. பிறப்பின் தாலாட்டில் தொடங்கி இறப்பின் ஒப்பாரியில் முடியும் மனித வாழ்க்கை பல்வகை இசைப் பாடல்களின் கோர்வையாகவே அமையும் உலகியல்பின் புலப்பாட்டை இலக்கியங்களும் போற்றுகின்றன. புதுமனை புகு விழாவின், கின்னர மிதுனம் பாட'வும், 'பன்னக மகளிர் சுற்றிப் பல்லாண்டு இசை பர'ப்பவும் அமைந்த இன்னிசைச் சூழலுடன் காட்டுகின்றான் கவிஞன் (4953) அத்துடன், புதுமணம் புணர்கின்றவரையும், முரசம் ஆர்ப்பவும், முனிவர் சோபனம் செப்பவும் காட்டுவதுடன், 'பாவையர் குழாங்கள் சூழ பாட்டொடு வான நாட்டுப் பூவையர் பல்லாண்டு கூற'லையும் (4954) சுட்டுகின்றான்.

அரக்கர் வாழ்வின் இப் 'பல்லாண்டு' பாடல் நிலை பொது மக்களின் மாண்புடை வழக்கினைச் சுட்ட, அரச வாழ்க்கையும் பல்லாண்டுஇசைக்கு இடமளிப்பதனைக் கம்பன் அமைக்கின்றான். தயரத மன்னன், கலைக்கோட்டு முனிவனை மகவருள் ஆகுதி வழங்குமாறு அழைக்க, உரோமபதன் நாட்டிற்குச் செல்லும் காட்சியில் பல்லியம் முழங்கப் பல்லாண்டு பாடும் காட்சி மைக்கப் படுகின்றது.

காகளமும் பல்இயமும் கனைகடலின் மேல்முழங்க கானம் பாட
மாகதர்கள் அரு மறை நூல் வேதியர்கள் வாழ்த்து எடுப்ப மதுரச் செவ்வாய்த்
தோகையர் பல்லாண்டு இசைப்ப கடல்தானை புடைசூழ சுடரோன் என்ன
ஏகி அருநெறி நீங்கி உரோமபதன் திரு நாட்டை எதிர்ந் தான் அன்றே (236)

படைஎழுச்சியின் அணிவகுப்புக்கு ஏற்பத் தாள இலயத்துடன் பாடப்படும் பாடல்நிலையையும் இங்குக் கருதலாம். மன்னன் மகன் திருமணம் காண எழுந்த மக்கள்—படை-மன்னர் பெருக்

கிலும், 'கோடி மங்கல மழலைச் செவ்வாய்ப் பருமணிக் கலா பத்தார் பல்லாண்டு இசை பர'வுதல் (804) காணப்படுகின்றது. மந்திர கீத ஓதை முதலியனவும் அமைகின்றன(809).

சங்கமும் பணையும் கொம்பும் தாளமும் கானத்தோடு
மங்கல பேரி செய்த பேர் ஒலி மழையை முட்ட (808)

எனப் படைச் செலவில் பல்லியம் முழங்கல், தற்காலப் படை இசையை(Military band)ஒத்த காட்சியைஅளிப்பதாகத் தோன்று கின்றது. மாகதர்கள் திரண்டு வாழ்த்தலும் (237), முறையின் மந்தர கீதத்து இசைப்பதம் தொடர்தலும் (5158), வானத்து அம் சொல் இன்சுவை அரம்பையர் பஞ்சமம் சிவணும் இன்இசை பாடலும் (6872), இசை திசை அளப்ப மன்னர் எதிர் கொள்ள லும் (4371) பிறவும் மன்னர் வாழ்க்கையின் இவ் இசை இணை வுக்குப் பன்முறை சான்று நல்குகின்றன. இராமாயண நிறை வில் இராமன் முடிசூட்டி அரியணையிலிருந்து அரசு செய்யும் சூழலிலும் மங்கல கீதம் பாடுதலும் (10336) பல்லாண்டு கூறலும் (10338) காட்டிக் காப்பியக் களனெங்கும் பல்லிசை முழங்கச் செய்கின்றான் கம்பன்.

நாடகமும், இசையும் போன்ற முதன்மையும், பயிற்சிப் பெருக்கும் காட்டாதபோதும், நுண்கலைகளான ஓவியமும் சிற்பமும் பற்றிய செய்திகள் சிலவும் கதைப் பின்புலத்தில் அமைந்து, கற்பனை அக்கலைத் துறைகளிலும் அறிஞனாகக் காட்டுகின்றன. நகரமைப்பில், ஓவியமும் சிற்பமும் இடம் பெற்று, மக்களின் கலைவாழ்வைப் புலப்படுத்துகின்றன. அயோத்தியில் ஓவியப் புறாவும் (115), பில நகரில் மயன் வருந்திச் செய்த சிற்பமும் (4553), மக்கள் கடை தேவர் தலை வான் உல கின் வையத்து ஒக்க உறைவோர் உருவம் ஓவியமும் (4559) அமைந்தமை காட்டப்படுகின்றன.

அழகிய, இனிய காட்சிகள், அவற்றின் நிறைவும் வண்மையும் பற்றி ஓவியமாக உவமிக்கப்படுகின்றன. சீதையை,

ஆதரித்து, அமுதில், கோல் தோய்த்து, 'அவயவம்
அமைக்கும் தன்மை
யாது' எனத் திகைக்கும் அல்லால் மதனற்கும் எழுத
ஒண்ணாச்சீதை (483)

எனக் கம்பன் வருணிப்பதில் ஓரளவு மிகைப்படுத்தி இந்நிலை அமைக்கப்படுகின்றது. இராமனைக் காணவந்த மகளிர் தன்மையை மிதிலையின் உலாவியற் படலத்தில் ஓவியப்படுத்தும் போதும்

சொல் நலம் கடந்த காமச் சுவையை ஓர் உருவம் ஆக்கி
இன் நலம் தெரிய வல்லார் எழுதியது என்ன நின்றாள்
(1074)

என இக்கலை வன்மை காட்டுகின்றான் கவிஞன். 'ஓவியம் புதுக்கினர் எனத் தருண மங்கையர் பொலிந்தார்' (828) என்பதிலும் இவ் அழகியல்பு புலப்படுகின்றது.

ஓவியம் எழுதும் ஓவியரின் செயலையும் உவமையாட்சியில் புலப்படுத்துகின்றான் காப்பியக் கலைஞன். புழுதி படித்த ஓவியத்தைப் புதுக்கும் முயற்சியில் ஈடுபடும் கலைஞனை, படைச் செலவால் எழுந்த தூசுபடிந்த மனைவியர் மேனியை நுண் ஆடையால் தூய்தாக்கும் கணவரில் காண்கின்றான் (X.8). அழகுடைக் காட்சியாக அமையினும், இயக்கமற்று இருக்கும் சூழலிலும் ஓவியமாக உவமிக்கப்படுகின்றது. 'எழுது சித்திரங்களும் இமைப்பு இலாத' (142) நிலையினவாக அமைதல் இவ் இணைவு நிலைக்கு அடித்தளம் அமைக்கின்றன எனலாம். சீதையைத் தேடி வந்த வானரர் ஏமகூடத்தின் அருகிலுள்ள சுரத்தில் கண்ட பிலநகரை வருணிக்குமிடத்தில் கவிஞன் இவ் உத்தியைக் கையாண்டு, உயிருடை மனித இயக்கமற்ற அந்நகரியல்பினைப் புலப்படுத்துகின்றான்.

பயில் குரல் கிண்கிணிப் பதத்த பாவையர்
இயல்புடை மைந்தர் என்று இவர் இலாமையால்
துயில்வுறு நோக்கமும் துணைப்பது அன்றியும்
உயிர் இலா ஓவியம் என்ன ஒப்பது (4556)

கைகேயியின் உரையால் பல்வகைத் துன்ப மெய்ப்பாடுகள் காட்டி அயிர்த்த தயரதனை, 'ஓவியம் ஒப்ப உயிர்ப்பு அடங்கி ஓயும்' (1508) எனக் கம்பன் காட்சிப்படுத்துவதிலும் இவ் இயல்பு பொருந்துகின்றது.

மனிதனின் துயர்நிலையில் உயிர் இல்லாத ஓவியத்தைக் காட்டும் கலைஞன், வண்ணம் நிறைந்த அரசனின் அரசியல்

அவை இருப்பில் உயிர்பெற்ற ஓவியத்தைக் காண்கின்றான். வில்லிறுத்து மங்கையைப் பெற்ற மணாளன்முன், மகளின் கோலம் காட்ட அமர்ந்த சனகனின் அவை இருக்கை,

தேவியர் மருங்கு சூழ, இந்திரன் இருக்கை சேர்ந்த
ஓவியம் உயிர் பெற்றென்ன உவந்து, அரசு இருந்த காலை
(1117)

என இந்திரன் அவையிருப்பின் ஓவியம் உயிர்பெற்ற நிலையில் காட்டப்படுகின்றது.

கோள்களின் செலவாலும் நாண்மீன்களின் இயக்கத்தாலும் வருநிகழ்வைக் கணித்துக்கூறும் சோதிடக் கலையிலும் கம்பன் மனமசெலுத்துகின்றான். வானியலின் அடிப்படையில் நாழிகை அறிதலும், சாதகம் கணித்தலும் நல்லநாள் பார்த்தலும் உலகின் இயல்பு நிகழ்வுச்சார்பு சொள்கின்றன. காப்பியக் கதைப்போக்கில் அமையும் இத்தகு செயல்கள் நம்பிக்கை வயப் பட்ட பழக்க வழக்கங்களாக அமைந்தபோதும் அறிவியல் சார்புடைய கலையாகவும் பொருந்துகின்றன. அரசன் அவை யின் முனிவரும், கணிசரும் இக்கலை வன்மையுடன் காட்டப்படு கின்றனர்.

குழந்தை பிறப்பின் நாளும் கோளும், அதன் வாழ்நாளின் ஏற்ற இறக்கங்களைச் சுட்டுதலால் அவற்றைக் கணிக்கும் பாங்கு அமைந்ததை இராமனாதியர் பிறப்பில் அமைக்கின்றான். புனர் பூசமும் கடகராசியும் இராமனுக்கும் (280), பூசமும் மீனராசியும் பரதனுக்கும் (283), ஆயிலியமும் கடகராசியும் இலக்குவனுக்கும் (284) மகமும் சிம்மராசியும் சத்துருக்கனுக்கும் (285) அமை வதாகக் காட்டுவதில் கவிஞனின் இக்கலையறிவு புலப்படுகின்றது.

நல்ல நிகழ்வுகள், நல்ல நாளில்நல்-நேரத்தில் நடத்தல் வேண்டும் எனும் விருப்பும், அவ்வாறு நிகழின் செவ்வியுடையது ஆகும் எனும் நம்பிக்கையும் இன்றும் என்றும் மக்கள் வாழ்வில் உள்ளதுவே. இத்தகு விழுப்பமுடைய பொழுதைக் கணித்தறி யும் கலையையும் மணம், முடிசூட்டு போன்ற மங்கல நிகழ்வு சார்த்திக் காட்டுகின்றான். 'மடந்தை மண நாளாம் எல்லையில் நலத்த பகல் நாளை' எனக் கௌசிகன் திருமணநாளைக் கல்விக் கரைகண்ட அறிவுத்திறனால் உரைக்கின்றான் (1156-57). இராமனுக்கு முடிபுனையும் நாள் குறிக்கும் தயரதன் முயற்சி யிலும் இது அமைகின்றது.

அரச அவை விடுத்த பின் ஆணை மன்னவன்
புரை தபு நாளொடு பொழுது நோக்குவான்
உரை தெரி கணிதரை ஒருங்கு கொண்டு ஒரு
வரை பொரு மண்டபம் மருங்கு போயினான் (1398)

நாள் மட்டுமன்றிப் பொழுதும் கணித்தல் இங்குக் காணப்படுகின்றது. 'பொருந்து நாள் நாளை நின்புதல்வற்கு என்றனர் திருந்தினார்' (1408) என்பதில் இக்கலை வல்லுநர் திருந்திய அறிவுடையோராகச் சுட்டப்படுகின்றனர். 'நல் இயல் மங்கல நாளும் நாளை' (1409) எனக் கூறியபோதும் முடிசூடல் நிறைவேறாத நிலை இங்கு அமைய, பதினான்கு ஆண்டுக்குப் பின் வந்த முடிசூட்டு விழாவிலும் நாள் பார்க்கப்படல் காட்டப்படுகின்றது. 'கருந்தட முகிலினாற்குக் காப்பு நாண் அணியும் நல் நாள்' (10310) பார்க்கப் பரதன், 'கோ முனியோடு மற்றைக் கணிதரைக் கொணர்க' (10312) என ஏவுகின்றான். தயரத ராமன் தாமச் சுந்தர மவுலி சூடும் ஓரையும் நாளும் கணிக்கப்படுகின்றன (10314).

முக்காலம் உணர்ந்த முனிவர், கலை வல்லுநர் வாயிலாக காலக்கணிப்புக்கலை புலப்படுத்தப்படுகின்றது. நந்தியம் பதியில் இராமன் வரவை எதிர்நோக்கி, திருவடி சூட்டிக் காத்திருக்கும் பரதன் சோதிடரைக் காலக்கணிப்புக்குப் பயன் கொள்ளுகின்றான். இராமன் வந்து எய்த வேண்டிய நாள் வந்த போதும் நாயகன் வராமையால் அவலமுற்றமைகின்றான்.

யாண்டு வந்து இறுக்கும் என்று எண்ணினான்
'மாண்ட சோதிட வாய்மைப் புலவரை
ஈண்டு கூய்த் தருக' என்ன, வந்து எய்தினார்
'ஆண் தகைக்கு இன்று அவதி' என்றார் அரோ (10160

என, வருவதையன்றி, சழிந்த ஆண்டுகளைக் கணக்கிட்டுக்கூறும் காலக் கணிதராக இவர் அமைகின்றனர். மன்னர் அரசவை இத்தகு கடிகை மாக்களைக் கொண்டு அமைதலும், மன்னர் எங்குச் செல்லினும் அவரைத் தொடரும் பரிவாரங்களில் இவரும் அமைதலும் இயல்பு. எழுச்சிப் படலத்தின் கடிகையர் கவியின் ஓதையுடன் இந்திரத் திருவன் செல்லும் காட்சி (809) இவ் எண்ண இணைவைத் தருகின்றது.

பட்டறிவாலும், உய்த்துணர்வாலும், ஆழ்கல்வியாலும், வளரும் இக் கணித்தற் கலையை, பறவைச் சகுனத்தின் அடிப்

படையில் வருவது கூறும் மாண்பாளனிடமும் காட்டுகின்றான் கவிஞன். 'நெறி உணர்வான்' எனவும் 'நினைவாளன்' எனவும் 'புள்ளின் குறி கொள்வான்' எனவும் (1268) இவ் ஆராய்ச்சியாளன் குறிக்கப்படுகின்றான். வருவதை சகுனத்தாலும் கனவினாலும் கணித்துக்கூறும் திரிசடையிடமும் இக்கல்வியின் வெளிப்பாட்டைக் காண்கின்றோம். (5104)

அறிவியல் சார்ந்த பயன்படு கலைநிலை இதில் வெளிப்படுகின்றது. இயற்கை அறிவியலும், வானிலைக் கல்வியும் அடிப்படையாகி, மூடநம்பிக்கையாகித் தனிமையுறாது, கலைத் தன்மையுடன் இது மிளிர்கின்றது. உலகியல் கண்ணோட்டத்துடனும், காலக்கோட்பாட்டுடனும் இக் கலையறிவையும் கம்பன் புலப்படுத்துகின்றான்.

கட்புலன் வாயிலாக மனத்திற்கு இன்பம் தரும் சித்திரமும் சிற்பமும் போன்றும், செவிப்புலன் வழியாக இதயத்திற்கு மகிழ்வு தரும் இசை போன்றும், இவ் இருபுலன் மூலமாக உளத்திற்கு ஊற்றம் அளிக்கும் நாடகம் போன்றும் அன்றி; கவிதை, கற்றலால் கட்புலன் வாயிலாகவும் செவிப்புலன் வழியாகவும்உட்புகுந்து, மனத்தைக் களனாகக் கொண்டு அருவநிலையில் ஐம்புலனுக்கும் இன்பம் அளிக்கின்றது. இதனால் பிற கலைகளிலும் இலக்கியக்கலை சிறந்தது எனக் கூறுவதும் உண்டு. மொழியே கலையாகிக் கவிஞனின் உள்ளத்தின் பொருளால் செழித்து வளமுறும்போது இலக்கியக்கலையாகி வெளிவருகின்றது எனலாம்.

பல்கலை வன்மையையும் தன் காப்பியத்தில் படைத்து அளித்து, இலக்கியக் கலை வல்லுநனாகவும் அமைகின்றான் கம்பன். கவிதைக்குப் பல விடங்களிலும் விளக்கம் தருதலும், இயல்பு உரைத்தலும் வழி இலக்கணமும் சுட்டுகின்றான் இக் கவிவலான். தன் கவிதையே இலக்கியமாக, கல்வியறிவாலும், பயன்பாட்டறிவாலும் கவிதைபற்றிய எண்ணங்களைத் தருகின்றான். உவமை வாயிலாகவும் அடைகள் வழியாகவும் நற்கவிதை நிலையையும், புன்கவிதை இயல்பையும் உணர்த்துகின்றான். இதனால் கவிதைக் கலையும் புலப்படுகின்றது.

கிட்கிந்தையின் பம்பைப் பொய்கைக் காட்சியில் கவிதையின் தெளிவையும் இனிமையையும் ஆழமுடைமையையும் புலப்படுத்து

கின்றான் கம்பன். பல்பொருள் பயக்கும் சொல் நயமும், கேட்டதனைத்தும் அளிக்கும் கற்பகம் அனைய பொருள் வளமும் கவிஞன்வழிக் கவிதைக்கும் உரியது ஆகின்றது.

எல் படர் நாகர் தம் இருக்கை ஈது எனக்
கிற்பது ஓர் காட்சியிது எனினும் கீழ்உற
கற்பகம் அனைய அக் கவிஞர் நாட்டிய
சொற் பொருள் ஆம் எனத் தோன்றல் சான்றது (3713)

நாக உலகம் போன்று நன்மணிகள் பரந்த பொய்கையின் நீருள் ஆழ்ந்த பகுதி, கவிதையின் பல அணி விளக்கங்களை சுட்டு கின்றது எனலாம். நவில்தொறும் நயம் பயத்தலும், ஆய்ந்து காண ஆழ்கருத்து அளித்தலும், நினையும் தொறும் இன்பம் தருதலுமான கவிதையின் பாங்கு பொய்கையின் இன்பக் காட்சியிலும் தென்படுகின்றது என்பதால் போலும் இவற்றை இணைத்து அளிக்கின்றான் கம்பன். கோதாவரி நதியின் நீர்ப்பெருக்கில் கவிதையைக் காணும் இயல்பும் இதனுடன் பொருத்தி நோக்கத்தக்கது. நதியைப் போன்று கவிதையும் உலகுக்கு அழகாக, மக்களுக்குப் பயன்படக்கூடியதாக அமைகின்றது. இழுத்து வரும் பல பொருள்களை, இருகரை யெங்கும் பரப்பிப் பல்லோருக்கு அளிக்கும் அவ் ஆற்றைப் போன்றே கவிதையும் உயர்ந்த, சிறந்த பொருள்வளம் தருகின்றது; உறுதிப்பொருள் பயக்கின்றது. ஆறு வளப்படுத்தும் விளைநிலம் போன்று கவிதை அறிவை வளப்படுத்து கின்றது. வெப்பம் தணிக்கும் இடத்தை உடைய நீர்த்துறைகள் பல பெற்ற இந்நதிபோன்று, அமைந்த அகப்பொருள் துறைகள் தழுவி அமைவது கவிதை. குறிஞ்சி முதல் நெய்தல் வரை ஐவகை நிலம் வழியாக ஆறு ஒழுகிவர, புணர்தல் முதலிய ஐவகை உரியொழுக்கமும் விரவி வருகின்றது கவிதை. ஆழத்தில் படிந்து கிடக்கும் பொருட்களும் தெரியும்படி தெளிந்த நீருடன் அமைகின்றது கோதாவரி; அதனைப் போன்று அழகு மிகும்படி நன்றாகப் பொருள் விளங்கி அமைகின்றது தமிழ்க்கவிதை. குளிர்ந்த நீரோட்டமுடைய ஆறுபோன்று இனிய ஆற்றெழுக்கான நடையுடனமைகின்றது சான்றோர் கவிதை (2732).

கோதாவரியில் சான்றோர் கவிதையைக் கண்ட கவிஞன் அசமியின் கலங்கல் நீரில் புன்கவியைக் காட்டுகின்றான். புன்

கவியின் தெளிவின்மை பற்றி அகழி நீர் ஒப்பாகப் பொருந்து கின்றது (106). கவிதை பற்றிய எண்ண உணர்வு மிகுதிபற்றிப் போலும் இத்தகையதல்லாப் போர்ச்சூழலிலும் கம்பன் கவிதையைக் காண்கின்றான். சொல்லாக அமையும் இராமன் பகழியை, தாடகை வதையில் 'கல்லாப் புல்லர்க்கு நல்லோர் சொன்ன பொருள்' (388) எனக் காட்டிய கம்பன், கவிதையின் ஆற்றலுடைச் சொற்செறிவினை அவ் இராமனின் அம்புகளில் புலப்படுத்துகின்றான்.

அம்பறாத் தூணிக்கு உவமை கூறுமுகத்தால் நல்ல கவிஞரின் சிறப்பியல்பை முதற்போர்புரி படலத்தில் விளக்கு கின்றான் கவிவலான்.

பல் இயல் உலகு உறு பாடை பாடு அமைந்து
எல்லை இல் நூற் கடல் ஏற நோக்கிய
நல் இயல், நவை அறு, கவிஞர் நா வரும்
சொல் எனத் தொலைவு இலாத் தூணி தூக்கினான் (7130)

பல இயல்புகள் பொருந்திய உலகமொழிகள் பலவற்றிலும் பொருந்திக் கிடந்த எண்ணிக்கைக்கு அடங்காத நூற் பெருக்கை அறிந்து, கல்விக் கரை ஏறியவனாகக் கவிஞன் அமைதல் வேண்டும். அறிவால் குற்றம் அற்று, நல்லியல்புகள் பொருந்தி அமையும் அவன் நாவன்மை தரும் சொற்பெருக்கு வகைவகை யாக அமைகின்றது; வற்றாது வருகின்றது; மீண்டும் மீண்டும் பெருகுகின்றது; எத்துணை கவிதை எழுதினும் வற்றாது சுரப்பது. பல்வகை ஆற்றல் உடைய பல்வகைப் பகழிகளால் நிரம்பி, எடுக்க எடுக்கக் குறையாது அமையும் இராமனின் அம்பறாத் தூணியில் கம்பன் கவிதையையும் காணமுடிகின்றது; கவி ஆற்றலையும் கவிஞன் செயலையும் இது புலப்படுத்தி நிற்கின்றது.

முதல் நாள் போரின் அனுபவத்தைக் கும்பகருணனுக்கு இராவணன் கூறுமிடத்திலும், இராமனின் பகழி வன்மை கவிஞரின் செய்யுள் சிறப்புடன் சுட்டப்படுகின்றது. எதிரின்றி வெல்லும் கவிஞரின் ஆற்றலை, எதிர்ப்பு ஏற்படினும் வாதிட்டு வெல்லும் புலவனின் வன்மையை உலகியலில் விரும்பிய கம்பன் அவற்றை உவமை வாயிலாக இராமனின் தூணியிலும் பகழியிலும் காட்டுகின்றான் போலும்.

நல்இயல் கவிஞர் நாவில் பொருள் குறித்து அமர்ந்த நாமச்
சொல் என, செய்யுள் கொண்ட தொடை என,
தொடையை நீக்கி
எல்லையில் சென்றும் தீரா இசை என, பழுது இலாத
பல் அலங்காரப் பண்பே காகுத்தன் பகழி மாதோ (7293)

முன்பு சுட்டிய உவமைநிலையின் தொடர்ச்சி மட்டுமன்றி, விரிவும், விளக்கமும் கூட இங்குப் பொருந்துகின்றது. குறிதவறாத அம்புகளில், நற்கவிஞர் நாவினின்று புறப்படுகின்ற பொருள் நோக்குப் பிழையாச் சொற்களைக் காண்கின்றான். பொருளாழமும் பொருட் செறிவுமுடைய இச்சொற்கள் பொருத்தமுறக் கோவையாக்கப்படும்போது, ஆற்றலுடை அம்பாகச் செயற்படுகின்றன. இச்செய்யுளாகிய தொடைக்கு இனிமைசேர்க்கும் இசை, திக்கெட்டும் பரவும் அம்பாற்றலின் புகழ்போன்று, வரையறை யற்றும் மங்காதும் அமைகின்றது. பயன்பாடுடைய செய்யுள், குற்றங்கள் நீங்கி, நலன் பல பொருந்தி அமையும், அறவழி சென்று மறம் நீக்கும் அம்பா கின்றது. எல்லா இலக்கண அமைப்பும் அழகும் பொருந்திய பகழிபோன்று, கவிதை பல அணியலங்காரங்களைப் பெறு கின்றது. கொடிய கணையும் இனிமைப் பண்புடை கவிதையும், கவியருமை பற்றியும், அறமுடைமை பற்றியும், மெய்ப்பொருள் உணர்த்துவது பற்றியும் இயைபு பெறுகின்றன எனலாம்.

இராமன் பகழியால் மகுடம் இழந்து நிற்கும் இராவணனைக் காட்டும்போதும் கவியியல்பைப் பொருத்திக் காட்டத் தவறவில்லை கவிஞன். 'ஆற்றலுடைக் கவிஞன் பாடிய அங்கதக் கவிதை வகையால் புகழ் இழந்து, நிலை இழிந்து அமையும் ஒருவன் போன்று, இராமன் பகழியால் மகுடம் இழந்து நிற்கின்றான் இராவணன். இராவணன் புகழை அழிக்கின்ற வலிமையுடையதாகப் பகழி அமைந்ததால் அங்கதச் செய்யுட் தன்மை பெறுகின்றது.

மாற்ற அருந் தட மணி முடி இழந்த வாள் அரக்கன்
ஏற்றம் எவ் உலகத்தினும் உயர்ந்துளன் எனினும்
ஆற்றல் நல் நெடுங் கவிஞன் ஓர் அங்கதம் உரைப்ப
போற்ற அரும் புகழ் இழந்த பேர் ஒருவனும் போன்றான்
(7264)

வகைச் செய்யுளின் இயல்பு, நல்லாற்றலுடைக் கவிப் பண்புக்கு உவமையாக அமையும் பகழியிலேயே காட்டப்படுவது சிந்தனைக் குரியது. ஒரே கவிஞன் பல்வகைச் செய்யுளும் இயற்றும் ஆற்றலினன் ஆதலும், ஒரே கவிதை அல்லது இலக்கியம் பலருக்குப் பல பயனும் சுவையும் அளித்தலும் இவ் எண்ணத்தை அளித்திருக்கலாம். மறமழிக்கும் அறமுடை அம்பும், அறம்பாடும் வசைக் கவியும் தம்முள் கொள்ளும் இவ் இயைபு, கவிஞனின், கலையுணர்வையும் சுவையறிவையும், நயத்தையும் புலப்படுத் கின்றது.

வாழ்வியலில் இயல்பாக அமையும் மெய்ப்பாடுகளை இலக்கியத்திலும் நாடகத்திலும் தந்து, அவற்றில் வழக்கியல் உலகின் நடப்புமுறை பிரதிபலிக்கச் செய்வதிலும் கவிஞனின் கலையறிவு வெளிப்படுகின்றது. நெஞ்சச் சுவைகளையும் மன உணர்வுகளையும் மெய்ப்படுத்தி முக பாவங்களாலும் உடற் செய்கைகளாலும் வெளிப்படுத்திக் காண்போர்க்குப் புலப் படுத்தும் நாடகக் கலையினின்று இன்னும் வேறுபட்டு, சொற்சித்திரங்கள் வாயிலாகவே புலப்படுத்தும் கவிஞர் கலைநலம் நுண்மையுடையதாக அமைகின்றது. நகை, வெகுளி, துயரம் முதலிய எவ் உணர்வையும் கண்முன் காட்சிப்படுத்தும் அளவிற்குக் கவிஞன் சொல்லால் உருவமைத்துத் தருவதில் அவன் கலைவன்மை புலப்படுகின்றது. ஒரே சுவைநிலையை உணர்த்தும்போதும் சூழலுக்கு ஏற்பவும், பாத்திரப் பண்பு-மனநிலைக்கு ஏற்பவும், உலகியற் சாயல் பொருந்த அமைக் கின்றான் கவிஞன்.

பதினான்கு ஆண்டுக்காலம் முடிந்தபோதும் காகுத்தன் வாராமையால் எரிபுகச் சித்தமான பரதனுக்கு, அனுமன் கொண்டுவந்த நற்செய்தி உயிரளிக்கும் இன் அமுதாக அமை கின்றது. கழிபேருவகையால் தன்னை மறந்து, காதல் எனும் கள் உண்ட நிலையினனாகச் செயல்காட்டும் அவன் உணர்வுக் கலவை நிலையைக் கம்பன் காட்சிப்படுத்துகின்றான்.

அழும், நகும், அனுமனை ஆழிக் கைகளால்
தொழும், எழும், துள்ளும், வெங் களி]துளக்கலால்
விழும் அழுந்து, ஏங்கும், போய் வீங்கும், வேர்க்கும், அக்
குழுவொடும் குனிக்கும், தன் தடக்கைகொட்டுமால் (10199)

மகிழ்ச்சி மிகுதியால் வணங்கிக் கூறும் முறைமை மறத்தலும், செய்தி தெளிவின்றி வெளிப்படலும் விரைவில் கூறும் விழைவால்

சொற்கள் பொருட் தெளிவின்றி ஒலிக்கலவையாக அமைதலு மான உலகியல் நிலையைக் கம்பன் நீலமாலையினில் வெளிப் படுத்துகின்றான். இராமன் வில்லிறுத்த செய்தியைச் சீதைக்குத் தெரிவிக்கச் சென்ற சேடியிடம் இம் மெய்ப்பாட்டு நிலை அமை கின்றது.

வந்து அடி வணங்கிலள்; வழங்கும் ஓதையள்,
அந்தம் இல் உவகையள், ஆடிப் பாடினள் (722)

சிறுசிறு தொடர்கள் உணர்ச்சிப் பிழம்பாகிக் கற்போரை ஒத்துணர்வு கொள்ளச் செய்யும் வண்ணம் அமைவதில் கவிஞனின் கலையாற்றல் வெளிப்படுகின்றது.

மகிழ்வுக்கு நேர்மாறான துயர நிலையிலும் இத்தகு சொற் சித்திரம் அமைத்து வன்மை காட்டுகின்றான் கம்பன். இலக்குவ னுடன் பொருது, அவன் பிறைமுக அம்பால் தலை கொய்யப் பட்டுக் களத்தில் மடிந்த இந்திரசித்தின் குறையுடல் கண்டு அழுத மண்டோதரியின் துன்ப மெய்ப்பாட்டில் அவல நாடகத்தையே அமைத்துவிடுகின்றான் கவிஞன். நிகழ்வின் கடுமையும், கொடுமையும் காரணமாக மெய்ப்பாடுகள் அற்ற முதல் நிலையும், படிப்படியே நெஞ்சடைக்கும் துயரம் அழுகை யாக உருமாறி அரற்றலாகப் புறபபடலும், நினைந்து நினைந்து நெஞ்சழிந்து விம்மலுமாகப் புலப்படுத்தப்படுகின்றன.

உயிர்த்திலள், உணர்வும் இல்லள், உயிர் இலள் கொல்லோ என்னப்
பெயர்த்திலள் யாக்கை, ஒன்றும் பேசலள், விம்மி யாதும்
வியர்த்திலள், நெடிது போது விம்மலள், மெல்ல மெல்ல
அயர்த்தனள் அரிதின் தேறி,வாய் திறந்து அரற்றல்உற்றாள் (9231)

காட்சியாலும் நிகழ்வாலும் துன்புறும் இந்நிலைக்குச் சிறிது வேறுபட்டு நினைவுகளால் துயருழக்கும் சீதையின் நிலையைக் கம்பன் இத்தகு மெய்ப்பாடுகள் வழியே புலப்படுத்துகின்றான். விழுதலும், விம்முதலும், வெதும்புதலும், வெருவலும், எழுத லும், ஏங்குதலும், இரங்குதலும், இராமனை எண்ணித் தொழுத லும், சோருதலும், துளங்குதலும், துயிருழந்து உயிர்த்தலும், அழுதலுமன்றிப் பிற மெய்ப்பாடுகள் அற்ற துன்ப நிலை இங்குப் புலப்படுத்தப்படுகின்றது. மிக்க துன்பம் உற்றவர் நினைந்து நினைந்து உறும் துயரத்தின் பல்வகை மெய்ப்பாட்டு வெளிப்

பாடுகளாக இவை பொருந்துகின்றன. உலகியலையே படைப்பி னும் கலையுணர்வுடன் கலைவடிவு பெறும் வண்ணம் படைக்கும் கம்பன் ஆற்றல் இங்கும் வெளிப்படுகின்றது.

உலக வாழ்வியல் போன்றே கலையும் எல்லை இல்லாதது; வரையறை இடமுடியாதது, விரிந்தும் வளர்ந்தும் செல்வது. பல் வகைப் பரப்புடைய உலக வாழ்வியலின் ஆழங்களைக் கண்டு காப்பியக்களனில் காட்சிப் படுத்துவதுடன் அமைந்துவிடாது, ஒரு கலைக் காப்பியம் இயற்றும் பொருத்தத்துடன் கலைச் செய்திகள் பலவும் இணைத்து அழகுக்கு அழகு செய்கின்றான் கம்பன். பல்வகைக் கலை பற்றிய அனுபவபூர்வமான அறிவும் நூலறிவும் தெளிந்து தேர்ந்து செவ்வியுடைச் சூழலில் பயன் கொண்டதால், அவை செம்பொன்னில் பதிந்த மணியாக ஒளிரு கின்றன. கலையும் வாழ்க்கைக்காக அமைதலில், அக்கலையி லும் உலகியல் விரவி வந்து, உயிரோட்டம் அளித்து இனிமை சேர்க்கின்றது. செயற்கைக் கலவையாகவோ இயல்பல்லா அலங்காரமாகவோ தனித்து நிற்காது உடலும் உயிருமாக உலகி யலும் கலையியலும் கலந்து பொருத்தமுடை வடிவு கொள் கின்றன.

பல்துறை வல்லுநனாகவும் பல்துறை அறிஞனாகவும் அமை யும் கம்பன் பல்கலை அறிவு நிறைந்தோனாகவும் அமைந்தமை யால், அவன் வனைந்த கவினுறு காப்பியமும் பல்நிலையினருக் கும் தெவிட்டாத தெள்ளமுதாக, வெறுக்காத விருந்தாக கால இட எல்லைகளைக் கடந்தேறியமையும் வெற்றிப்படைப்பாக அமைகின்றது.

# உலகியலில் இறைமை

திருமாலே பரம்பொருள் என்ற வைணவ பக்திக் கோட்பாட்டை அடிநாதமாகக் கொண்டு காப்பியம் படைத்த கம்பன் இறையியல் நிலையை, இறைமைக் கொள்கைகளை, கடவுள் பற்றிய எண்ணங்களைக் காட்டுவதிலும் தெளிந்த தேர்ச்சி காட்டுகின்றான். இம்மை உலகியலிலும், மறுமை நோக்கிய இறையியல் கருத்துகள் விரவியும் விரிந்தும் பரந்தும் அமைதலுக்கேற்பக் காப்பியக்களனிலும் இப்பொருண்மை இடம் பெறுகின்றது. 'உலகம் எனக் காப்பியத்தைத் தொடங்கிய முதற்பாடலிலேயே இறையியல்பு சுட்டி, உலகமும் இறைமையும் ஒன்றையொன்று பிரிந்து நிலவா இயல்பையும் வெளிப்படுத்தி விடுகின்றான் கவிஞன்.

மனிதனின் பகுத்தறிவு இறைமையை உருவாக்குகின்றது. ஒரு நெறிமுறையுடன் செயற்படும் அண்டசராசரங்களும் மனிதனால் அடக்கலாகா ஐம்பூதத்தின் செயல் நிலையும், ஆய்வுக்கும் அறிவுக்கும் எட்டாத பல உலகியல் உண்மைகளும், அனைத்திற்கும் அடிப்படையாக அமையும் அளவிட்டறியாப் பேராற்றலை நினைந்து, அதனை இறைமையாக ஆக்குகின்றது. கற்பனையால் அப்பேராற்றலுக்கு உருவமும் பண்பும் செயற்பாடுகளும் சேர்க்கின்றது. தனிப்பட்ட மனிதனின் உளநிலைக்கு ஏற்பவும் அறிவு நிலைக்கு ஏற்பவும் இவை விரிந்தும் வேறுபட்டும் செல்கின்றன.

உலகம் அனைத்திற்கும் காரணராக, தோற்றுவித்தவராக, வாழ்விப்பவராக, இயக்கிக் கொண்டிருப்பவராக இறைவன் அமைகின்றான். ஒன்றாயும், உடனாயும், வேறாயும் இருந்து உலகக் காட்சியைக் கண்டுகொண்டு இருக்கின்ற இறைவனை

உலகின் தலைவனாகக் கருதுகின்றான் கம்பன். அத்தகைய இறைவன் பற்றிய உலக எண்ணங்களை உலகோர் கருத்துகளை-மக்கள் நினைவுகளை-சான்றோர் சிந்தனைகளை மிக அழகாக அங்கங்குக் காட்டிச் செல்கின்றான் கம்பன். மானிடர் உணரும், அல்லது கூறும் எல்லா நிலைகளிலும் இறைவனைப் புலப்படுத்தும் கோட்பாட்டினனாகக் கவிஞன் அமைதலால் இறைக் கொள்கையிலும் உலக நோக்குப் பொருந்துகின்றது.

இறைவன் ஒருவன் தான் என்கின்றனர் ஒரு சாரார். அதனை ஏற்காத சிலர் பலதேவர் உளர் என எதிர்ப்புத் தெரிவிக்கின்றனர். வேண்டுதல் வேண்டாத இறைவன் எப்பண்புகட்கும் அப்பாற் பட்டவன் என்கின்றனர் சிலர்; அவ்வாறு அமையாது ஆண்டவனின் அருட் பண்புகள் இவையிவை என வரையறுக்கின்றனர் வேறு சிலர். இவர்கள் ஒருபுறம் இருக்க, ஆண்டவன் என்று ஒருவன் இல்லை எனச் சாதிக்கின்றனர் பிறிதொரு சாரார், இருப்பதாலேயே இல்லை என்கின்றனர் இவர் என மறுத்துப் பல சான்று காட்டி அவன் உளன் எனும் உண்மையை வலியுறுத்து கின்றனர் மற்றையோர். இறையியல் வாதிகளும், அறிவு வாதிகளும் கொள்ளும் இம் முரண்பாட்டை உலகியலில் காண்கின்றான் கம்பன். அத்வைதச் சிந்தனையாளரும் வேதாந்திகளும் சித்தாந்திகளும், அறுவகை சமயத்தாரும், பகுத்தறிவு வாதிகளும் கொண்ட எண்ண வேறுபாட்டில் கருத்துச் செலுத்துகின்றான் கவிஞன். எல்லாவற்றிலும் எல்லாமாகி அமையும் இறைவன், உள்ளோருக்கு உள்ளோனாகவும், இல்லோருக்கு இல்லானாகவும் தென்படும் உலகியலை உட்கொள்ளுகின்றான். இயல்பு இதுதான் என்று அறுதியிட முடியாத இறைமையை உலகோர் அணுகும் இயல்பு இதுதான் எனக் காண்கின்றான். இவர்களின் கூற்றுகளுக்கும் வரையறைகளுக்கும் எல்லாம் ஏற்புடையானாகி, இன்னும் யாரேனும் ஏதேனும் கூறின் அதற்கும் இடமளிப்பானாகி அமையும் இறையை, இவர்கள் சொல்லாலே சுட்டி, அதன் எல்லையின்மையையும், வரையறைக்குள் அடங்காமையையும் உள்ளத்தறிவால் உணரலாகா நிலையையும், கடந்து உள் நிற்கும் தன்மையையும் காட்டிவிடுகின்றான்.

ஒன்றே என்னின் ஒன்றே ஆம்
பல என்று உரைக்கின் பலவே ஆம்
அன்றே என்னின் அன்றே ஆம்
ஆமே என்னின் ஆமே ஆம்

இன்றே என்னின் இன்றே ஆம்
உளது என்று உரைக்கின் உளதே ஆம்
நன்றே நம்பி குடி வாழ்க்கை
நமக்கு இங்கு என்னோ பிழைப்பு அம்மா (6059)

கவிநயத்தால் உலகுணர்வு வாயிலாக இறைவனை இனம் காட்டும் இக்காட்சியில் பெரிய குணநிறைவுடைய இறைவனின் இயல்பு நிலை புலப்படுத்தப்படுகின்றது.

காப்பியத் தொடக்கத்தில் அமைத்த கடவுள் வாழ்த்தொடு நின்றுவிடாது காண்டங்கள்தோறும் கடவுள் வாழ்த்துடன் தொடக்கம் செய்த கவிஞன், காப்பியத்தலைவன் இராமனை, இறைவன் என்ற கோட்பாட்டுடனேயே கதைக்களன் முழுமையிலும் படைத்தமையால் இறையியல்பைப் பன்முறை அவனைக் காட்டியே உணர்த்திவிடுகின்றான். கவிக்கூற்றாகவும், இயல்பு உரைத்தலாகவும், உவமை யாட்சியிலும் அமைப்பதோடு, பிற பாத்திரங்கள் வழியாகவும் உணர்த்துகின்றான். இயற்கையிலும் இறைச்சூழலைக் காண்கின்றான். காட்டுகின்றான். மெய்ப்பொருள் விவாதங்களும் விளக்கங்களும் வாய்ப்பு ஏற்படும் இடத்தில் தருவது மூலம் காப்பியம் எங்கும் இறை உணர்வு பரவச் செய்கின்றான்.

இறைத்தத்துவ வெளியீட்டை முதன்மை நோக்கமாகக் கொண்டு. மூலநூலிலிருந்து வேறுபட்டுக் காப்பியக்களனில் இரணியன் வதையைக் கிளைக்கதையாகக் கம்பன் அமைப்பதாகத் தெரிகின்றது. மூலமுதலான இறைவனை உணர்ந்த பிரகலாதன் வாயிலாக அறிவுக்கு முடிவிடமான இறைமையைப் புலப்படுத்துகின்றான் கவிஞன். இறைத்தத்துவப் பிழிவாகவே அமையும்படிக்கு இப்படலத்தை வாய்ப்பாகக் கொள்ளுகின்றான். நீக்கமற எங்கும் எதிலும் நிறைந்து, அனாதி ஆய், பழமைக்குப் பழமை ஆகி,புதுமைக்குப் புதுமை ஆகி,தோற்றமும் முடிவும் ஆகி, அனைத்திற்கும் மூலமும் முதலுமாய் அமையும் இறைமை, இரணியனுக்கு அளிக்கும் பிரகலாதனின் அறிவுரையில் வடிக்கப்படுகின்றது.

தன்னுளே உலகங்கள் எவையும் தந்து, அவை
தன்னுளே நின்று, தான் அவற்றைத் தாங்குவான்
பின் இலன், முன் இலன், ஒருவன், போகிலன்
தொல் நிலை ஒருவரால் துணியற்பாலதோ (6247)

தனக்கு எவரும் ஒப்பில்லாத இறைவனின் 'ஒருதனி' நிலைமையும், அவனே உலகப்படைப்பு அனைத்திற்கும் காரணம் ஆனமையும், பரமாத்மாவாகி எங்கும் பரந்தும் ஜீவாத்மாவாகி எவ்வுயிரிலும் தங்கியமையும், சுயம்பு வானமையும், அழிவற்ற தன்மையினனாதலும், மாறாதவனாதலும் இங்கு உணர்த்தப் படுகின்றன. கருதலளவையால் துணியப்பெற்ற முதற்கடவுளது இயல்பினை விரித்து உரைக்கும் முறையில் இது அமைவதாகக் கொள்வர். சிலம்பி தன் வாயின் கூர்நூல் இயையக் கூடு இயற்றுவதில் இறைமையைக் காட்டும் பாங்கும் (8665) இதனுடன் இணைத்து நோக்கற்பாலது.

இறைவனை அறியும் முயற்சியில் எழுந்த எண்ணக் கோவையான வேதங்களும் இறைவனை முழுமையாக அறியவோ காட்டவோ இல்லை. இறைவனைப்பற்றி வேதங்கள் ஒரு தன்மையாகக் கூறாமல் பல வகையாகக் கூறுகின்றமையின் அவ் இறைவனுடைய மாயச்செயல்கள் அறிதற்கு அரியனவாக அமைகின்றன. பரம்பொருள் ஒன்று என்றும், பலவென்றும், அகக் கண்ணாகிய ஞானத்தால் காணத்தக்க ஒளிப்பொருள் என்றும், புறக்கண்ணால் காணத்தக்க சூரியனாகிய பொருளே என்றும் ஆனந்த மயமானது என்றும், முக்கரணங்களுக்கு எட்டாது அயலாக இருப்பதென்றும் வேதங்கள் பலபடியாகக் கூறுவதை நாகபாசப் படலத்தில் கருடன் உரையில் இராமனுக்கு வெளிப்படுத்தும் வாயிலாகப் படைக்கின்றான் கம்பன்.

தான் அந்தம் இல்லை; பல என்னும் ஒன்று;
தனி என்னும் ஒன்று, தவிரா
ஞானம் தொடர்ந்த சுடர் என்னும் ஒன்று,
நயனம் தொடர்ந்த ஒளியால்
வானம் தொடர்ந்த பதம் என்னும் ஒன்று; மறை'
நாலும் அந்தம் அறியாது
ஆனந்தம் என்னும்; அயல் என்னும்; ஆர்இவ்
அதிரேக மாயை அறிவார் (8256)

வேத விளக்காகியது தான், முடிவில்லை ஆதலால், மனமும் வாக்கும் செய்கையும் 'யானும் நீதானே' என்று சொல்லும், இது இருக்குவேதக்கருத்து. 'யானுந் தானாய் ஒழிந்தானே என்று சொல்லும் யசுர் வேதம். 'நீங்காத அறிவைக் கூடிய ஜோதி அவன் என்னாகி ஒழிந்தான்' என்று சொல்லும் சாம வேதம். இரண்டு கண்களும் பற்றிச் செல்லுகிற ஜோதியாலே

பரமாகாசமாகக் கூடப்பெற்ற இடம் 'யானே நீயாகி என்னை ஆள்வானே' என்று கூறும் தகுதிபெற்றது அதர்வண வேதம். இவ்வாறு இறைவனின் அந்தம் அறியா வேதங்கள் வழியாக இறைவனை முழுநலம் (ஆனந்தம்) என்றும், அவ் ஆனந்தத்துக்கு இடமாகிய முழுவுணர்வு என்றும் கூறுமளவிற்கு, இறைவன் ஞானானந்தமயனாக அமைகின்றான்.*

உலக அறிவியலுக்கு எட்டாது அமையும் இவ்இறைமை பலராலும் ஏற்றுக்கொள்ள முடியாத, சர்ச்சைக்குரிய விஷய மாகவும் அமைகின்றது. இதனைப்போன்றே வினை, விதி, பிறப்பு, மறுமை பற்றிய செய்திகளும் சிலரால் உலகியலுக்கு உட்படாதனவாகவும், பகுத்தறிவுக்கு ஏற்காதனவாகவும், மூடநம்பிக்கையாகவும், கடியப்பட வேண்டியனவாகவும் கருதப் படுகின்றன. ஆயின் இக்கருத்துக்களை எதிர்க்கும் அதே உலகம், இவற்றை ஏற்றும், சார்ந்தும், நம்பியும், ஒட்டியும் செல் கின்ற மதத்தினையும் மக்களையும் கொண்டு இயல்வதால், இக் கொள்கைகள் வேரூன்றிய வாழ்வியலையும் பெருகக் காட்டு கின்றது. மதமே வாழ்க்கையாக, இறைமையே பற்றுக்கோடாக வினையும் விதியுமே நெறியாக, இம்மையிலும் மறுமை நோக்கிய வாழ்வும் பிறப்பறுக்கும் விருப்பும் கொண்டு அமையும் நிலையில், இது உலகியலாகி முழுமை பெறுகின்றது எனக் கூறலாம்.

கம்பன் காட்டும் காப்பியக் கதைக்களனில் விதி மிகுதியாகச் செயலாற்றுகின்றது. தேவர் விருப்பும் முனிவர் விழைவும் நிறைவேற்ற அரக்கர் எனும் மரம் அழித்து அறத்தை மீட்கும் அடிப்படை நோக்கத்திற்காகப் பரம்பொருள் இராமனாக அவதரித்தான் என்பதில் ஏற்கெனவே நிச்சயிக்கப்பட்டுவிட்ட விதிநிலை புலப்படுகின்றது.

...தேவி
தூய சிந்தையும் திரிந்தது, சூழ்ச்சியின் இமையோர்
மாயையும், அவர் பெற்ற நல் வரம் உண்மையாலும்
ஆய அந்தணர் இயற்றிய அருந்தவத்தாலும் (1483.)

என்றும், 'அரக்கர் பாவமும், அல்லவர் இயற்றிய அறமும், துறக்க நல் அருள் துறந்தனள் தூ மொழி மடமான்' (1484) என்றும் அமையும். கம்பன் வாக்குகள் இவ்வுணர்வுநிலை சுட்டு

* கம்பராமாயணம்-யுத்த காண்டம் (மூன்றாம் பகுதி), அண்ணாமலைப் பல்கலைக் கழகம், 1970, பக்கம் 637.

கின்றன. காப்பியத்தின் எல்லா நிகழ்வுகளும் விதிவகுத்தவழியே செல்கின்றன: சென்று நோக்க நிறைவேற்றம் கொள்கின்றன, என்பதனை மாயமானின் குரலால் மயங்கி இளவலிடம் சீறிய சீதைக்கு மறுமொழி கூறி விடைபெறுமிடத்தில், 'அடியனேன் ஏகுகின்றனென்; வெஞ்சின விதியினை வெல்ல வல்லமோ' (3333) என இலக்குவன் கூறுவதிலும் புலப்படுகின்றது.

விதியின் வன்மையும் ஆற்றலும், இயற்கையிலும் மாந்தரிடமும், செலவும் செல்வாக்கும் கொண்டு அமைகின்றன. இதனால் எதிர்பாராத பல செயல்கள், தீமைகள் நிகழ்ந்துவிடுகின்றன. காரண காரியம் கற்பிக்க இயலாத அளவுக்கு நிகழ்வுகள் ஏற்படுகின்றன. எதிர்பாராதவரிடமிருந்து, ஆய்ந்தும் சிந்தித்தும் முயன்றும் தெரிந்து கொள்ள முடியாத நிலையில் அமையும் இத் திருப்பங்களை விதியின் செயலாக முடிவு செய்கிறோம். தடுக்க முடியாத, முயன்றும் வெற்றி பெறாத, மாற்ற முடியாத இச் செயற்பாடுகளை நியாயப்படுத்த நமக்கு அப்பாற்பட்ட ஒரு பேராற்றலினை ஆக்கி, விதி எனப் பெயரிடுகின்றோம். இயல்பு நிலைக்கு வேறுபட்டுத் தீமையுறும்போது விதியை நோதல்போல, எதிர்பாரா நன்மை ஏற்படும்போதும் விதியை வியக்கின்றோம். தீமையால் உழலாது, துன்பத்தால் வருந்தாது, நன்மையால் மகிழாது, இன்பத்தால் திளைக்காது, அடங்கிய மனநிலைக்கு மனிதனைச் செயற்படுத்தி இறைமைக்கு நேராக நெறிப்படுத்த இவ்விதியும் ஒரு கருவியாக உருவாகியுள்ளமையை சமயமும் சமய நம்பிக்கையும் புலப்படுத்துகின்றன.

கூனியின் சூழ்ச்சியால், கைகேயியின் சூழ்வினையால் இராமனுக்கு முடியில்லை என அறிந்து சினந்து சீறி நாணொலி எழுப்பிய இளவலை அமைதிப்படுத்தும் இராமன் உரையில் இவ் விதிபற்றிய எண்ணங்களை இயைக்கின்றான் கம்பன். எத் தீமைக்கும் தீயநிகழ்வுக்கும் ஒன்றையோ, ஒருவரையோ பழிகூறி விடலாம்; ஆனால் அப்பிழை அல்லது குறை அவ் ஒன்றாலன்றி விதியினைத் தடுக்கவும் மாற்றவும் இயலாத ஆற்றலால் நிகழ்ந்ததாகவும் இருக்கலாம்; விதியின் இப்பெருவன்மையை உணருமிடத்துப் பிறரைப் பழிகூறும் உணர்வு மாய்ந்து ஒழிகின்றது. வரம் அளித்த தசரதனோ, வரம் கேட்ட கைகேயியோ, அரசு பெற்ற பரதனோ அன்றி, விதியே செயல்படுகின்றது; நீரின்மை நதியின் குற்றமன்றாதல் போல இராமன் முடியிழத்தலும் இவர் குற்றமன்று என்பது உணர்த்த விதி பற்றிய கோட்பாடு இடமளிக்கின்றது.

நதியின் பிழை அன்று நறும் புனல் இன்மை, அற்றே
பதியின் பிழை அன்று, பயந்து நமைப் புரந்தாள்
மதியின் பிழை அன்று, மகன் பிழை அன்று, மைந்த,
விதியின் பிழை, நீ இதற்கு என்னை வெகுண்டது என்றான்
(1734)

விதி என்பது நம் அடக்கி ஆளலுக்கு அப்பாற்பட்ட ஒன்று எனும் இங்குப் புலப்படும் கருத்து, இலக்குவனால் எதிர்க்கப் படுகின்றது. வில்லாற்றலால் எல்லாம் ஆகும் எனும் செயற் பாட்டு நம்பிக்கையில் வெளிப்பட்டதாக இம்முரண் அமை கின்றது. செயலும் முயற்சியும் விதியை வெல்ல முடியும் எனவும் விதியை விதிக்கும் புதுமைபயக்க முடியும் எனவும் இளவல் எண்ணம் அமைகின்றது. இராமன் கூறிய அறிவுரைக்கு உடன் படாது, 'கோள் இழைத்தாள் மதிக்கும் மதி ஆய், முதல் வானவர்க்கும் வலீஇது ஆம் விதிக்கும் விதி ஆகும்; என் வில் தொழில் காண்டி' (1735) என மறுத்து உரைக்கும் இடம் இக் கருத்து வெளிப்பாட்டை அளிக்கின்றது. ஆயின் உணர்ச்சிப் பொங்கலில் கொப்பளித்த இவ் எண்ணம் பின்பு மாறிவிட்டதை அவனது, 'வெஞ்சின விதியினை வெல்ல வல்லமோ' (3333) எனும் உரை காட்டுகின்றது. விதிவயப்பட்ட கதையையே கவிஞன் படைத்தலால், அதை எதிர்த்தலும், எதிர்க்க முயலுதலும் இன்றியே காப்பியம் அமைந்துவிடுகின்றது.

முயற்சியால் விதியைப் புறங்காண முடியும் என்ற உலகியல் நம்பிக்கை போன்றே, அறிவாற்றலால் விதியை வெல்ல இயலும் என்ற அறவியல் நம்பிக்கையும் உலகியலில் அமைகின்றன. ஆயின் கம்பன் கதைச்சூழலால் இதனை ஏற்காமையைக் காண்கின்றோம். அரக்கனின் சூழ்ச்சியால் சீதையை இழந்து நின்ற இராமனையும் இளவலையும் ஆறுதல் படுத்தும் சடாயுவின் உரையில் மதிலியால் வெல்லலாக விதிநிலையைக் கவிஞன் வெளிப்படுத்துகின்றான்.

அதிசயம் ஒருவரால் அமைக்கல் ஆகுமோ
துதி அறு பிறவியின் இன்ப துன்பம் தான்
விதி வயம் என்பதை மேற்கொள்ளா விடின்
மதி வலியால் விதி வெல்ல வல்லமோ (3508)

சடாயு மைந்தர்க்குக் கூறிய இவ் ஆறுதல் மொழி, உலகியலில்
சடாயு மைந்தர்க்குக் கூறிய இவ் ஆறுதல் மொழி, உலகியலில்
துன்பப்படும் மக்கட்கு ஏற்ற ஆறுதல் மொழியாகவும் அமை

கின்றது. துன்பமும் இன்பமும் வரும்போது அவற்றை விலக்கும் வன்மை மனிதனுக்கு இல்லை. ஏற்கெனவே குறிக்கப்படாதிருந்தால் எந்தப் புதுமையும் மனிதன் செய்யமுடியாது. துன்பம் கண்டு நெஞ்சு வருந்தி அமைவது அறியாமை; விதியின் வன்மையை ஏற்றுக் கொள்ளும்போது, அது சுமையாகித் துன்பம் மிகுவிக்காது அமையும்; மேற்செல்லும் பணியின்பால் ஈடுபாடு கொண்டு துவண்டுவிடாதிருக்க உதவும் என தன்னுற்ற அறமும் தேவர் துயருமே விதியாகியமையைச் சடாயு வாய்மொழி உணர்த்துகின்றது (3509-14).

ஆக்குவதும், அழிப்பதும், செயற்படுத்துவதும் இவ்விதியே என்ற நிலையில் இது இறைமையை மிக நெருங்கிச் செல்கின்றது. மனித வாழ்க்கையில் விதியே ஒளிச்சுடராக அமைகின்றது. விதி மனித வாழ்க்கையில் ஆட்சி செலுத்துவதையும் செயற்படுவதையும் காட்டி, காலமும், மனிதன் செய்யும் பாவபுண்ணியமும் உதவுகின்றன. தசரதன் பிரிவால் துயருறும் இராமனுக்கு வசிட்ட முனிவர் கூறும் தேறுதல் மொழிகளில் விதியின் இவ் வாழ்வியல் தொடர்பினைப் படைத்தளிக்கின்றான் கவிஞன். வாழ்வில் செய்த நற்செயல்களே புண்ணிய நறுநெய்யாகின்றன; யாருக்காகவும் நிற்காத-செயற்பட்டுக்கொண்டே இருக்கின்ற-எதிர்த்து வெல்ல இயலாத காலமே வாழ்வு எனும் விளைக்கின் திரியாக அமைகின்றது. இந்நெய்யையும் திரியையும் தன் ஆட்சிக்கு உட்படுத்தி அமைகின்றது விதி எனும் நெருப்பு. காலத்திரி தீர்ந்து புண்ணிய நெய் வற்றும்போதுதான் விதி மனித வாழ்வை விட்டுநீங்குகின்றது. அது வரை ஆட்சி செய்த அவ்வொளிச்சுடர் வாழ்வை விளக்கம் ஆக்குகின்றது.

புண்ணிய நறு நெயில், பொரு இல் காலம் ஆம்
திண்ணிய திரியினில், விதி என் தீயினில்
எண்ணிய விளக்கு அவை இரண்டு எஞ்சினால்,
அண்ணலே, அவிவதற்கு ஐயம் யாவதோ (2449)

விதியோடு ஓரளவு தொடர்புற்றே வினை பற்றிய எண்ணங்கள் அமைகின்றன. ஆயின் விதி, காரண காரியத் தொடர்பு காட்டாது அமைய, வினை அது காட்டி நிற்கின்றது. ஏற்கெனவே நிச்சயிக்கப்பட்ட நெறிவழிச் செல்வதாக விதி அமைய, செய்யும் நன்மையும் தீமையுமான செயல்கள்-தொழில்கள் பற்றி வினை அமைகின்றது. தீய செயல் செய்தார்

தீமையுறலும், நற்செயல் புரிந்தார் நன்மை அடைதலும் வினையின்பாற் படுகின்றது. இவ்வாறு செயல்-பயன் எனக் காரண காரியத் தொடர்பு காட்டமுடியாதபோதே விதிபற்றிய கோட்பாடு உருவாகின்றது.

இப்பிறப்பின் செயலால், இம்மையிலேயே நன்மையோ தீமையோ ஆன பயன் விளைவது வினை என்றும், ஒரு பிறப்பின் செயலின் நன்மை-தீமைப் பலன்கள் மறு அல்லது பிறிதொரு பிறவியில் அமைதல் ஊழ் எனவும் பிரித்துக்காண முயலுவதுண்டு. இந்நிலையில் ஊழ், பிறவித்தொடர்பு காட்ட முடியாத சூழலில் விதியோடு ஓரளவு ஒத்து அமைகின்றது. ஊழின் செயற்பாட்டை, 'ஊழ்வினை' என்பதால் உணர்த்தி, விதியைப் போன்றே இதுவும் வெல்லற்கும், வேறுபடுத்தற்கும் அரியது என்ற முடிவுக்கு வருகின்றனர் உலகோர்.

நன்முடி சூடத் தயாரான இராமன், திடீர்த் திருப்பத்தால் முடியிழந்து கானேகும் சூழல் ஏற்பட்டபோது, வசிட்டனின் வறுத்தமுறும் சிந்தனையாக இவ் உலகோர் எண்ணத்தைப் புலப்படுத்துகின்றான் கம்பன். விதியையே விதிக்கும் இயற்றும் ஆற்றலுடை நான்முகனாலும், ஒழிக்க ஒல்லாததாக இங்கு ஊழ்வினை சுட்டப்படுகின்றது.

வாழ்வினை நுதலிய மங்கலத்து நாள்
தாழ் வினை அது வர, சீரை சாத்தினான்
சூழ் வினை நான்முகத்து ஒருவன் சூழினும்
ஊழ்வினை ஒருவரால் ஒழிக்கற் பாலதோ (1764)

வாழ்வுக்குரிய செயல்கள் வகுக்கப்பட்ட அன்றே, எவ்வித முன் எச்சரிக்கையும் இன்றித் தாழ்வுக்கு நேரான செயல்கள் ஏற்பட்ட முழுமாற்ற நிலையில் வெளிப்படும் இவ் ஊழ்வலியை, 'வினை' என்ற சொல்லால் மட்டுமே உணர்த்தலும் தொடர்ந்து வசிட்டன் உரையில் அமைகின்றது. ஒருவர் இழைத்த தீமை பிறிதொருவரிடம் வந்து கட்டிய நிலையில் இச் சொல்லாட்சி பொருத்தமுடையதாகக் கருதலாம் (1765).

முன் இழைத்த தீமையால், அறியாமைச் செயலால் பின் வந்த தீப்பயனைத் தொடர்புபடுத்தி விளக்குமிடத்து இவ் வினை பற்றிய எண்ணங்கள் புலப்படுகின்றன. செய்த செயலின் வினைப்பயன் வந்து உறுதல் தவறாது என்பதனை இராமன் பிரிவால் உயிரிழந்த தசரதன் நிலை காட்டுகின்றது. கண்ணால் காணாது, ஒலிமேல் சென்ற கணையால் முனி மகன் இறந்தது

ஊழாக அமைந்தபோதும் (1682), அச் செயலால் பெற்ற சாபம் விளைந்து, ஒத்த தீது பயந்தபோது, வினையின் செயற்பாடு புலப்படுகின்றது.

இவ்வாறே, இராமன் கான் ஏகல் 'விதி'யாகக் காட்டப்பட்ட போதும், குழந்தைப் பருவத்தில் அவன் உண்டை எறிந்து கூனிக்கு இழைத்த தீமையே பின் நிகழ்வில் விளைகின்றது. சுக்கிரீவனுக்கு இராமன் உணர்த்தும் நல்லரசில் தன் வினை தன்னைச் சுடும் இச்செயல் காகுத்தன் வாயிலாகவே வெளிப்படுவது இவ் எண்ணத்தைத் தருகின்றது.

சிறியர் என்று இகழ்ந்து நோவு செய்வன செய்யல்;
மற்றுஇந்
நெறி இகழ்ந்து யான் ஓர் தீமை இழைத்தலால்,
உணர்ச்சி நீண்டு
குறியது ஆம் மேனி ஆய கூனியால், குவவுத் தோளாய்
வெறியன எய்தி, நொய்தின் வெந் துயர்க் கடலில்
வீழ்ந்தேன் (4126)

இவ்வினை விளைவும் விதிபற்றிய நம்பிக்கையும், இன்னும் பிற பல நம்பிக்கைகளுக்கும் கோட்பாடுகளுக்கும் மக்கள் உள்ளத்தை இட்டுச் செல்கின்றன.

நல்வினையாயினும், தீவினையாயினும் அதன் பயனை அனுபவித்து முடியாவிடின் பிறப்பு உறும் என்பதில் பிறவி பற்றிய நம்பிக்கை தொடர்கின்றது. இருவினையும் அறுத்தவரே வான் உலகு எய்துவர் என்பதனைச் சரபங்கன் பிறப்பு நீக்கம் காட்டுகின்றது. தீப்புக்கு வீடுபெறும் முயற்சியில் ஈடுபட்ட சரபங்கன், இராமனுக்குக் கூறும் உரையில், 'போயின இருவினை, இனி ஒரு வினை இலை' (2626) எனல் இதனை விளக்குகின்றது.

தொல்வினையும் பிறப்பும் தொடர்புறுகின்றன. இலக்குவன், தனக்கு இப்பிறவியும் இதன் துன்பங்களும் ஏற்பட்டது வினையால்போலும் எனக் கருதுமிடத்து இவ் உலகியல் நம்பிக்கையைப் புலப்படுத்துகின்றான் கம்பன். சீதையின் சினத் துரைக்கு இலக்காகி, மாயமானின் குரல்வழி இராமனைத் தேடிப் புறப்படுகின்ற இலக்குவன், தன் நெஞ்சுடன் வருந்தி, 'தொல் வினைப் பிறந்து போந்து இது படும் பேதையேன்' (3336) என நொந்துரைத்தலாக இது அமைகின்றது.

இறை அவதாரமான இராமனிலும் இவ் உலகியல் உணர்வைப பொருத்திக் காட்டுகின்றான் தத்துவக் கவிஞன். 'ஆக்கமும் கேடும் தாம் செய் அறத்தொடு பாவம் ஆய், (4130)

என்று உணர்ந்த இராமன், இதனையும் சுக்கிரீவனுக்கு நல்லரசு உணர்த்துமிடத்தில் சுட்டுகின்றான். செய்தவினை காரணமாகப் பிறப்பு அமைகின்றது; வினை முடிவே பிறப்பின் முடிவாகிப் பிறப்பறுத்தல் வழிப் பிறவாமைக்கு வாயில் ஆகின்றது.

இறத்தலும் பிறத்தல் தானும் என்பன இரண்டும், யாண்டும்
திறத்துளி நோக்கின், செய்த வினை தரத் தெரிந்த அன்றே
புறத்து இனி உரைப்பது என்னே, பூவின் மேல் புனிதற்
கேனும்
அறத்தினது இறுதி, வாழ்நாட்கு இறுதி; அஃது உறுதி,
அன்ப (4129)

இறக்கும் உயிர்கள் மீண்டும் பிறக்கும் இயல்பை, மாலையில் மறைந்து மீண்டும் காலையில் எழுந்து தோன்றும் கதிரவனிலும் காண்கின்றான் கம்பன் (1976). வரம்பு இன்றித் தோன்றும் எண்ணற்ற மாக்கள் இறத்தலும் பிறத்தலும், பிறத்தலும் இறத்தலும் எனப் பல்பிறவி எடுத்து உழல்கின்றனர்.

இறத்தலும் பிறத்தலும் இயற்கை (2444) என்ற போதும், அறத்துறை வழி நிற்றலும் துறவுமேற் கொள்ளலுமே இப் பிறவி உழற்சியை ஒழிக்கும் இயல்பின என்ற உலகக்கோட்பாடும் அமைகின்றது. துறவே தெப்பமாகிப் பிறவிக்கடல் கடக்கும் வன்மையும் ஆற்றலும் இல்லாத உயிர்கள் உண்மையில்லாப் பிறவிகளாக அமைகின்றன. இக்கோடிக்கணக்கான உயிர்கள் கண்ணோட்டம் இல்லாக் கூற்றுக்கு இரையாகின்றன (2445).

இறப்புப் பற்றிய இத்தகு எண்ணங்களைச் சார்ந்து மீண்டும் பிறப்பெடுக்கும் மறுபிறவி பற்றிய கருத்துகள் அமைதல். போன்று மறுமை பற்றிய சிந்தனைகளும் அமைகின்றன. இறப்புக்குப் பிந்தைய நிலை என்ன எனும் கேள்வி எழுப்பிய ஆய்வில், மீண்டும் பிறப்பு என்பதும் மறுமை வாழ்வு என்பதும் இருவகை முடிவுநிலையாக அமைகின்றன. மீண்டும் இவ்வுலகில் பிறத்தல் என்பது முன்னதிலும், பிறவி இன்றித் துறக்கம்-நரகம் போன்ற மறுவுலகு செல்லல் என்பது பின்னதிலும் பொருந்து கின்றன.

மறுமை எய்தாதவர் பிறப்பர்; பிறப்பு நீங்கியவர் மறுமை அடைவர் எனும் உலகோரின் நம்பிக்கை வயப்பட்ட எண்ணத்தைக் கம்பனும் தருகின்றான். பிறப்பற்ற தூய

நிலையில் மறுமையாகத் துறக்கம் எய்தலைக் காலைக்கதிரவன் வருணனை அமைக்குமிடத்து வியப்புமொழியாகச் சுட்டு கின்றான்.

துறக்கமே முதல ஆய தூயன யாவை யேனும்
மறக்குமா நினையல் அம்மா, வரம்பு இலதோற்றும் மாக்கள்
இறக்குமாறு இது என்பான் போல் முன்னை நாள் இறந்தான் பின்நாள்
பிறக்குமாறு இது என்பான் போல் பிறந்தனன், பிறவா வெய்யோன் (1976)

துறக்கம் எத்துணை தூய்மையுடைய தேனும், அதனை மறக்கும் படி பிறப்புப் பற்றிய நினைவுகள் உலகில் நிறைந்து அமை கின்றன. நல்லோர் எய்தும் இத்துறக்க நிலையைத் தசரதன் மறைவுக்குப்பின் வசிட்டன் உரையில் அமைக்கின்றான் கவிஞன். 'புண்டரீகத் தனி முதற்கும் போக்கு அரு விண்டுவின் உலகிடை விளங்கினான் அரோ' (2451) எனத் தசரதனின் மறுமை வாழ்வின் உயர்வும் சிறப்பும் புலப்படுத்தப்படுகின்றது.

தீயிடைப் புக்குத் தன் தூய்மை நிறுவும் சீதையைக் காட்டு மிடத்திலும், தசரதனின் துறக்க வாழ்வு சுட்டப்படுகின்றது. இராமனைத் தெருட்டுமாறு துறக்கத்திலுள்ள தசரதனுக்குச் சிவபெருமான் பணித்தலைப்பாடுமிடத்துக்கம்பன் இம் மறுமை நிலை உணர்த்துகின்றான். 'பெருந்தகைப் புதல்வனைப் பிரிந்த இன்னலால் உயிர் துறந்து,இருந் துறக்கத்துள் இருந்த மன்னவன்' (10065) எனத் தசரதன் சுட்டப்படுகின்றான்.

நன்மையுற்றோர் துறக்கம் எய்தி இன்புறும் இந்நம்பிக்கை வயப்பட்ட கோட்பாடு போன்றே, தீயோர் - வெவ்வினைப் பட்டோர்-நல்லோ ரல்லாதோர் நரகத்தில் ஆழ்தலும் தொடர் புடைக் கோட்பாடாக வெளிப்படுகின்றது. மறுபிறவி வினையாலாயது என்பது போன்றே இந்நரகமும் வினை வயப் பட்டதாகக் கருதப்படுகின்றது.

இவ் உலகத்தினும் இடருளே கிடந்து
அவ் உலகத்தினும் நரகின் ஆழ்ந்து பின்
வெவ் வினை துய்ப்பன விரிந்த யோனிகள்
எவ் அளவில் செல் எண்ணல் ஆகுமோ (2450)

பல்வகைப் பிறப்பு வகைகளும் (யோனிகள்), இவ்வுலகத்தில் உறும் துன்பமுடை வாழ்வும், மறுமையின் நரகமும் தீவினையின் தொடர்ச்சி காட்டி அமைகின்றன.

வினை நீக்கும் இறைமையை, இராமனின் கால் கரம் தீண்டலாலும் பிறவற்றாலும் சாபநீக்கம் பெறும் அகலிகை, கவந்தன், விராதன் போன்றவரின் வழித் தெளியலாம். பிறப்பறுக்கும் பெற்றியை இறைமை அருளலைச் சபரி, சரபங்கன் போன்றோர் காத்திருந்து இராமனைக் கண்டு மறுமை எய்துதலில் புலப்படுவதாகக் கொள்ளலாம். விதிவகுக்கும் அவ் இறையே விதிநெறிப் பட்டு மனிதனாகி விதிவழிச் சென்று வினையறுக்கும் பாங்கில், விதியினும் வலிய இறைமை புலப்படுவதாகத் தெரிகின்றது. காணற்கும் காட்டற்கும் அரிய பல வெளிப்பாட்டுநிலையைத் தொடர்புடைய இவையனைத்தும் புலப்படுத்தி நிற்கின்றன.

# நிறைவுரை

கம்பன் காப்பியம் எங்கும் கற்பனை விரவியது போன்றே உலகியலும் கலந்து தருகின்றான். கற்பனையின் பல்வகைக் கோணங்களையும் கோலங்களையும் காட்டியது போன்று உலகியலின் பல்நிலைக் கொள்கைகளையும் இயல்புகளையும் காட்டுகின்றான். நன்மையும் தீமையும் விரவிய பல்நெறிப் பட்ட உலகை அவன் கண்முன் படைத்துக் காட்டியபோதும், அறம்வெல்லும் மறம் வீழும் எனும் காப்பிய முடிவுக்கேற்ப, கற்போரை நன்மைக்கு நேராகவே வழிப்படுத்துகின்றான். தயரதனைப் போன்ற தந்தையாகவும், இலக்குவன் போன்ற தம்பியாகவும், கும்பகருணனைப் போன்ற அண்ணன் தம்பியாகவும், குகனைப் போன்ற நண்பனாகவும், அனுமன் போன்ற ஆருயிர்த் தொண்டனாகவும், கோசலை போன்ற தாயாகவும், மண்டோதரி போன்ற மனைவியாகவும் -வாழக் கற்றுத்தருவதே கம்பன் காட்டும் உலகியல் என்று கூறலாம்.

கம்பன் காவியத்தில் நீக்கமற நிறைந்திருக்கும் இறைமை போன்று எங்கும் உலகியல் எண்ணங்கள் தென்படுகின்றன. பல்முகநோக்குடன் அமையும் இவ் உலகியல் சிந்தனைகள் பகுத்து ஆய்ந்தாலும், வகுத்துக் கற்றாலும் மிகப் பல நூலாகி விரியும் இயல்பினவாய் அமைகின்றன. 'வாசகம் வல்லார் முன் நின்று யாவர் வாய் திறக்க வல்லார்' (895) என்றும், 'புதியன கண்ட போழ்து விடுவரோ புதுமை பார்ப்பார்' (899) என்றும், 'உறும் போகம் எல்லாம் நலன் உள்வழி உண்பர் அன்றே' (901) என்றும் கூறுவதற்கேற்ப, கம்பனுக்கு உலகியலும், நமக்கு அவன் படைப் பியலும் அமைகின்றன.

எறி கடல் ஞாலம் தன்னுள் இன் தமிழ்ப் புலவர்க்கு எல்லாம்
முறுவலுக்கு உரியவாக முயன்றனம் இயன்ற எம் சொல்
சிறுமையே நோக்கார் தங்கள் பெருமையே சிந்தை செய்யும்
அறிவுடை மாந்தர்க்கு எல்லாம் அடைக்கலம் ஆக வாழி

(மிகை. 1291)

## பாடற் முதற் குறிப்பகராதி

(என் — பக்க எண்)

## சொல்லகராதி

(எண் — பக்க எண்)

